KALKI
17.4.2005
ரூ.6.00

# கல்கி

சினிமா ஸ்பெஷல்!

அதிக பக்கங்கள்

புத்தாண்டுச் சிறப்பிதழ்

தில் பதில்கள்



ஜில் காதல்



ஜாலி 500!



கலர் கனவு!





## காதல் டிக் டிக்!

– அர்ச்சனா

கதை காதல் மருத்துவம்

24 8 108

3

புதிய பகுதிகள் ஆரம்பம்

பா.ஜ.க.25!

சாதனையா, வேதனையா? 4-6

தமிழ்ப் புத்தாண்டு பலன்கள்–92

நிறைய சினிமா!

நிறைய்ய இளமை!

அங்கங்கே ஜோக்ஸ்!



கல்கி

17.4.2005

## வட்டமேஜை



✉ தலையங்கத்தில் ஒரு தேற்றம் போல் ஆய்வு செய்து எழுதியிருக்கிறீர். மோடி மோசமானவர் என்பதும், அமெரிக்காவும் ஒன்றும் அதற்குக் குறைவில்லை என்றும் எடுத்துக்காட்டுடன் வெளிப்படுத்தியுள்ளீர். இதற்காக வாதாட வேண்டிய நிர்ப்பந்தத்தில் இந்தியா இருப்பது வருத்தப்பட வேண்டிய விஷயம் தான்.
திருவண்ணாமலை,
பூசீனிவாசன்

✉ ஈரான் கலவரத்துக்குப் பிறகு நடந்த தேர்தலில், மோடி மக்களிடம் சென்று ஜனநாயக முறைப்படி வோட்டு வாங்கியே பதவியில் அமர்ந்துள்ளார். இதை 'கல்கி' மறந்து விட்டு, பா.ஜ.க. தலைமையை விமர்சிப்பது தவறானது.
சென்னை, ஆர்.நாகராஜன்

✉ மைக்ரோ வேவ் மாமிக்கு அமெரிக்க அழைப்பா! பலே... டாட்டா மாமி! அங்கிருந்தும் செய்தி அனுப்புங்க.
சென்னை, கவிஞர் அய்யாறு வாசுதேவன்

✉ 'கூல் ஸ்பெஷல்!' ஜில் லுன்னு ஜோரா மேங்கோ ரோஸ் ஷேக் குடித்ததைப் போல குளிர்ச்சியாய் இருந்ததுங்க. பக்கங்கள் அம்புட்டும் ஏ/சி தானுங்க.
லோயர் அணைக்கட்டு, பி.இராஜேந்திரன்

✉ அறிவுக் களஞ்சியமாக இருந்த தென்கச்சி சுவாமிநாதனின் 'தெம்புக்கு படிங்க' பகுதிக்கு இத்தனை விரைவாகவா முற்றும் போடுவது!
ரஞ்சனிப்ரியன், பள்ளிபாளையம்

✉ பிள்ளையாரின் பெருமைகளை வாரா வாரம் வழங்கிவந்த 'எங்க ஊர் பிள்ளையார்' பகுதியை, இவ்வளவு சீக்கிரத்தில் முற்றுப்பெற செய்த உம்மை தோப்புக்கரணம் போட வைக்கணும்யா!
வேலூர், வே.ந.கதிர்வேல்




# போடுங்க தோப்புக்கரணம்!

✉ வி.ஐ.பி.கள் தங்களின் உள்ளம் கவர்ந்தவர்களைப் பற்றி வெளிப்படையாகத் தெரிவித்த 'விசிறிக்கிறாங்க' பகுதி, நீரில் நனைத்த விசிறியால் விசிறிக் கொண்டதைப் போல குளிர்ச்சியாக இருந்தது.
நெய்வேலி,
எஸ்.கண்ணன்

✉ மனவியலறிந்த மாணிக்கம் எதிர் மனதைவென்று லாபமீட்டிய பான்மை... நெஞ்சைத் தொட்டது. 'மனசு' மினி கதை படைத்த கு.அ.வுக்கு பாராட்டுகள் பல!
கோவில்பட்டி, ஆதி.கேசவன்

✉ 'லண்டன்' திரைப்பட விமர்சனத்தை வித்தியாசமான கோணத்தில் வழங்கியிருந்த விஷ்ணுவல்தாசனுக்கு, கல்கி வாசகர்கள் சார்பாக ஜில்... ஜில்... ஜிகிர்தண்டா தருகிறோம்.
திருவாரூர், ஆர்.ராமசுப்ரமணி

✉ ராமதாஸ் தமது பேட்டியில் 'கல்கியின் ஸ்தாபகர்கள் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபட்டவர்கள். அப்படியிருக்க எங்களை ஊக்கப்படுத்தும் பொறுப்பு உங்களுக்கு இருக்கிறது' எனச் சம்பந்தா சம்பந்தம்

இல்லாமல் கல்கி நிறுவனர்களைச் சாட்சிக்கு இழுத்திருக்கிறார். அவர்கள் ராமதாஸைப் போல பிள்ளைகளை ரெஸிடென்ஷியல் கான்வென்டுகளில் ஆங்கிலக் கல்வி படிக்க வைத்து விட்டு, ஊருக்கு மட்டும் தமிழ் வழிக் கல்வியை உபதேசிக்கவில்லையே. அவர்களது தமிழ்ப்பற்று உளப்பூர்வமானது. உண்மையான ஈடுபாடு கொண்டது. இராஜாஜி உட்பட எவருமே அரசியல் லாபத்துக்காகவோ, சுய தம்பட்டத்துக்காகவோ அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லையே!

திருநெல்வேலி, வெ. கல்யாணி

✉ ரத்னா ஃபேன் ஹவுஸ் உரிமையாளர் வெளியிட்டுள்ள தகவலில், விண்டோ ஏஸியைவிட ஸ்பிளிட் ஏஸிதான் சிறந்தது என்று சொல்லியிருக்கிறார்.

1. ஸ்பிளிட் ஏசியில் 2 மோட்டார்கள் (ப்ளோயர் மோட்டார், கன்டென்சர் மோட்டார்) இருப்பதால் மின்சக்தி விண்டோ ஏசியை உபயோகிப்பதை விடவும் அதிகம்.

2. பராமரிப்பு, பழுது பார்க்கும் செலவும் ஸ்பிளிட் ஏசிக்கு அதிகம்.

3. விண்டோ ஏசியிலும் கூலிங் உடனே கிடைப்பதுடன், பரவலாகவும் நிச்சயம் இருக்கும். ஏசியை கட்டிலுக்கு மேற்பக்கம் வருமாறு பொருத்த வேண்டும்.

4. வீடுகளும், ஃப்ளாட்களும் தற்போது 'விண்டோ ஏசிக்கு' ப்ரொவிஷன் கொடுத்தே கட்டப்படுகின்றன. ஜன்னல்கள் இல்லாத மிக நெருக்கமான ஃப்ளாட்களில் மட்டுமே 'ஸ்பிளிட் ஏசி' மாட்டப்படுகிறது.

சென்னை, ஜி. பாலு

✉ 'அந்த நாள் ஞாபகம்' கட்டுரையில், எம்.ஜி.ஆர். பற்றி ஏவி.எம்.' சரவணன் கூறிய விஷயங்கள் எப்பொழுதும் புதுமை, இளமை, அருமை எம்.ஜி.ஆரைப் போலவே!

தூத்துக்குடி, முகவை ஆர்.ராஜகோபால்

## வாரம் ஒரு வாசகர்!

வட்டமேஜையில் 'வாரம் ஒரு வாசகர்' என சிறப்பிக்க ஆரம்பித்தீர்களே என ஆவலுடன் தேடி ஏமாந்தேன். தொடர்ந்து வெளியிட்டு வாழ்த்துங்கள் சார்.

நெய்வேலி,
ப. உத்தண்டராமன்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



# பா.ஜ.க-25!

**வெள்ளிவிழா கொண்டாடும் பாரதிய ஜனதா கட்சியைப் பற்றிய நான்கு பிரமுகர்களின் பார்வை.**

**ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்** *(மத்திய தொழில் துறை இணை அமைச்சர்)* : 'Old wine in new bottle' என்று சொல்வார்களே, அதுதான் இன்றைய பா.ஜ.க. இந்துமகா சபை. ஆர்.எஸ்.எஸ்., ஜனசங்கம், பா.ஜ.க. என்று அது சுவாசிப்பது 'அடிப்படை வாத'க் கொள்கையைத்தான். இன்று அரசியலுக்காக பா.ஜ.க. என்றும், அதன் உள்ளார்ந்த லட்சியங்களைச் செயல்படுத்த தனியே ஆர்.எஸ்.எஸ். என்றும் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். வாஜ்பாயே கூட அமெரிக்காவில் பேசும் போது, "முதலில் நான் ஒரு ஸ்வயம் சேவக்" என்று தானே சொன்னார்? வேப்பமரம் எப்படித் தன் கசப்புத் தன்மையை என்றும் இழக்காதோ, அதே போன்று இந்த ஆர்.எஸ்.எஸ்., பா.ஜ.க. இந்துத்வா கும்பலும் அடிப் படைவாதத்தையும், மதவெறியையும் பொத்திப் பாதுகாக் கும். இந்த விபரீத சக்தியை தேசிய அளவில் முறியடித்து, முடக்கி வைக்கும் சக்தி சோனியா காந்தி தலைமையில் இயங்கும் காங்கிரஸுக்கு மட்டுமே உண்டு.



நமது நாட்டின் கலாசார தொன்மையை, வரலாற்றை சகல விதத்திலும் மாற்றி எழுதி பதிவுகளை உண்டாக்க நினைத்த இவர்களின் தந்திரத்தை, ஐக்கிய முன்னணி அரசு முறியடித்து விட்டது. காந்தி பிறந்த மண்ணான குஜராத்தில் மோடி ஆடிய பேயாட்டம் மறக்க முடியுமா? இன்று அந்த மக்கள் தாங்கள் செய்த தவறை உணர்ந்து மோடிக்குப் பாடம் கற்பிக்கத் தயாராகிவிட்டார்கள். சோனியா காந்தி தலைமை யில் இயங்கும் காங்கிரஸ் பேரியக்கம் முழு மூச்சுடன்

- "நக்கீரன் பாணி கட்சி!"

பணியாற்றி நாட்டின் ஒற்றுமையையும், ஒருமைப் பாட்டையும் பேணிக் காக்கும்.

**ஆர். நல்லகண்ணு** *(வலது கம்யூனிஸ்ட் மாநிலச் செயலாளர்)* : நம் நாடு பாரம்பரியமாகவே ஒரு பன்முக நாடு. வேற்றுமையில் ஒற்றுமையே நமது பலம். அதற்கு வேட்டு வைக்க முயற்சி செய்யும் கட்சிதான் பா.ஜ.க. மத ஒற்றுமைக்கும், சகிப்புத் தன்மைக்கும் ஊறு விளைவிக்கும் சக்தியாக இருக்கிறது இக்கட்சி நமது நாட்டில் பெரும்பகுதி மக்களுக்குக் கடவுள் பக்தி உண்டே தவிர, மதவெறி கிடையாது. ஆனால் வோட்டு வங்கியை மனத்தில் வைத்து அந்த வெறியை வளர்க்கிறது பா.ஜ.க. நமது நாட்டில் காலம் காலமாக மதக் கலவரங்கள் நடந்து வந்தாலும், அதை அரசியல் ஆதாயமாக மாற்றியது பா.ஜ.க.தான்.

பா.ஜ.க கட்சியில் பெரிய பிளவுகள் ஏற்படவில்லை என்பதெல்லாம் மாயை. மற்ற சில கட்சிகளைப் போல அதிலும் கோஷ்டிப் பூசல்கள் ஏராளம். உத்தரபிரதேசத்தில் குஜராத்தில் கூட கட்சியில் பிளவு ஏற்பட்டு தனிக்கட்சி தொடங்கினார்கள். இன்று கர்நாடகத்தில் பங்காரப்பா, பா.ஜவின் உண்மைத் தோற்றத்தை உணர்ந்து விலகி விட்டார்.

பொருளாதார நோக்கில் பார்த்தால் கூட காங்கிரஸ் துவக்கி வைத்த உலகமயமாக்கல், தாராளமயமாக்கல் போன்றவற்றை முழுமனத்துடன் செயல்படுத்தியதுதான் பா.ஜ.க. எப்போதுமே அதற்கு இரண்டு முகங்கள் உண்டு. ஒரு பக்கம் சுதேசித் தொழில்கள், கிராமப் பொருளாதாரம் என்று பேசிக் கொண்டிருப்பார்கள். மறுபக்கம் பன்னாட்டு ஏகபோக நிறுவனங்களுக்குப் பாதை போட்டுக் கொடுப்பார்கள். வாஜ்பாயின் ஆட்சியின் போதுதான் என்ரான் நிறுவனம் இந்தியாவில் காலூன்றியது. அரசியல் ரீதியாகவும் அதற்கு இரண்டு முகங்கள். சமீபத்தில் ஆர்.எஸ்.எஸ். தலைவர் சுதர்ஸன், கம்யூனிஸ்டுகளை முறியடிக்க, கேரளாவில் போன சட்டமன்றத் தேர்தலில் காங்கிரஸுக்காக உழைத்தோம் என்று சொல்லியிருக்கிறார். அதே போல மத்தியில் ஆட்சியைப் பிடிக்க மதச்சார்பற்ற சக்திகளின் துணை தேவையென்



• "இரட்டை வேடம்!"



• "விபரீத சக்தி!"



• "குளிர் காயும் தந்திரம்!"

# சாதனையா, வேதனையா?

றால், சிறுபான்மையோரின் நலன்களுக்கு பாடுபடுவது நாங்கள்தான் என்று பித்தலாட்டம் செய்வார்கள். எனவே சமூக, பொருளாதார, நாட்டு நலன் ஆகியவற்றை வைத்துப் பார்க்கும்போது, பா.ஜ.க. தொடர்ந்து கேடுகளையே விளைவித்துக் கொண்டிருக்கிறது.

**பரிதி இளம்வழுதி** *(சட்டமன்ற உறுப்பினர், தி.மு.க. துணைப் பொதுச் செயலாளர்)* : இன்று நாட்டில் சில பகுதிகளில் மக்களிடையே ஓர் அமைதியின்மை, கசப்புணர்வு ஆகியன உண்டாகியிருக்கிறது என்றால், அதற்குக் காரணம் பா.ஜ.க.தான். 1992ல் பாபர் மசூதியை இடித்து, தீவிரவாதத்துக்கும் பயங்கரவாதத்துக்கும் விதை போட்டவர்கள் அவர்கள்தான். கோத்ராவைத் தொடர்ந்து குஜராத்தில் அரசாங்க ஆதரவுடன் சிறுபான்மையோர் தாக்கப்பட்ட போது, வாஜ்பாய் மோடிக்கு 'ராஜதர்மத்தைக் கடைபிடியுங்கள்' என்று அறிவுரை மட்டுமே வழங்க முடிந்தது. இன்றைக்கு மோடிக்கு அமெரிக்கா விசா கொடுக்கப்படவில்லை என்று கூக்குரல் எழுப்புவதில் சிறிதும் அர்த்தம் இல்லை.

பெரும்பான்மை சமூகத்துக்கும் சிறுபான்மையினருக்கும் இடையே பிரச்னைகளை உண்டாக்கி குளிர் காய நினைக்கும் பா.ஜ.க. தந்திரம், இந்தியாவில் - குறிப்பாக தமிழகத்தில் செல்லுபடியாகாது. பா.ஜ.க.வில் வாஜ்பாயைக் குறித்துச் சொல்லும் போது கலைஞர் "Right man in the wrong party" என்று சொல்லியிருக்கிறார். ஆனால் "வாஜ்பாய், எங்களுக்கு ஒரு முகமூடி" என்று சொன்னார் கோவிந்தாச்சார்யா! மக்கள் இந்தக் கட்சியைப் புறக்கணிப்பார்கள்.

**ஹெச். ராஜா** *(பா.ஜ.க. சட்டமன்ற உறுப்பினர், பொதுச் செயலாளர், தமிழ்நாடு பா.ஜ.க.)* : இந்தியாவில் உள்ள பெரும்பான்மையோரின் பிரச்னை தான் தேசியப் பிரச்னை. அதை எடுத்துப் பேசினால், இந்துத்துவா என்றும் மதவெறியாளர்கள் என்றும் திரித்தும் பழித்தும் பேசுகிறார்கள். உண்மையான தேசியத்தை மக்களிடையே பரப்பவும் ஒவ்வொருவருக்கும் இந்தியன் என்ற தாக்கத்தை ஏற்படுத்தவும் பா.ஜ.கவின் பணி தொடர்ந்து தேவைப்படுகிறது.

நாடு முழுவதும் பிரிவினைவாதம், தீவிரவாதம் தலை விரித்து ஆடுகிறது. வோட்டு வங்கியைக் கணக்கில் கொண்டு மென்மையான நடவடிக்கையை காங்கிரஸும், அதன் கூட்டணிக் கட்சிகளும் மேற்கொள்வதால் நமது ஒருமைப்பாட்டுக்கு ஆபத்து விளைந்திருக்கிறது. தீவிரவாதிகள், தங்களுக்கு அரசு ஆதரவு இருப்பதாக எண்ணிக் கொண்டு பயமில்லாமல் பயங்கரவாதத்தில் ஈடுபடுகிறார்கள். குற்றத்தைக் குற்றம் என்று சொல்லும் நக்கீரன் பாணி கட்சி பா.ஜ.க.

வோட்டு வங்கியைப்பிடிப்பதற்காக பா.ஜ.க. ஒரு போதும் தாஜா அரசியலில் இறங்காது. நாங்கள் கனவு காணும் இந்தியாவில் எல்லோரும் சமம்; எல்லோரும் ஓர் நிலையாகவே இருப்பார்கள். ஏற்றத்தாழ்வோ, பாரபட்சமோ இருக்காது.

தேசிய அளவில் இரண்டே கட்சிகள் தான் இருக்க வேண்டும். காங்கிரஸுக்கு மாற்றாக பா.ஜ.க. மட்டுமே இருக்க முடியும். இந்த வகையில் பா.ஜ.க. நிலைத்து நீடிப்பது என்பது காலத்தின் கட்டாயமாகும். பா.ஜ.க. தலைமையில், மத்தியில் ஐந்து வருடம் ஆட்சி நடந்த போது தான், நாட்டின் பொருளாதாரம் வலுவான பாதையில் நடைபோட்டது. எதிர்காலத்திலும் இந்த நிலை உண்டாக, பா.ஜ.கவின் சேவை தொடரும்.

- ப்ரியன்



"கங்குலிகிட்ட ஆட்டோகிராப் வாங்கலாம்னு நினைச்சேன் அதற்குள்ள பேட்டிங் செய்யப் போயிட்டாரே!"

"கவலைப்படாதீங்க ஒரு நிமிஷத்துல வந்துடுவார்!"

– சிவகாமி சுந்தர்




உங்கள் கண்மணிகளுக்கு
ஆறு ரூபாயில்
அத்தனை சந்தோஷத்தையும்
அளித்திடுங்கள்!

# கோகுலம்

சிறுவர் மாத இதழ்

47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை-6000 32

# காதல் சிறகுகள்

அர்ச்சனாவ காமெடியான ஒரு பொண்ணாத்தான் பலருக்கும் தெரியும். ரொமான்ஸான ஒரு மனசும், அதுக்குள்ள அழகான ஒரு காதலும் அவளுக்குள்ள மறைஞ்சிருக்கிறது. அவ மட்டுமே அனுபவிக்கிற அற்புதமான உணர்வுகள். அதை வார்த்தையால சரியா மொழிபெயர்த்துட முடியுமான்னு சந்தேகமா இருக்கு. இருந்தாலும் வாங்க, ஜஸ்ட் ட்ரை பண்ணிப் பார்ப்போம்...

அப்பா இல்லாம வளர்ந்த பொண்ணு நான். அம்மாதான் எனக்கு அப்பா, குரு,



கடவுள் எல்லாமே. என்னைக்குமே அவங்க என்ன மகளா பார்த்ததில்ல. ஒரு தோழியாத்தான் இன்னிக்கும் பழகிட்டு வர்றோம். நல்லா சுதந்திரம் கொடுப்பாங்க. தேவையான விஷயத்துல கண்டிப்பும் உண்டு. எந்தவொரு விஷயம் பத்தியும் தெளிவா அறிவுரை சொல்லுவாங்க. எது தப்பு, எது சரின்னு எங்களை யோசிக்கவிட்டு வழி நடத்துவாங்க. அவங்க ஏற்படுத்தின ஒரு புரிதல்னாலயோ என்னவோ, எனக்கு ஸ்கூல் டேஸ்லருந்தே தெளிவு இருந்துச்சு. ஆழமா யோசிப்பேன். அனுபவத்திலிருந்து பாடம் கத்துப்பேன். அப்படித்தான் காதல் பத்தியும் சின்ன வயசுலயே பாடம் கத்துக்கிட்டேன். ஸ்கூல் படிச்சப்போ என்னோட ஃப்ரெண்டு ஒருத்தி, இன்ஃபாச்சுவேஷனை காதல்னு நம்பி லவ்ல மாட்டிக்கிட்டா. தினம் தினம் தன்னோட காதலனுக்காக உருகுவா, ஏங்குவா. எங்களுக்கெல்லாம் தவிப்பா இருக்கும். 'காதல் ரொம்பப் பெரிய விஷயம் போல... அவளுக்கு லக் இருக்கு... காதலிக்கிறா'ன்னு பலபேர் பெருமூச்சு விட்டிருக்காங்க. ஏகப்பட்ட காதல் பரிசுகளை காண்பிப்பா. ரத்தத்துல கடிதம் எழுதிப்பாங்க. இதையெல்லாம் பார்த்து காதல் மேல காதலே வந்த நாளெல்லாம் உண்டு. ஆனா, அது ரொம்ப நாள் நீடிக்கல. சடார்னு ஒரு தினத்துல என் தோழியோட காதலன் ஏமாத்திட்டு ஓடிட்டான். இவ தன்னையே அவன்கிட்ட இழந்து தவிச்சுப் போய் நிக்கிறா. நான் ஷாக் வாங்கின நேரம் அது. அப்போதான் மனசுல பெருசா ஒரு விரிசல்... 'ஆஹா காதல் மனுஷன உயிரோடு சாவடிக்கும்பா'ன்னு தெளிவு பிறந்துச்சு. அதுக்கப்புறம் சினிமாலயும், டீவியிலயும்தான் நான் காதலைப் பார்த்ததெல்லாம்.

காலேஜுக்குப் போனேன். அந்த வயசுக்கே உரிய ஜாலி, அரட்டை! ரொம்ப ரொம்ப யூத்ஃபுல்லான நாட்கள் அவை. அமிதாப் மேல அபார

## டிக்...டிக்...

க்ரேஸ் எனக்கு. அவரோட உயரம் மீது காதல். என்னைப் போலவே என் ஃப்ரெண்ட்ஸ் பலருக்கும் அவர் மேல ஈடுபாடு இருந்ததைப் பார்த்த பிறகுதான் எனக்குப் புரிஞ்சுது, இது ஒரு மாதிரி அட்ராக்ஷன்னு. அதனால அதையெல்லாம் நான் பெருசா எடுத்துக்கல.

எம்.ஏ படிச்சப்ப, கம்யூனிகேஷன் சப்ஜெக்ட்டுக்காக ரோட்ல வச்சு நான், என் கிளாஸ்மேட்ஸ்லாம் போட்டோ ஷூட்

பண்ணிட்டிருந்தோம். எங்களுக்கு முன்னாடி திடீர்னு ஒரு அம்பாசிடர் கார் போகுது. நேவி ஆபீசர்ஸ். வொயிட் அண்ட் வொயிட் யூனிஃபார்ம், கேப் போட்டு ஸ்டைலா போயிட்டிருக்காங்க. என் ஃப்ரெண்டு ஒருத்திகிட்ட நான் விளையாட்டா, 'இந்த மாதிரி வேலை செய்ற




பசங்களையெல்லாம் கல்யாணம் பண்ணிக்கிட்டா ரொம்ப சூப்பரா இருக்கும்டி'னேன். அதுக்கு அவ, 'ஆமாண்டி., ஆனா நமக்கெல்லாம் எங்க இது மாதிரி ஹேண்ட்சம் கைஸ் கிடைக்கப் போறானுங்க. எங்கயோ கடா மாதிரி வளர்ந்திருப்பானுங்க. அவனுங்கதான் கிடைப்பாங்க பாரு'ன்னா. அப்ப எனக்குத் தெரியல, உண்மையிலேயே எனக்கு நேவி ஆபீசர் ஒருத்தர்தான் கணவரா வரப் போறாருன்னு.

அடுத்த மூணே மாசத்துல அந்த சந்தர்ப்பம் வந்து என் வீட்டுக் கதவைத் தட்டிடுச்சு. எஸ், சின்ன வயசுல என்கூட படிச்ச வினோத் குடும்பம் எனக்கு நல்ல அறிமுகம். அப்பப்போ பார்த்துப்போம், பேசிப்போம். அவங்க அப்பா - அம்மா கூட நல்ல ரிலேஷன்ஷிப் இருந்தது. வினோத் தோட பிரதர் வினீத்தை பார்க்கறது ரொம்ப அபூர்வம். சரியான பழக்கமும் இல்ல. நடுவுல வினோத் ஃபாரின் போயிட்டான்.

திரும்ப இந்தியாவுக்கு வந்தப்ப, அவனை பார்க்கப் போயிருந்தேன். காமெடி டைம் ஷூட்டிங் பிரேக்கு நடுவுல, ஒரு அஞ்சு நிமிஷம் அவனுக்கு ஒதுக்கியிருந்தேன்.

நான் போனப்போ வினோத் கூட வினீத்தும் இருந்தார். அதுவரைக்கும் எனக்கு வினோத்துக்கு ஒரு அண்ணன் இருக்கார்னு மட்டும்தான் தெரியுமே ஒழிய, அவர் இவ்ளோ அழகானவரா, உயரமானவரா, சூப்பரா டிரஸ் பண்றவரா, நல்லா பேசறவரா இருப்பார்னு நிச்சயமா தெரியாது. அதுக்காக உடனே நான் அவரைப் பார்த்து இம்ப்ரஸ் ஆகி மயங்கி விழுந்துடல.

**அர்ச்சனா**

வினோத் ஜஸ்ட் ஒரு இன்ட்ரோ கொடுத்தான். 'ஹாய் வினீத்'னு சொல்லிட்டு எஸ்கேப் ஆயிட்டேன். என்கிட்ட எந்தவிதமான உணர்வோ, தவிப்போ இல்ல. ஆனா வினீத் என்னை தனக்குள்ள பதுக்கி வச்சுக்கிட்டார் போல... இது எனக்குத் தெரியாது. அவர் எனக்குத் தெரியப்படுத்தவும் இல்ல. ஒரு நாள் அவங்க வீட்டுக்கு நான் யதேச்சையா போன் பண்ணப்போ வினீத் தான் பேசினார்...'அர்ச்சனா, நீ ஒரு ஸ்பெஷலான பொண்ணு. உனக்கு ஸ்பெஷலான ஒரு பையன் கிடைக்கப்போறான்'னார். சைக்கிள் கேப்ல இவரு நான்தான் அந்தப் பையன்னு சொல்லல. எனக்கு அப்பவும் ஒண்ணுமே புரியல. மனசுக்குள்ள எந்த காதல் டிக் டிக் டிக்கும் ஏற்படல. அமைதியா இருந்துட்டேன்.

திடீர்னு ஒரு நாள் மனுஷன் எங்க வீட்டுக்கே வந்துட்டார். அப்ப நான் வீட்ல இல்லை. எங்கம்மாவை சந்திச்சவர், தான் நேவில வேலை செய்யறதுல தொடங்கி, ஒண்ணுவிடாம தன்னைப் பத்தி விவரிச்சு, பே ஸ்லிப் முதற்கொண்டு ஆதாரத்துக்குக் காமிச்சு, 'அர்ச்சனாவை நான் கண்கலங்காம காப்பாத்துவேன்'னு இம்ப்ரஸ் பண்ணிட்டுப் போயிட்டார். அம்மா யோசிச்சிருக்காங்க... அவங்க மனசுக்கு வினீத்தை ரொம்பப் பிடிச்சுப் போச்சு, என்கிட்ட சொன்னாங்க. முதல்ல எனக்கு சர்ப்ரைஸா இருந்துச்சு. 'பூனை மாதிரி இருந்துட்டு இந்தாளு என்ன காரியம் பண்ணியிருக்கார்'னு பிரமிச்சுப் போயிட்டேன். நிதானமா யோசிச்சப்ப, எனக்கும் ஒரு வாழ்க்கை தேவைன்னு புரிஞ்சுது. வினீத் என்னை நல்லா பாத்துப்பார்னு மனசுக்குள்ள திடமான ஒரு நம்பிக்கை.



மறுநாளே ஓ.கே. சொல்லிட்டேன்.

லவ் கம் அரேன்ஜ்டு மேரேஜா போனதால நாங்க காதலர்களா ஒரு போதும் ஃபீல் பண்ணினதே இல்ல. நல்ல நண்பர்களாத் தான் திருமணத்துக்கு முந்தின நாட்களைக் கழிச்சோம். நடுவுல ஒரு சோதனையான கட்டமும் வந்தது. நிச்சயதார்த்தம் முடிஞ்சு கல்யாணத்துக்கு அஞ்சு மாசம் இருக்கும் போது, எனக்கு வயித்துல ஒரு ஆபரேஷன் பண்ண வேண்டிய சூழ்நிலை. கட்டி இருந்ததால டாக்டர்ஸ் வயித்த அறுக்கணும், லேப்ராஸ்கோப் பண்ணணும்னு என்னென்னமோ சொல்லி பயமுறுத்துறாங்க. இதுக்கு நடுவுல திடீர்னு ஒரு' கட்டி உள்ளுக்குள்ளயே வெடிச்சுடுச்சு. அம்மாவுக்குத் தாங்கல. கலங்கிப் போய் நின்னுட்டாங்க. கல்யாண நேரத்துல இப்படி இருக்கே... இது சரியா வருமான்னு எல்லார்கிட்டயும் பயம், தயக்கம்... அந்த நேரத்துல வினீத் நடந்துக்கிட்ட விதம் ரொம்ப ரொம்ப இதமானது. அப்பா இல்லாத பொண்ணாச்சே... தனியாளா என்ன பண்ணப்போறேன்னு தவிச்சு நின்ன அம்மாவுக்கு ஆறுதல்

**"பூனை மாதிரி இருந்துட்டு என்ன காரியம் பண்ணியிருக்கார் இந்தாளு!"**

சொல்லி, ஆஸ்பிட்டல்ல அட்மிட் ஆனதுலேர்ந்து என் கூடவே இருந்து குழந்தை மாதிரி பார்த்து முழுசா என்னை குணப்படுத்தி அவங்ககிட்ட ஒப்படைச்சார். சொந்த பந்தங்கள், சகோதர- சகோதரிகள் நம்மள ஆபத்து நேரத்துல வழிநடத்தறது பெரிய விஷயம் இல்ல. அது அவங்க கடமை, செய்வாங்க. ஆனா உறவே இல்லாத மூணாவது மனுஷன் ஒருத்தர், என் மேலயும் என் குடும்பத்து மேலயும் கொண்ட அன்பை விவரிக்க இப்பவும் என்கிட்ட வார்த்தைங்க இல்ல. 'காதல்'ங்கற மூனெழுத்து செஞ்ச மாயம்தானே இது! அதுதான் என் வாழ்க்கைல நான் காதல உணர ஆரம்பிச்ச உண்மையான தருணம். ஜோடியா சினிமா, பார்க், பீச்னு சுத்தறதுன்னு இல்லாம, எதிர்காலமே கேள்விக்குறியா இருக்குற ஒரு நேரத்துல

'பயப்படாத... உனக்காக நானிருக்கேன்'னு சொல்ற ஆறுதலைத்தான் நான் காதலா உணர்றேன்.

கல்யாணத்துக்கு முன்னாடி காதல், 'எனக்கு அவ்ளோ பண்ணே, இவ்னோ பண்ணே'ன்னு நல்லதை சொல்லிட்டே இருக்கும். கல்யாணத்துக்கப்புறம் 'லவ் பண்ணப்ப இதெல்லாம் பண்ணீங்களே, இப்ப பண்றீங்களா'ன்னு மாறிடும். ஆக, கல்யாணத்துக்கப்புறம் எக்ஸ்பட்டேஷன்ஸ் ரொம்ப அதிகமாயிடும். என்னைப் பொறுத்தவரைக்கும் இதைத்தான் நான் திருமணத்துக்கு முன்னும் பின்னுமான வித்தியாசமா உணர்றேன். மத்தபடி எங்களுக்கிடையேயான அன்புலயோ, விட்டுக் கொடுத்தல்லயோ எந்தவிதமான மாற்றமுமில்ல. ரெண்டு பேருமே வேற வேற ப்ரொபெஷன்ல இருக்கறதால மாசத்துல பாதி நாட்கள் பிரிஞ்சிருக்க வேண்டியிருக்கு. ஆனா இதெல்லாம் எங்க பாசத்தையோ, நேசத்தையோ பாதிக்கறதில்ல. தள்ளித் தள்ளி இருக்கும்போதுதான் எங்களுக்குள்ள நெருக்கம் அதிகரிக்கிறதா உணர்றோம். என்னோட டீவி ப்ரோக்ராம்ஸ், மத்த விஷயங்கள் பத்தியெல்லாம் அவர்கிட்ட பேசவும், புதுப்புது ரெசிபிகள் செஞ்சு அவரை அசத்தவும், ஒவ்வொரு நிமிஷமும் அவரைப் பார்க்கிற நாளுக்காக ஆவலா காத்துட்டிருப்பேன். அதே மாதிரி அவரும் தன்னோட வேலை, எக்ஸாம்ஸ், என் மேலுள்ள ப்ரியம் பத்தியெல்லாம் கொட்டித்தீர்க்க மணித்துளிகளை தவிப்போட நகர்த்திட்டிருப்பார். இது ஒரு கண்ணாமூச்சி மாதிரிதான். ரொம்ப சந்தோஷமா அனுபவிச்சு விளையாடிட்டிருக்கோம். எத்தனையோ சமயங்கள்ல கொடுமையான விஷயமா தெரிஞ்ச காத்திருப்பு, இன்னைக்கு சுகமான அவஸ்தையா உரு மாறிப் போயிருக்குற அதிசயத்தை நிகழ்த்தினது காதல்தான்.

அது தந்த வேகத்தோடுதான் எதிர்காலத்தை மனசுல நினைச்சு நானும் வினீத்தும் கடுமையா உழைச்சிட்டிருக்கோம். எங்களுக்கே எங்களுக்குன்னு ஒரு குழந்தை, அதோட எதிர்காலம், சமூகத்துல அதுக்கொரு அந்தஸ்துன்னு எங்களோட எல்லைகள் விரிவடைஞ்சுக்கிட்டே போகலாம். எல்லாத்துக்கும் அடிப்படை ஆதாரமான காதல் தீர்த்துப் போகாத வரை எதையும் சாதிக்க முடியும்னுதான் தோணுது!

சந்திப்பு: மு.மாறன்
படங்கள்: ஸ்ரீஹரி





# இது என்ன சீசன்?

**இ**ப்போது என்ன சீசன்...? சரியான விடையை ✓ செய்யவும்.

☐ சம்மர் சீசன்

☐ மாம்பழ சீசன்

☐ விழா சீசன் (மங்கையர் மலர் வெள்ளி விழா, வானதி பதிப்பக பொன் விழா, பி.ஜே.பி. வெள்ளி விழா, பி.எஸ். உயர்நிலைப் பள்ளி நூற்றாண்டு விழா...)

☐ சந்திரமுகி சீசன்

இந்த சீசனெல்லாம் எதுவுமில்லை என்பது சுமியுடைய தாழ்மையான அபிப்பிராயம். ஏன்னா, இதைத் தூக்கிச் சாப்பிடற ஆஃப் சீசன் ஒண்ணு இப்போ உதயமாயிருக்கு!

செப்டம்பரும் இல்லாத டிசம்பருமில்லாத ஏப்ரலில், மக்களைப் பெரிசா முட்டாளாக்கற மாதிரி ஒரு விளம்பரப் பலகையை வைச்சிருக்கார் கத்திப்பாரா ஜனார்த்தனம். 'சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்'னு பாரதியார் சொன்னாராம்.



அதுக்காக அந்த வரிகளையும் போட்டு, சேது சமுத்திர திட்டத்துக்கு 'வழி வகுத்த' சோனியாவுக்கு (சோனியா காந்தியேதான்!) பாரதியார் வேஷமும் போட்டு, தம்முடைய ஐம்பத்தேழாவது பிறந்த நாளைக் கொண்டாடியிருக்கிறார். பார்க்கிறபோதே மெட்ராஸ் ஐ வந்த மாதிரி சகிக்க முடியாம கண்ணை உறுத்துது! இந்த 'ஐ ஸோர்'ஐ விழிகொட்டாம கத்திப்பாரா சந்திப்புல பார்த்துக்கிட்டு நிற்கறார் சோனியாவுடைய மாமியாரின் அப்பா!

இதை ஜீரணிச்சுக்க முடியாம வீடு போய்ச் சேர்ந்து பேப்பரைப் புரட்டினா, முதல்வர் அம்மா மகாகவியை கோட் பண்றாங்க "ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம். உலகத் தொழில் அனைத்தும் உவந்து செய்வோம்'னு சட்டசபையில பாட்டுப் படிக்கறாங்க... எதுக்காம்? பாரதி கனவை நனவாக்கத்தான் நோக்கியா செல்போன் தொழிற்சாலை வந்திருக்காம், தமிழ்நாட்டுக்கு... இன்னும் நிறைய வருமாம்!

இப்படி வாய்க்கு வாய் பாரதி அடிபடறதாலே... 'இதுவாகப்பட்டது பாரதி சீசன்!' என்று சுமி அறிவிக்கிறார்.

தமிழ்நாட்டின் எண்ணூற்று சொச்சம் பாரதி சங்கங்களும், எண்பது சொச்சம் பாரதி காவலர்களும் கத்திப்பாரா ஜனார்த்தனனுக்குக் குறைஞ்சபட்சம் ஒரு கண்டன லெட்டர் போட்டா நல்லாயிருக்கும். செய்வாங்களா?

**போ**கட்டும்... அமெரிக்காவை உலுக்கிய ஒரு சர்ச்சை சீக்கிரமே உலகமகா குவெஸ்டியன் மார்க் ஆகி எல்லாரையும் வாட்டும். அதான் டெர்ரி ஷியாவோ விவகாரத்துக்கு அப்புறம், எழுந்திருக்கிற கேள்வி! மூளைச் சாவு இல்லைன்னா, கோமா நிலையில இருக்கிறவங்களுக்குத் தர மருத்துவ ஆதரவை நீக்கி, அவங்களைச் சாகடிக்கலாமா?

இல்லையில்லை... அது சாகடிக்கிற விஷயமில்லை; சாக அனுமதிக்கிற விஷயம் - கௌரவமா ஒருத்தரைச் சாக விடணும்னு இன்னொரு கட்சி.

பேசாம, இன்ஷூரன்ஸ் பாலிஸி எடுக்கும்போதே இனிமே ஒவ்வொருத்தரும் தன்னுடைய 'டெத் பாலிஸி'யையும் ஸ்டேட்மென்ட்டா எழுதி வைச்சுடலாம். 'என்னை செயற்கையா உயிர் வாழ வைக்கணும்/ வைக்க வேண்டாம்/ஒரு குறிப்பிட்ட காலம் வரை வைக்கலாம்'னு, சாய்ஸ்படி அறிவிச்சுடலாம்!

சுமி




## மனித நேயர் மறைந்தார்

**போ**ப் இரண்டாம் ஜான் பால் மறைவு மத எல்லைகளையும் தாண்டி, துயரத்தையும் இழப்புணர்வையும் ஏற்படுத்தியிருக்கிறது. புஷ், பிளேர் தொடங்கி கார்பசெவ், காஸ்ட்ரோ வரை உலகத் தலைவர்கள் இரங்கல் தெரிவித்துள்ளனர்.

இத்தனைக்கும் போப் ஆண்டவர் இந்தத் தலைவர்களுடன் எல்லா நேரங்களிலும் உடன்பட்டார் என்று கூற முடியாது. மனித உரிமைப் பண்பாளர் என்ற போதிலும், கத்தோலிக்க கிறிஸ்தவ மதக் கோட்பாடுகள் அனுமதியாத கர்ப்பத்தடை முறைகள், விவாகரத்து போன்றவற்றை இறுதிவரை கடுமையாக எதிர்த்தார். ஓரினச் சேர்க்கையையும் கருக்கலைப்பையும்கூட அடிப்படை உரிமைகளாகக் கோரி வருகின்ற மேற்கத்திய உலகில், போப் ஆண்டவரின் நிலை பழைமை வாதம்தான்! கம்யூனிஸத்தை மிக வெளிப்படையாகவும் கடுமையாகவும் நிராகரித்தார் போப். அவ்வாறாயினும் அவரால் இத்தனை தலைவர்களின் மதிப்பை எவ்வாறு பெற முடிந்தது?... அதுவும் ஏதோ மரியாதை நிமித்தம் இரங்கல் செய்தி வெளியிடாமல், ஒவ்வொருத்தரையும் உணர்ச்சிப் பெருக்குடன் பேச வைத்துள்ளது போப் ஆண்டவரின் மரணம்.

இந்த அரிய உணர்ச்சிப் பெருக்குக்குக் காரணம் போப் ஜான் பாலின் மனித நேயம்தான். கிறிஸ்துவ மதத்தைப் பரப்புவதிலும்



# கல்கி



2005 ஏப்ரல் 17
பார்த்திப சித்திரை 4
மலர் : 63
இதழ் : 38




கத்தோலிக்கப் பழைமைவாதத்தைக் காப்பதிலும் எவ்வளவுக்கெவ்வளவு உறுதியாக இருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு தம்மோடு முரண்பட்டவர்கள் மீதும் அன்பு செலுத்தினார்.

முரண்படுவோரையும் நேசிக்கும் இந்தப் பேரன்புதான் கிறிஸ்தவ மதத்துக்கு மட்டுமின்றி, அனைத்து மதங்களுக்கும் ஆணிவேர். இந்தப் பேரன்பு காரணமாகத்தான் தம்மைச் சுட்டுக் கொல்ல முயன்ற மெஹ்மட் அலி அக்(g)கா(ca)வையும் மன்னித்து, அன்போடு அரவணைத்து ஏற்றார் ஆண்டவர்.

துருக்கி நாட்டுச் சிறையில் உள்ள அக்(g)கா(ca), போப்பாண்டவரின் மரணச் செய்தி அறிந்ததும் இறுதிச் சடங்குக்கு வரவேண்டும் என்று துடித்திருக்கிறான். தனக்கு அனுமதி கிடைக்காவிடில், தனது குடும்பத்தினர் யாரேனும் இறுதிச்சடங்குக்குச் சென்றே ஆக வேண்டும் என்று கூறியிருக்கிறான்.

உலகின் பல திக்குகளிலிருந்து பேராயர்களும், கன்யாஸ்த்ரீகளும், பாதிரிமார்களும் வந்து இறுதி மரியாதை செலுத்தியுள்ளனர். அதனினும் முக்கியமாக, லட்சோப லட்சம் சாமானிய மக்கள் நேரில் சென்று அவருக்குக் கண்ணீர் அஞ்சலி செலுத்தியுள்ளனர். போப் ஆண்டவர் இறையடி சேர்ந்து உயர்நிலை எய்துவார் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

நமது நாட்டைப் பொறுத்தவரையில், போப் ஆண்டவர் அனைத்து மதத்தவராலும் மதித்துப் போற்றப்பட்டார். கிறிஸ்துவ மதக் கொள்கையைப் பின்பற்றி இங்கே அம்மதத்தின் மதபோதகர்கள் பலர் நுழைந்து, ஹிந்துக்களை மதமாற்றம் செய்து வருவது குறித்து பெரும் சர்ச்சை நிலவிக் கொண்டுதானிருக்கிறது. இந்த முறைகேடுகளுக்குக் கத்தோலிக்க கிறிஸ்துவத் தலைமை துணை போவது குறித்துப் பெருங்கோபமும் தார்மிக எழுச்சியும் நாட்டில் எங்கும் காணக் கிடைக்கிறது. ஆனால், இந்த எதிர்ப்புணர்வையும் மீறி, போப் ஆண்டவருக்குப் பல ஹிந்துக்களும் மனம் கசிந்து அஞ்சலி செலுத்தியிருக்கின்றனர்.




கும்பகோணம் பள்ளி தீ விபத்து, சுனாமி போன்ற சோக நிகழ்வுகளின்போது வாடிகன் ஆதரவுக் குரல் கொடுத்திருக்கிறதே என்று பலர் மகிழ்கின்றனர். 'பல்லாயிரம் ஆண்டுகளாக அமலில் இருக்கும் கத்தோலிக்க அமைப்பு இழைத்திருக்கக்கூடிய தவறுகள், அநீதிகளுக்கு போப் இரண்டாம் ஜான் பால் பொது மன்னிப்புக் கேட்டாரே!' என்று நெகிழ்கின்றனர்.

ஆனால், மக்களின் உணர்வுகளை மதித்து, இந்திய அரசு மூன்று நாள் அரசுமுறை இரங்கல் அறிவித்திருக்கிறது என்று நாம் கருதுவதற்கில்லை. அப்படி மக்களின் ஏகோபித்த ஆதரவு இந்த அறிவிப்புக்கு இருப்பதாகவும் தோன்றவில்லை. மத்திய அரசின் இந்தத் திடீர் அறிவிப்பு, மக்கள் உணர்வுகளின் அடிப்படையில் எழுந்ததல்ல. கிறிஸ்துவ மதத்தினரைத் திருப்திப்படுத்த, அரசியல் கண்ணோட்டத்தில் எழுந் திருப்பதாகவே கருத வேண்டியிருக்கிறது. ஒரு மனிதாபிமானிக்குச் செலுத்தப்படும் மரியாதை எனில், அன்னை தெரஸாவுக்கு இப்படி ஓர் அறிவிப்பு இல்லையே!

இதுநாள்வரை எந்த மதத்தின் எந்தவொரு (தேசிய அல்லது சர்வதேச தலைவருக்கும் அறிவிக்கப்படாத அரசுமுறை இரங்கலை அறிவித்ததன்மூலம் சர்ச்சைக்குரிய ஒரு முன்னுதாரணத்தை வகுத்துவிட்டது மத்திய அரசு.

மதச்சார்பின்மையின் கொடியைத் தூக்கிப் பிடிப்பதாக இதற்கு மத்திய அரசு விளக்கம் தரக்கூடும்... ஆனால் சென்ற நூற்றாண்டின் மிகச் சிறந்த ஹிந்து மதத் தலைவர் ஒருவருக்குத் தரப்படாத கௌரவம், போப் ஆண்டவருக்கு மட்டும் தரப்படுவது ஏன் என்கிற கேள்விக்கு, நியாயமான பதில் இல்லை. அந்த பதில் இல்லாத காரணத்தால், இந்த அரசிடம் மெய்யான மதச்சார்பின்மையும் இல்லை.

போப் ஆண்டவரின் உயர்வை நாம் குறைத்து மதிப்பிடவில்லை. இந்தியாவின் மதச்சார்பின்மை என்பது சிறுபான்மையினரைத் திருப்திப்படுத்துவது என்ற போலித் தனமாகிவிடக் கூடாதே என்றுதான் நியாயமாகக் கவலை கொள்கிறோம். ●



"எந்தக் கிசுகிசுவுலயும் மாட்டிக்காம இருக்கீங்களே... எப்படி?"

"யார் கூடவாவது சகவாசம் வச்சுக் கிட்டா நடக்கறதே வேறனு ரசிகர் மன்றத்துக்காரங்க வம்பு பண்றாங்க!"

# மாட்டாத ரகசியம்!

படத்துக்கு 'உள்ளூர் வரிகள் தனி'னு டைட்டில் வச்சுருக்கீங்களே... எதுக்கு?"

"வெளிநாட்டுல இருந்து இறக்குமதி பண்ணின கதை யாச்சே!"






"காமிராவுல தாயத்து மாட்டிருக்கே. ஏன்?"

"ஷூட் பண்ற எல்லாக் காட்சிகளும் சென்சாருக்குத் தப்பி வரணும்னு மந்திரிச்சுக் கட்டியிருக்கு!"

"செட்ல நாய் ஊளையிடுதே... எதுக்கு?"

"ஹீரோயினோட சம்பள பாக்கில பைசல் பண்ணச் சொல்லி அவங்க வளர்க்கற வாய் அபசகுனமா கத்துது!"

- அம்பை தேவா






• வெறிச்சோடி...



# திணறும் திருச்சி தியேட்டர்கள்!

திருச்சி கோட்டை ரெயில்வே மேம்பாலம். ஒரு ரிக்ஷாக்காரர் 'ஒன்று... இரண்டு... மூன்று...' என தொடர்ச்சியாக எண்ணிக் கொண்டே இருந்தார். சுவாரஸ்யமாய் அப்படி எதைத்தான் எண்ணுகிறார் என்றறிந்து கொள்ள அவரை நெருங்கினோம். அவர் கண்கள் பதிந்திருந்த திசையில் பார்வையைச் செலுத்தினோம். மேரிஸ் 70 எம்.எம். திரையரங்கில் சினிமா பார்த்து விட்டு வெளியே வருபவர்களை எண்ணிக் கொண்டிருந்தார். சட்டென அவரது எண்ணிக்கை வெறும் அறுபதுடன் நின்று போய்விட்டது. குறிப்பிட்ட திரையரங்கின் உள்ளிருக்கைகள் மட்டும் ஆயிரத்து இருநூறு.

"முன்னெல்லாம் மேரிஸ் தியேட்டர்ல சினிமா விட்டாப் போதும். ஆட்டோவுக்கு, ரிக்ஷாவுக்குன்னு சவாரி நெறைய கெடைக்கும். தியேட்டர் பக்கம் இப்ப ஜனங்களும் சரியா வர்றது இல்லே. அதனால எங்களுக்கு சரியா சவாரியும் கெடைக்கறதில்லே. அதான் பொழுதாவது போவணுமேன்னு சினிமா பார்த்துட்டு வர்ற ஜனங்களை எண்ணிக்கிட்டு இருக்கேன்!" என்று மிகவும் சலித்துக் கொண்டார் அந்த ரிக்ஷாக்காரர்.



• சு.துர்காதேவி

மாநகர எல்லைக்குள் மொத்தம் நாற்பது தியேட்டர்கள். அவற்றுள் பதினாறு மூடு விழா கண்டுவிட்டன. மிச்சமுள்ள இருபத்து நான்கு தியேட்டர்களில் சுமார் நான்கு தியேட்டர்களைத்



• ரெ.மன்னார்



• சிதிலமடைந்த நிலையில்...

தவிர, எஞ்சிய இருபது தியேட்டர்களும் எந்த நாளிலும் மூடி விடப்படலாம் என்கிற நிலையில் இழுத்துப் பிடித்து ஓடிக் கொண்டிருக்கின்றன. திரையரங்குத் தொழிலின் பின்னோக்கிய ஓட்டப் பந்தயத்தில், முதன் முதலாக இழுத்து மூடப்பட்ட தியேட்டர் ராஜா தியேட்டர். நகரின் மையப் பகுதியில் அமையப் பெற்றிருந்தது. இப்பொழுது அங்கு வங்கி அலுவலகங்கள், வர்த்தக நிலையங்கள் என அடுக்கு மாடிக் கட்டடங்கள் கம்பீரமாக எழுந்து நிற்கின்றன. இருந்த போதிலும், மாநகரப் பேருந்துகளின் நடத்துனர் உதடுகளிலிருந்து இன்னமும் 'ராஜா தியேட்டர்' மறையவே இல்லை. குறிப்பிட்ட வழித்தட நிறுத்தம் வரும் முன்பாகவே அவரது குரல் ஓங்கி ஒலிக்கிறது. "ராஜா தியேட்டர் வந்துடுச்சு. எல்லாம் எறங்கிக்கங்க!"

ஜூபிடர் டாக்கீஸ் என்பது முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் எல். அடைக்கல ராஜூவுக்குச் சொந்தமானது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாகவே தனியார் ஒருவருக்கு விற்கப்பட்டுவிட்டது. தற்போது அதன் அடையாளங்கள் ஏதுமின்றி, கட்டடப் பகுதிகள் அனைத்தும் இடித்துத் தரை மட்டமாக்கப்பட்டுள்ளது. காந்தி மார்க்கெட் பகுதியில் சென்ட்ரல் டாக்கீஸ். இருபது வருடங்களாக அதுவும் இயங்கவில்லை. பாகப் பிரிவினை வழக்கில் சிக்கி, கட்டடப் பகுதிகள் பெரிதும் சிதிலமடைந்து போயுள்ளன. திருச்சி, மத்தியப் பேருந்து நிலையம் அருகே அமைந்திருந்தது பிளாசா. அது முற்றிலுமாக இடிக்கப்பட்டு, காம்ப்ளக்ஸ் கட்டடங்களில் கடைகள் வந்து பதினைந்து ஆண்டுகளுக்கும் மேலே ஆகின்றன.

உறையூர் பகுதியில் அருணா தியேட்டர் அருகே விட்டில் அருணா. காட்சிகளின்போது திரைப்பட ரசிகர்களின் வருகை வெகு அரிதாகிப் போகவே, அப்படியே திருமண மண்டபமாக்கிவிட்டார்கள். கடந்த இருபது ஆண்டுகள் முன்பு வரைக்குமாக சிறப்பாக இருந்து வந்த திரையரங்குத் தொழில், அதன் பின்னரே படிப்படியாக நசிந்து போனதெனச் சொல்லப்படுகிறது. தொலைக்காட்சியில் தொட்டதுக்கெல்லாம் சினிமா, பெண்களில் முகங்களில் இன்னொரு மாய அணிகலனாக அமைந்துவிட்ட சீரியல் தொடர்கள், வீட்டில் டெக் வசதி இல்லாதவர்கள் கூட நூறு ரூபாய்ச் செலவில் புதிய திரைப்படத்தை வீடு நிறைந்த ஆட்களுடன் கண்டு களிக்க வல்ல சரளமாக்கப்பட்ட வசதி. எல்லாமுமாக ஒன்று சேர்ந்து வீட்டுப் பெண்களையும், ஆடவர்களையும், சிறுவர் சிறுமியர்களையும் வீட்டுக்குள்ளேயே சிறைப் பிடித்து வைத்து விடுகிறது. "திருட்டு வீசிடியை நூற்றுக்கு நூறு முழுமையாகக் கட்டுப்படுத்தினால் மட்டுமே, தியேட்டர்களுக்கு இன்னும் கொஞ்சம் கூடுதலாக ஜனங்களை வரவழைக்க முடியும். இப்பொழுது திருட்டு வீசிடி ஒழிந்து விட்டது என்று பெயர்தானே தவிர, இன்னமும் அதனை முற்றிலுமாக ஒழிக்க முடியவில்லை என்பதே மறுக்க முடியாத உண்மை!" எனக் கூறுகிறார் சினிமா அனுபவஸ்தர் ஒருவர்.




ஸ்ரீரங்கத்தில் அமைந்திருந்தன இரண்டு சினிமா தியேட்டர்கள். ஒன்று ஸ்ரீரெங்கராஜா

தியேட்டர். இன்னொன்று ஸ்ரீதேவி டாக்கீஸ். கடந்த ஐந்தாறு ஆண்டுகளாக ஸ்ரீதேவி டாக்கீஸ் இயங்கவில்லை. மாறாக முன் பகுதியில் கடைகள் உருவாகி, மேலும் ஒரு பகுதியில் கடைகள் கட்டப்பட்டு வருகின்றன. மிச்சமிருக்கும் ஸ்ரீரெங்கராஜா தியேட்டர், மூடு விழா காண்பது என்றைக்கு என நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறது. கலைவாணர் என்.எஸ்.கே.-டி.ஏ. மதுரத்தின் உறவினர்களுக்குச் சொந்தமான தியேட்டர் அது. அந்த உறவினர்களின் சந்ததியினர் தற்போது அதனை நிர்வகித்து வருகின்றனர். திரையரங்க வசூல் ஆனது, அதன் மின்சாரக் கட்டணம் மற்றும் நிர்வாகச் செலவுகளுக்கே ஆகி வரவில்லை என்பதே நிஜம்.

''1952ல் திரையரங்க திரைப்பட ஒழுங்கு முறைச் சட்டம் உருவானது. அதன் பின்னர் ஐம்பத்தி மூன்று வருடங்கள் ஆகியும் அந்தச் சட்டத்தின் மீது எவ்விதத் திருத்தமும் இன்னமும் கொண்டு வரப்படவில்லை. திரையரங்குகள் அனைத்திலும் ஒவ்வொரு காட்சியின் போதும் நியூஸ் ரீல் ஒன்று அவசியம் காட்டப்பட வேண்டும் என்பது சட்டம். இன்றும் அதேதான் நடைமுறையில் இருந்து வருகிறது. இது திரையரங்குகளுக்கு ஒரு வீண் செலவு. மேலும் மிகவும் காலங்கடந்த சம்பவங்கள் குறித்தான நியூஸ் ரீலையும் பொது மக்கள் எவரும் திரையரங்கில் ரசித்துப் பார்ப்பதில்லை. சரிவர வசூல் இல்லை என்பதால், தியேட்டர்களிலும் வசதிகள் குறைந்து போய்விட்டன!''எனக் குறிப்பிடுகிறார் முப்பத்தியாறு வருடங்களாக திரைப்பட விநியோகஸ்தர் அலுவலகப் பணியாளராக இருந்து வந்துள்ள ரெ.மன்னார்.

"ஒரு புதுப் படம் வந்துருக்கு. தியேட்டர்ல போய் பார்க்கலாம்னு போறோம். முதல் வகுப்புக் கட்டணத்தை இரண்டு மடங்கு உயர்த்தி வசூலிக்கிறாங்க. சரி... அப்பிடியாவது டிக்கெட் கெடைக்குமான்னு பார்த்தா... முதல்ல நிக்குற பத்து இருபது பேருக்கு டிக்கெட் குடுத்துட்டு, பிளாக்ல டிக்கெட் விக்க ஆரம்பிச்சுடுறாங்க. ஒரு டிக்கட் குறைந்த பட்சம் நூறு




''இந்தப் படத்தோட ஆங்கிலத் தலைப்பை மாத்தச் சொல்லி போராடப் போறேன்''
''தலைவரே! இது கோலிவுட்ல எடுத்த படம் கிடையாது. ஹாலிவுட்ல எடுத்த ஒரிஜினல் இங்கிலீஷ் படம்!''

ரூபாய்க்கு மேல போகுது. எங்க வீட்ல எட்டுப் பேர் இருக்கோம். என்னோட அப்பா எல்லாரையும் கூட்டிட்டுப் போனார்ன்னா ஒரு சினிமாவுக்கு ஆயிரம் ரூபா வேணும். இதெல்லாம் கட்டுப்படியாகுமா?''என்கிறார் க.துர்காதேவி.

ஒரே கட்டடத்தில் சேர்ந்தாற்போல ஐந்து திரையரங்குகள் முதன்முதலாக வடிவமைக்கப்பட்டது திருச்சியில்தான். 1978ல் திறக்கப்பட்டன மேரிஸ் காம்ப்ளக்ஸ் தியேட்டர்கள். மேரிஸ் 70 எம்.எம்., மேரிஸ் ராக், மேரீஸ் போர்ட், மேரீஸ் மினி, மேரிஸ் மேக்ஸி என மொத்தம் ஐந்து தியேட்டர்கள். தற்போது மேரிஸ் 70 எம்.எம்., மற்றும் மேரிஸ் ராக் ஆகிய இரண்டு தியேட்டர்களில் மட்டுமே திரைப்படங்கள் ஓடுகின்றன. இரண்டிலும் உள்ள இருக்கைகள் ஆயிரத்து எண்ணூறு. சென்ற ஞாயிறு காலை காட்சியின்போது இரண்டு தியேட்டர்களிலும் மொத்தம் நூற்றியிருபது நபர்கள் மட்டுமே சினிமா பார்த்துக் கொண்டிருந்தனர்.

கட்டுரை, படங்கள்
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**




## முதல் பரிசு - ரூ.10,000
## இரண்டாம் பரிசு - ரூ. 7,500
## மூன்றாம் பரிசு - ரூ. 5,000

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ, அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

### விதிமுறைகள்:

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.

# அமரர் கல்கி நினைவுச்

● அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.

● படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவர்தான் என்பதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி, ஜெராக்ஸ் போன்றவை) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.

● முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

● தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

● ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

● போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும்வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக் கூடாது.

● பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

● முடிவு வெளியாகும்வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

● 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2005' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032**

● கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி: ஜூன் 15

● போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 1 ஆண்டு மலரில் வெளியாகும்.

*படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.*

- ஆசிரியர்

# சிறுகதைப் போட்டி 2005

# உள்ளம் உருகும் உறவு!



சினிமாக்காரர்களுக்கு காதலே கதி. வேறு எந்த விஷயமும் இந்த பூமியில் பிரதானமில்லை. சின்னத் திரைக்காரர்களுக்கோ, குடும்பப் பெண்மணிகளை பிழியப் பிழிய அழ வைப்பதே வெற்றி ஃபார்முலாவாகிவிட்டது. இந்தச் சூழ்நிலையில், அவ்வப்போது சிலர், வர்த்தக ரீதியில் ரிஸ்க்கான சப்ஜெக்ட்களை, டெலிஃபிலிம்களாக எடுப்பது பாராட்டுக்குரியது. இதில் முதலீடு குறைவு. நல்ல விஷயம் சொன்ன மனத் திருப்தி; கையைக் கடிக்காத வர்த்தகம் என்று சில அனுகூலங்களும் உண்டு.

அந்த வகையைச் சேர்ந்தது ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் எஸ்.வி.ரமணன் எழுதி, இயக்கியுள்ள 'யார் அந்த உறவு?' ரவி ராகவேந்தர், ஷைலஜா, நடித்துள்ள இந்தப் படத்தை தம் தந்தை டைரக்டர் கே.சுப்ரமணியத்தின் நூற்றாண்டு நினைவாஞ்சலியாக எடுத்திருக்கிறார் ரமணன்.

உலகமயமாகி வரும் இன்றைய சமுதாயத்தில், எங்கும் எதிலும் போட்டி. அதை சமாளித்து, மேலே போக வேண்டிய டென்ஷன் எல்லாருக்கும். நேற்றைய தாழ்வு, இன்றைக்கு வாழ்வாகிவிட்டது. நேற்றைய வாழ்வு இன்றைக்குத் தாழ்வாகிவிட்டது. வாழ்க்கைத் தடத்தில் உருண்டோடிக் கொண்டிருக்கும் மனித வாழ்க்கையின் நிலைகுலைய வைக்கும் தன்மையை இந்தப் படம் யதார்த்தமாய் எடுத்துச் சொல்கிறது.

ராஜா என்கிற கேரக்டரில் நடித்திருக்கும் ஸ்ரீராகவேந்தர், அந்தக் கதாபாத்திரமாகவே வாழ்ந்திருக்கிறாராம். ஓயாமல் உழைத்து பெரும் பணக்காரர் ஆகும் ராஜா, பிற்காலத்தில் பெண் பிள்ளைகளால் உதாசீனப் படுத்தப்பட்டு முதியோர் இல்லத்தில் தனிமையில் கழிக்க, அவரது பழைய நினைவுகளே கதையாக அவிழ்கிறது.

"இன்றைக்கு மனித உறவுகள் மிகவும் பலவீனமாகி சிக்கலடைந்து கொண்டிருக்கின்றன. குடும்ப உறவுகள், இன்றைய இயந்திரகதியான வாழ்க்கையில் மிகவும் மேம்போக்காகிவிட்டன. ஆனால், இன்றைய தலைமுறையினருக்கு அதன் ஆழம் புரியவில்லை. புரிந்து கொள்ள அவர்களுக்கு நேரமும் இல்லை. இதை ஆழமான குடும்ப உறவுகள் கொண்ட கதை மூலம் சொல்லியிருக்கிறார்கள் 'யார் அந்த உறவு' டெலிஃபிலிமில்.

"என் மனைவி உடல் நலம் குறைவுற்று இருந்த சமயத்தில்கூட சினிமாவில் பிஸியாக இருந்ததால், அவளுக்கு உதவியாக என்னால் இருக்க முடியவில்லை. இப்போது நான் முழுமையான ஓய்வில் இருக்கிறேன். ஆனால் என் மனைவியோடு இருக்க, எனக்குக் கொடுத்து வைக்கவில்லை'' என்று மனம் நெகிழ்ந்து கூறினாராம் டைரக்டர் எஸ்.பி.முத்துராமன்.

- கௌதம்ராம்



# "நீ தைர்யலட்சுமிடா செல்லம்!"

**சி**ங்கத்துடன் போராடுவது ரிங் மாஸ்டருக்கு வேண்டுமானால் சவாலாக இருக்கலாம். ஆனால் நம்ம சினிமா பிரபலங்களுக்கு? ஒரு சிங்கத்தைக் கொல்லச் சொன்னால், நம் ஹீரோக்கள் தங்கள் பாணியில் எப்படிச் சமாளிப்பார்கள்? (மேனகா காந்தி மன்னிக்க!)

**கமல் :** சிங்கத்தின் காதருகே போய் அமானுஷ்ய குரலில் அழுவார். சோகம் தாங்காமல் சிங்கம் உயிர் விடுவது உறுதி!

**ரஜினி :** சிங்கத்தைப் பார்த்து பயங்கரமாக உறுமி சாலஞ்ச் விட்டு "வந்தேன்னா பார்" என்று மானரிஸத்துடன் ஸ்டைல் காட்டுவார். அருகே போய், "நீ தைர்ய லட்சுமிடா செல்லம்" என தடாலடியாகக் காலில் விழ, விரக்தியில் சிங்கம் உயிரை விட்டு விடும்!

**மணிரத்னம் :** சிங்கத்தை இருட்டிலேயே உலவ விட்டு ஒரு சிறு மெழுகுவர்த்தி வெளிச்சத்தில்; "நீ நல்லவனா, கெட்டவனா?" என்று கேட்க, சிங்கம் டென்ஷன் தாங்காமல் தற்கொலை செய்து கொள்ளும்.

**விஜயகாந்த் :** உச்சஸ்தாயியில் கண்கள் சிவக்க, புள்ளி விவரங்களுடன் ஊழல், தேசப்பற்று... என்று பேசி வதைக்க, ஒண்ணு சிங்கம் உயிரை விடும் அல்லது இரவோடு இரவாக பசுவாக மாறி விடும்.

**சங்கர் :** ரஷ்யா, ஸ்விட்ஸர்லாந்து என படு ரிச்சாக லொகேஷனைப் போட்டு சிங்கத்தை அழைத்துப் போவார். குளிர் தாங்காமல் சிங்கம் செத்துப் போகும்.

**அஜீத் :** "பெரிய காட்டு ராஜாவா நீ... ஹீரோன்னா என்னன்னு தெரியுமா? தலை நா இருக்க வாலு ஆட்டறியா... லே கொன்னே போடுவேன்" என்று கர்ஜனை செய்ய, தமிழ்வதை தாங்காத சிங்கம் எப்போதோ உயிர் விட்டு ஜில்லிட்டிருக்கும்.

**விஜய் :** 'கட்டு கட்டு கீரை கட்டு' என்று கீரை வகைகளாக சிங்கத்துக்கு தீனி போட, சிங்கம் எலும்புக்கூடாகி உயிர் விடும்.

**தனுஷ், சிம்பு...** இவர்களெல்லாம் கிடையாதான்னு கேட்பவர்களுக்கு, சிங்கத்தை எதிர்கொள்ளும் வயது இன்னும் வரவில்லை... சின்னப் பசங்க...

**- லதா சேகர்**

# பின்கதைச் சுருக்கம்

நீலப்பரப்பிலிருந்து சுமார் ஒரு மைல் தொலைவு தள்ளி நின்று கொண்டிருந்தேன். காலடியில் கடல் அசைந்து கொண்டிருக்கிறது. இப்படிச் சொல்லுவதே எத்தனை வினோதமாக இருக்கிறது! ஆனால், அது அலையடிக்கும் கடல் அல்ல. அலை உறங்கும் கடல்.

ஒரு செய்தியாளனாகத்தான் நான் ராமேஸ்வரத்துக்குப் போயிருந்தேன். ஆனால் சூழலின் அசாதாரணமான அமைதியும், கலவரமூட்டக் கூடிய ரகசியப் பரபரப்பும், செய்திக் கட்டுரைக்குள் அடங்கிவிடக்கூடியதென்று தோன்றவில்லை. என் மனம் மட்டுமல்ல, நடுக்கடலில் வீசியெறிந்த ஒரு கைக்குட்டை போன்ற ராமேஸ்வரம் தீவே அந்தத் தகிப்பைத் தாங்கமுடியாதென்றுதான் தோன்றியது.

நாள் வாடகைக்கு ஆட்டோ எடுத்துக் கொண்டு சுற்றியபோது, பத்தடிக்கு ஒருதரம் வண்டியை நிறுத்தி எதையாவது சுட்டிக் காட்டி ஒரு கதை சொன்னார், ஆட்டோ ஓட்டிய நண்பர் கண்ணன்.

"அங்க பாருங்க சார். கடலுக்கு நடுவுல ஒரு கெணறு தெரியுதா?"

"ஆமா?"

"ராமர் வெட்டின கிணறு சார். இலங்கைலேருந்து திரும்பி வரசொல்ல, சீதைக்கு தாகம் எடுத்திச்சாம். சட்டுனு தாகம்னா பக்கத்துல அப்ப கடைகண்ணியா உண்டு? பாத்தாரு, ராமரு. ஒரு அம்பெடுத்து சர்ருனு விட்டாரு. அது கடல்ல போய் குத்தி, ஒரு கிணறு தோண்டிருச்சி. கங்கை பொங்கி வந்திரிச்சி சார்..."

ராமர் அம்பு விட்டதற்கும் கடலின் நடுவே கங்கை பொங்கி வந்ததற்கும் ஆட்டோ டிரைவர் கண்ணன் மட்டுமல்ல, ஒட்டு மொத்தத் தீவே சாட்சி சொல்கிறது. ஒரு கதை சொல்லும் பாவனையில் அவர்கள் பேசு





**பா. ராகவன்**

**1**

வதே இல்லை. நேற்று நடந்த சம்பவத்தை இன்று சொல்லும் ஆல் இந்தியா ரேடியோவின் மாநிலச் செய்தியறிக்கை தொனியில்தான் பேசுகிறார்கள். வியப்பெல்லாம் நமக்குத்தான். நம்புவதும் நம்பாததும் நமது பகுத்தறிவையல்ல; வியப்படையும் இயல்பைப் பொறுத்த விஷயம்.

கரையிலிருந்து சுமார் முப்பதடி தள்ளி, கடலுக்கு நடுவே குடிக்கக் கூடிய சுவையில் தண்ணீர்! ஆச்சரியம்தான். அடங்காத வியப்புத்தான். ஆனால் இதற்கான அறிவியல் காரணங்கள் எதுவும் ராமேஸ்வரத்து மக்களுக்கு அவசியமே இல்லை. ராமரின் அம்பு உருவாக்கிய கிணறுதான் அது. அவர்களுக்குச் சந்தேகமே இல்லை.

இன்னோர் இடம். இன்னோர் அற்புதம். ஒரு தண்ணீர்த்தொட்டி வைத்திருந்தார்கள். அளவில் மிகப் பெரியதான தொட்டி, பக்கத்தில் சற்றுத் தள்ளி மூன்று நான்கு பாறைகள் இருந்தன.

"சும்மா தூக்கிப் பாருங்க சார்"

பாறையைத் தூக்கிப் பார்ப்பதில் என்ன இருக்கிறது? கனமாகத்தான் இருந்தது. ஒரு பாறையின் கனம். அதில் எள்ளளவும் குறைவில்லை. ஆனால் அந்தப்பாறையைத் தண்ணீர்த் தொட்டியில் தூக்கிப்போட்டால் தக்கை போல் மிதக்கிறது! அறிவியலைப் பார்த்துச் சிரிக்க இன்னொரு தருணம்.

"இது ஒண்ணும் இல்ல சார். நம்ம அனுமாரு இந்தப் பாறைங்களைப் போட்டுத்தான் ப்ரிட்ஜு கட்டினாரு. எல்லாப் பாறைங்களும் எங்க போச்சின்னு தெரியல. இந்த ரெண்டு மூணுதான் மிச்சம் இருக்குது..."

ராமேஸ்வரத்திலிருந்து லாரி ஒன்றில் ஏறி அன்று மாலை தனுஷ்கோடிக்குப் போயிருந்தேன். நிலப்பரப்பின் கடைசித் துகள் மணல்கள் காலில் பட, எல்லையோரம் நின்று கடலைப் பார்த்துக் கொண்டிருந்த போது இன்னொருவர் பேசினார்.

"அந்தா பாருங்க..."

பார்த்த இடத்தில் கடல்தான். வெளிர் நீலக்கடல். ஆனால் இதென்ன! கடலின் நடுவே ஒரு வெள்ளை வேட்டியை விரித்து வைத்த மாதிரி ஒரு பாதை?

"இதான் சார் ரூட்டு. இந்த ரூட்லதான் அனுமார் ப்ரிட்ஜ் கட்டினார். ராமர் சிலோன்





போன வழி இதான் சார். இப்படியே இப்ப நீஞ்சிப் போனாக்கூட நேரா தலைமன்னாரைத் தொட்டுடலாம்..."

ராமேஸ்வரத்தில் கேள்வியே கேட்கக் கூடாது. கேள்விகள் அற்புதங்களை அழித்துவிடுகின்றன. ஆனால் இத்தனை அற்புதங்களை வைத்துக் கொண்டிருக்கும் அம்மக்கள் அவற்றை அனுபவித்து ரசிக்கிறார்களா என்று பார்த்தால், அங்கேதான் ஏமாற்றம் உண்டாகும். இரண்டு விதமான வாழ்க்கை அங்கே சாத்தியமாகிறது. கடலும் கடல் சார்ந்த வாழ்க்கையும். கோயிலும் கோயில் சார்ந்த வாழ்க்கையும். வேறு தொழில்கள் எதுவும் வளராத இடம் அது.

புண்ணிய யாத்திரையாக வரும் மக்கள் ஓரே பசுவை ஒரு நாளில் இருபது முறை தானம் தரவேண்டியிருக்கிறது. அக்னி தீர்த்தக் கரையில் பேட்ச் பேட்சாகப் பித்ரு தர்ப்பணங்கள் நடக்கின்றன. யார் யாரையெல்லாம் கடைத்தேறுவதற்கு என்று மட்டும் கேட்டுவிடக் கூடாது. கோயிலைச் சுற்றிவரும் வழிகாட்டிகளிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டியது அவசியம். குற்றம் சொல்லிப் பயனில்லை. மண்ணில் முளைத்த புராணக்கதைகளைத் தேடியெடுத்து இடுப்பில் முடிந்து வைத்துக் கொண்டு, அவ்வப்போது பிய்த்துப் பிய்த்து விற்றுத்தான் அவர்களும் பிழைக்க வேண்டியிருக்கிறது. இதனாலேயே அந்த அற்புதக் கதைகளுக்கு அரிதாரப் பூச்சும் சேர்ந்துவிடுகிறது.

**1999**ம் வருடம். இலங்கையில் மீண்டும் ஒரு யுத்தம் மிகத் தீவிரமாக நடக்கத் தொடங்கியிருந்த நேரம். இப்போதும் செய்தியாளனாகத்தான் போனேன்.

காவல்படையினரே தமது ரோந்துப் படகில் வரலாம் என்று சொன்னார்கள். திட்டு வரை போவதற்கில்லை. ஆனால் சுற்றிக் காட்டி விளக்கம் தர இயலும்.

அப்படிப் போய்க் கொண்டிருந்தபோது தான் செய்தி வந்தது. 'கல்கி பத்திரிகையிலிருந்து வந்திருக்கும் ராகவன் எங்கிருந்தாலும் மண்டபத்துக்கு உடனே வரவும். சென்னையிலிருந்து செய்தி வந்திருக்கிறது. அவரது அப்பாவுக்கு மாரடைப்பு.'

ஒரு வினாடி. கடல் கொந்தளிப்பு ஏற்பட்டு சத்தம் மொத்தமும் என் செவிகளில் நிறைவதாக உணர்ந்தேன். ஆனால் பார்வைக்கு அதே அமைதியுடன் தான் இருந்தது கடல். ராமேஸ்வரம் பற்றி நான் சேகரித்திருந்த அத்தனை தகவல்களும் மூளையிலிருந்து மனத்துக்குள் இறங்க ஆரம்பித்தன. என்னால் நிச்சயமாக ஒரு செய்திக்கட்டுரை எழுத முடியாது என்று தோன்றியது. என் சொந்த துக்கம் என்னைச் சுழற்றியடித்துக் கொண்டிருந்தது. அடுத்த வினாடி சென்னையில் இருக்க மாட்டோமா என்று பரபரத்தேன். ராமரைச் சுமந்துவந்த புஷ்பக விமானம் இங்கேதான் எங்கோ இருக்கிறது என்று யாரும் காட்டமாட்டார்களா என்று பைத்தியம் போல் ஏங்கினேன்.

ம்ஹூம். பஸ் பிடித்து மதுரை. நள்ளிரவில் இன்னொரு பஸ் பிடித்து விடியும் நேரம் சென்னை. விஜயா மருத்துவமனையில் அப்பாவைச் சேர்ந்திருந்தார்கள். கண்ணாடிக் கதவின் வழியே நம்பிக்கையூட்டும் புன்முறுவல் ஒன்றையும் அவர் முகத்தில் கண்டேன்.

படபடப்பு கொஞ்சம் குறைந்த வினாடியில் மனத்தில் ஒரு வரி ஓடியது. 'கண்ணுக்குத் தெரியாத புல்லாங்குழலை வாசித்துக் கொண்டிருந்தது காற்று.'

ராமேஸ்வரத்தை நிலைக்களனாக வைத்து, கல்கியில் நாவல் எழுத ஆரம்பித்தேன். 'அலை உறங்கும் கடல்' மூன்று நான்கு யுகங்களுக்கு முந்திப் பிறந்த நீலுப் பாட்டியையும், லௌகிக உலகின் பிரதிநிதியான அப்புசாமி ஐயரையும், அவர் மகன் உமாவையும் தானியேல் நாடாரையும், அருள்தாஸையும் இன்னபிறரையும் - ராமனையும் விபீஷணனையும் கூட ஒரு நேர்க்கோட்டில் மிகச் சுலபமாகக் கொண்டுவர முடிந்தது.

(தொடரும்)

''இது தண்ணீர்ப் பிரச்னையைப் பற்றிய கதை!''

''லீக் ஆயிடாதே!''

- அம்பை தேவா





# பேனா பிடித்த சூப்பர் ஸ்டார்

நூற்று எண்பது படங்களில் நடித்து முடித்துவிட்டார் லேடி சூப்பர் ஸ்டார் விஜயசாந்தி. இத்தனை அனுபவத்துக்குப் பிறகு கதை, திரைக்கதை எழுதாமலிருந்தால் எப்படி? தமிழில் நேரடியாகத் தயாராகியிருக்கும் 'வீர நாச்சியார்' படத்துக்குக் கதை, திரைக்கதை எழுதியிருக்கிறார்.

"வசனத்தையும் எழுதியிருப்பேன். ஆனால் படப்பிடிப்புக்கு நடுவில் பிஜேபி மகளிரணி வேலைகளும் வந்து விடுகின்றன" என்று சினிமா, அரசியல் இரண்டிலும் நான் பிஸி கூறாமல் கூறுகிறார் சாந்தி.



என்ன கதை? விஜயசாந்திக்கு இரட்டை வேடம். வீரம் விளைந்த மன்னர் பரம்பரையில் பிறந்து, தியாகத்தின் வடிவமாக வாழ்ந்து காட்டுவது வீர நாச்சியார் பாத்திரம். ஜான்சியோ ஒரு லேடி பாட்ஷா, புரட்சிப் பெண். அநியாயங்களைத் தட்டிக் கேட்காமல் வெட்டிக் கேட்கும் வீரப் பெண். இந்த பெண் புயலுக்கு தம்பியாக நடனப்புயல் பிரபு தேவா.

வசூல் மழை கொட்ட இந்தக் காம்பினேஷன் உதவுமா?

# இப்படிக்கு சைக்கிள்!

அடுத்த வேளை உணவுக்காக
வீடுதோறும் நீ பேப்பர்
போட்டபோது
கூடவே வந்து
உன் மிதி சுமந்தது
நான்தான்...

எதிர்காற்று சுழன்றடிக்க
உன் மனைவியை வைத்து மிதிக்க
நீ தடுமாறிய சந்தர்ப்பங்களில்
பாலமேற உதவியது
நான்தான்...

எல்.கே.ஜி. ஃபீஸ் கட்டி
உன் மகனை பள்ளிக்கனுப்ப
அடகுக் கடையில் நின்று
அவசரத்துக்கு உதவியது
நான்தான்...

உனது வாண்டுகளின்
மகிழ்ச்சிக்காக
கால்பெடல் அடிக்க உதவி
கல்லும் முள்ளும் குத்தி
காலுடைந்து நின்றதும்
நான்தான்...

இதற்காகவெல்லாம்
இல்லாவிட்டாலும்
உனது தந்தை காலந்தொட்டு
உன்னுடன் இருப்பவன்
என்பதற்காகவாவது
என்னை நீ
கொஞ்சம் மதித்திருக்கலாம்

மாறாக
எப்படி உனக்கு மனசு வந்தது...
புல்லட் வாங்கிய சந்தோஷத்தில்
பழைய இரும்பு வியாபாரியிடம்
என்னைப் போட்டு
பேரீச்சம்பழம் வாங்க?

ஆ.முத்துராமலிங்கம்



# வதை!

பச்சியப்பன்

கொடியெனப் படர்ந்து
மென்பூ அவிழ்வதாய் அத்தனை சுகமானது
அவள் எது சொன்னாலும்

அக்கம் பக்கத்துக் குழந்தைகளுக்கு
தலையின்னி பொட்டிடுவதாகவோ
அதியற்புதமாய் களிமண் பொம்மையியற்றி
கண்ணுக்குக் குன்றிமணி பதிப்பதாகவோ
உயிர்குழைத்த பேச்சுக்காரி அவள்

வரப்பேறிக் கடக்கையில்
இரு பக்கம் நோக்கிவிரையும் கீரிப்பிள்ளையென
வெகுகவனமானது
இதழ்தூரும் வார்த்தைகள்

இரவு பற்றியெனில்
ஒன்றிரண்டு எரிநட்சத்திரமோ
மழை குறித்தென்றால்
தொட்டும் தொடாத வானவில்லையோ
தெரிக்கக் காணலாம் அவள் கண்களில்

கண் திறவாத முயல் குட்டிகளென
என் வலையெங்கும் ஏகப்பட்ட 'உம்'கள்
வெறிநாயாய்த் துரத்திய
காலத்தின் முன் சுருண்டு ரத்தம் கசிந்தாள்
ஒரு நள்ளிரவில்

எம் வாழ்வு குறித்து நீங்கள் பேசுகையில்
கொட்டுகிற என் 'உம்' சுமந்து
எவரேனும் சேர்ப்பீரோ
அவள் பால் மனசில்!



# புத்தாண்டு வாழ்த்துகள்!

**கல்கி வாசகர்களுக்கு சென்னை மைலாப்பூர் B.M. சில்க் சாரிஸின் பணிவான வணக்கங்கள்!**

**உண்மை, உழைப்பு, நேர்மை** ஆகிய இம் மூன்றுக்கும் ஈடு இணை ஏதும் இல்லை. ஏனென்றால் இம்மூன்றையும் கொள்கையாக கொண்டு யார் ஒருவர் வாழ்க்கையிலோ அல்லது வியாபாரத்திலோ பின்பற்றி வருவார்களேயானால் அவர்கள் முதலாவது இடத்தில் மிக உன்னதமான நிலையை அடைந்து அவரை சார்ந்து உள்ளவர்களால் போற்றப்படுபவர்.



ஏ. சந்திரசேகரன்

# தரமே தாரக மந்திரம்!

அதே போல் வியாபாரியாக இருந்தால் மேலே குறிப்பிட்டுள்ள மூன்று கொள்கைகளுடன் **தரம், நாணயம், நம்பிக்கை** ஆகிய மூன்றையும் தாரக மந்திரமாக பின்பற்றினால் இப்பொழுது உள்ள கவர்ச்சிகரமான ஆடம்பரமான தள்ளுபடி மற்றும் விளம்பரம் ஆகியன நிறைந்துள்ள இந்த நேரத்திலும் வாடிக்கையாளர்களை அவர்களிடம் இருந்து பிரிக்க முடியாது என்பது அனுபவ பூர்வமான உண்மை. இந்த கால மக்களின் பல்வேறுபட்ட ரசனைகளை புரிந்து கொண்டு அதற்கு ஏற்றாற்போல் நாங்கள் ரூ.4,000 முதல் 10,000 வரை உள்ள சேலைகளின் டிசைன்களை ரூ.300 முதல் 2,500 விலை உள்ள சேலைகளில் எங்களது ஒப்பந்த தறியின் மூலம் தயார் செய்து அனைத்து தரப்பினரும் பயன்பெறும் வகையில் விற்பனை செய்வது தனி சிறப்பு. மற்றும் ஒரு தனிப்பட்ட சிறப்பு என்னவென்றால் எங்களிடம் வாங்கும் எந்த விலை உள்ள சேலைகளுக்கும் ***Money Back Guarantee*** கொடுக்கிறோம்.

எங்களது நோக்கம் : Genuine Silk, Fair Price, Money Back Guarantee

Step in and feel the difference

முக்கிய குறிப்பு : எங்களிடம் சேலைகளின் தரத்தையும், நியாயமான விலையும் தவிர வேறு எந்த பரிசு பொருட்கள் கிடையாது என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்பொழுதுதான் நம் மக்கள் தள்ளுபடி என்ற மாயையிலிருந்து சற்று விலகி நியாயமான விலையில் தரமாக உள்ளதா என்று அலசி பார்த்து வாங்க ஆரம்பித்து உள்ளார்கள். அதற்கு தகுந்தாற்போல் அலசி பார்த்து வாங்க வரும் மக்களின் தன்மையை புரிந்து கொண்டு அதற்கு ஏற்றாற்போல் கடந்த 14 ஆண்டு காலமாக சென்னை மைலாப்பூர் நெ.5 வடக்கு மாடவீதியில் உள்ள **B.M. சில்க் சாரிஸ்** என்ற நிறுவனம் நிரந்தர வாடிக்கையாளர்களின் ஆதரவினால் நடைபெற்று வருகின்றது. அவர்களுக்கு விளம்பரம்,

**வலைபாயுதே**
(புதிய வெர்ஷன்)



# நெ.1 மெயில் குதிரை

**டேட்டா :**

4 MB கொடுத்துச்சு. அப்புறம் 250 MB கொடுத்துச்சு. Yahoo-வைச் சொல்றேன். ஆனா Gmail-க்கு அமோக ஆதரவு பெருகப் பெருக, Yahoo-ம் தன்னோட வாடிக்கையாளர்களுக்கு, அதைச் சமாளிக்க 1 GB கொடுக்கப் போகுதாம். விடுமா Google. தன்னோட Gmail வாடிக்கையாளர்களுக்கு ஒரு 'பளீர்' அறிவிப்பு கொடுத்திருக்கு. என்ன? எவ்ளோ இடம் வேணுமோ எடுத்துக் கோங்க. உங்க இன்பாக்ஸ்ல இருந்து எதையும் அவுட் (டெலிட்) பண்ண வேண்டாம்னு அறிவிச்சுருக்கு. தேவையான மெயில்களை 'குறிப்பு வார்த்தைகள்' மூலமா தேடி எடுத்துக்கலாம். Alert வசதி மூலமா, நமக்குத் தேவையான தலைப்புகளில் மெயிலை வரவழைச்சுக்கலாம். இப்படி ஏகப்பட்ட வசதி கொடுக்கிற Gmail தான் இப்போ நம்பர் ஒன் மெயில் குதிரை.

**டௌன்லோட்**

ஒரு ஃபைலை, Recycle binல இருந்தும் அழிச்சுட்டீங்க. அப்புறம்தான் அந்த ஃபைல் தேவைன்னு தெரியுது. அதே மாதிரி உங்களுக்கு ரொம்பத் தேவையான ஒரு ஃபைல் தானாகவே அழிஞ்சி போயிடுது. அய்யய்யோ! என்ன செய்யன்னு 'வைரஸ்' தாக்குன மாதிரி உட்கார்ந்திருக்கீங்களா? recoveryfiles.com போங்க. அவங்க தருகிற சாப்ட்வேரை இறக்குமதி பண்ணுங்க. நீங்க இழந்த பைலை, இயன்றவரை திருப்பித் தர முயற்சிக்குது இந்த சாப்ட்வேர். (மாதிரி சாப்ட்வேர் இலவசமாகக் கிடைக்கிறது. முழுமையா வேணும்னா, துட்டு கட்டணும்)

**சுவாரசியம்**

ஏதாவது புதுப் படத்தின் ஆடியோ வெளியாகிறதென்றால், பாடல்களை நெட்டிலிருந்து MP3ஆக இலவசமாய் சுடச்சுட இறக்குமதி பண்ணிக் கேட்பதற்காகவே தனிக் கூட்டமே இருக்கிறது. அவர்கள் அதற்கு மொய்க்கும் தளம் mohankumars.com. போன வாரம் மும்பை எக்ஸ்பிரஸ் பாடல்கள் வெளிவந்த உடனேயே இங்கே கிடைத்தது. இத்தளம் எப்பவுமே செம ஹாட்டு மச்சி!

**ப்ரௌஸர்**

## அட!




Infosys நாராயணமூர்த்தி உயரத்துக்கு வந்தது இப்படித்தான்!

# தகதிமிதா



சீசன் சமயத்துல இசைக்கு முக்கியத்துவம் தர்றவாளாச்சேன்னு, கல்கி எடிட்டர் ஃபோன் பண்ணினதும், மறுக்க முடியாம படத்துக்குப் போனேன். போனப்புறம்தான் புரிஞ்சுது, இந்த இசை விமர்சகன் குப்புடுவை ஏன் 'தகதிமிதா' பார்த்துட்டு எழுதச் சொன்னான்னு. படத்துலே மொத்தம் எட்டுப் பாட்டு. எட்டையும் லட்டுன்னுட்டா என்னை மாதிரி ஒரு புளுகன் லோகத்துலேயே இருக்க முடியாது ஸ்வாமி! ஆனா நம்ம பிள்ளையாண்டான் டி.இமானை லேசுப்பட்ட ஆளுன்னு கொறைச்சு எட போட்டுட முடியாது.

ஒரே கல்லூரியிலே படிக்கிற இளசுகள் காதல் பண்றது ஒண்ணும் புதுசில்லே. ஆனா, "காதலை யாரடி மொதல்ல சொன்னது, நீயா இல்லை நானா?"ன்னு ஹீரோவுக்கு ஒரு சந்தேகம் வந்து பாடுறான் ஒரு பாட்டு! ஆஹா! கீரவாணியிலே கடைஞ்சு கடைஞ்சு போட்டுருக்கான் பேஷான ஒரு மெலடி மெட்டு! கீரவாணியை அதோட விட்டானான்னு பார்த்தா, இல்லே! 'இது கல்லூரிக் காதல்'ன்னு தொடங்குற பாட்டை, கானடாவையும், கீரவாணியையும் கலந்து ஜமாய்ச்சுருக்கான்.

டிரஸ் அணியறேன்ற பேர்லே ஹீரோயின் பொண்ணு கட்பீஸ் சென்டர் முதலாளி மாதிரி வர்றா! அவ ஒருத்தி போதாதுன்னுட்டு நண்டும் சிண்டுமா அரை டஜன் வடநாட்டுப் பெண்கள், உடம்பு முழுக்க ஃபிராஞ்ச் ஆயிலைத் தடவிண்டு ஸ்நானம் பண்ணப் போறவா மாதிரி பூசிண்டு, இப்போ அதென்னமோ டான்ஸ் சொல்றானே...ம்:- குத்தோ குத்து கும்மாங்குத்துன்னு குத்து டான்ஸ் ஆடுறா! இவாளுக்கு மட்டும் இமான் மொத்தம் மூணு பாட்டு போட்டிருக்கான். எல்லாமே மைனர் ஸ்கேல்! எனக்குத்தான் கஷ்டமா காதுலே விழுந்ததுன்னு பார்த்தா, தியேட்டர்லே என்னைத் தவிர எல்லாருக்கும் இஷ்டமா இருந்த மாதிரி எழுந்து நின்னு ஆடுறா!



அப்புறம் தகதிமிதான்னு படத்தோட டைட்டிலை பல்லவியா வெச்சு ஒரு பாட்டு. காப்பி ராகத்தை அஞ்சு நோட்ஸுக்குள்ளே அடக்கி வெச்சு, நன்னா நுரை வர்ற அளவுக்கு ஆத்தியிருக்கான்.

முக்கியமா சொல்ல வேண்டியது! நல்ல நல்ல வார்த்தைகள் கேட்டு ரொம்ப ஹெல்த்தியா பாடல் எழுதற நா. முத்துகுமார், ரொம்ப மட்டியா மூணு குத்துப் பாட்டு எழுதியிருக்கார்! ஊதுற சங்கை ஊதிட்டேன்! இப்படியே போனா சரிப்படாது ஸ்வாமி! என்னது? படத்தோட கதையா? விவேக் பத்தி எதுவும் சொல்லலையா?

ஆரபி ராகம் மாதிரி ஆதிகாலத்து காதல் கதை! எப்பவும் ரசிக்கிற மோகனம் மாதிரி விவேக் விளாசித் தள்றார்! வேறென்ன சொல்றது போங்கோ!

**பழைய டெல்லியிலிருந்து குப்புடு**





# நல்ல காரியம் நடக்குது!

**- புதிய பகுதி**

டீ.வி.யிலும் சினிமாவிலும் அதீத ஆபாசம், வன்முறை சித்திரிக்கப்படுகிறது. பத்திரிகைகளிலும் வக்கிரமான விஷயங்கள், பாலுணர்வைத் தூண்டக் கூடிய மலிவு அம்சங்கள். இப்படிப்பட்ட சூழ்நிலையில் வளர்ந்து வரும் இளைஞர்களுக்கு, இவற்றால் ஏற்படும் பாதிப்புகள் கொஞ்ச நஞ்சமல்ல.

நமது ஸநாதன தர்மம், கலாசாரம், நல்லொழுக்கம் போன்றவற்றை அறியக் கூடிய வாய்ப்பு, கல்வி முறையில் இல்லை. வீட்டில் உள்ள பெரியவர்களுக்கு இதற்கெல்லாம் ஏது நேரம்? ஓடிக் கொண்டேயிருக்கும் இந்த அவசர யுகத்தில் இதைப் பற்றி யாரும் கவலைப்படுவதாகவும் தெரியவில்லை.

சரி... இதெல்லாம் தெரிந்ததுதானே? வருந்தி அனுதாபம் தெரிவித்து விட்டால் போதுமா? இளைய சமுதாயத்தை நல்வழிப்படுத்த வேண்டாமா?

ஹரி கதை விற்பன்னர், கல்யாணபுரம் ஆர். ஆராவமுதாச்சாரியார் 'ஷ்ரேயஸ்' என்றொரு அமைப்பை ஆரம்பித்திருக்கிறார். இங்கே பதினைந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு அடிப்படை சமஸ்கிருதம், ஸ்லோகம் போன்றவற்றை இலவசமாக சொல்லித் தருகிறார்கள். ஆன்மிகப் போட்டிகள் நடத்தி பரிசு தந்து ஊக்குவிக்கிறார்கள். மாதந்தோறும் இரண்டாவது ஞாயிறுகளில் நீதி நெறி சிறப்புரைகளை சென்னை, நாரத கான சபா மினி ஹாலில் நடத்துகிறார்கள். சமயம் கிடைக்கும் போதெல்லாம் முதியோர் இல்லங்களில் ஆன்மிகச் சொற்பொழிவுகளையும் பஜனைகளையும் செய்து வருகிறார்கள்.

இது தவிர, ஏழைகளுக்கு இலவச அடிப்படைக் கல்வி, சென்னையில் ஹரிகதைப் பயிற்சி (தஞ்சையில் ஏற்கெனவே தொடங்கப்பட்டுவிட்டது) என எதிர்காலத்தில் தங்கள் பணிகளை விரிவாக்கவும் திட்டமிட்டுள்ளனராம். இந்த நல்ல காரியத்தில் பங்கு பெறவோ, பயன்பெறவோ விரும்புபவர்கள் 044 - 24958238 (சென்னை) அல்லது 04362 - 236210 (தஞ்சை) தொலைபேசி எண்களில் தொடர்பு கொள்ளவும்.

உங்கள் பகுதியிலும் இதுபோன்ற தன்னார்வத் தொண்டு நிறுவனங்களோ, அறக்கட்டளைகளோ நல்ல காரியம் செய்து வந்தால், அது பற்றிய தகவல்களை புகைப் படங்களுடன் அனுப்புங்க! பலரும் பயனடைய பிரசுரிக்கிறோம்.

- ஆர்.

# குழந்தைபெற முக்கூட்டு மருத்துவம்

இந்த உலகம் என்றென்றும் அழியாமல் நிலைத்திருக்க வேண்டுமானால் வாரிசுகள் பிறந்து கொண்டே இருக்க வேண்டும். ஆனால் திருமணமான சில தம்பதியரில் தனது ஆஸ்தியை ஆளவும், தனது பரம்பரை வம்சத்தை இனவிருத்தி செய்யவும், பெற்றோரைக் காப்பாற்றவும், கடைசிக் காலத்தில் ஈமக் கிரியைகள் செய்யவும் தங்களுக்குக் குழந்தைகள் பிறக்க வில்லையே என்று ஏங்கி கண்ணீரோடு கோயில் குளங்களை சுற்றிக் கொண்டும், மந்திர தந்திரங்களில் ஈடுபட்டும், தாயத்துக்களை கட்டிக் கொண்டும், அரச மரத்தையும் - வேப்ப மரத்தையும் சுற்றிக் கொண்டும் சிலர் நரபலி கொடுத்துக் கொண்டும், வயோதிக காலம்வரை தங்களது வாழ்நாளை வீணாக்கிக் கொள்ளுகிறார்கள். அதோடும் இல்லாமல் பெண்கள் மலடி என்ற பட்டத்துடன் வாழ்ந்து வருகிறார்கள். இதனால் கணவராலும், உறவினராலும் வெறுக்கப்பட்டு, ஒதுக் கப்படுகிறார்கள். சிலர் தற்கொலை முயற்சியிலும் ஈடுபடுகிறார்கள்.

**இவர்களின் துன்பங்களைப் போக்க திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியிலும், சென்னை வடபழனி 100 அடி சாலையிலும் 'நவீன வைத்தியாலயா' என்ற ஆஸ்பத்திரி நடத்திவரும் 'மருத்துவ திலகம்' டாக்டர் A. அர்ஜுனா, டாக்டர் V. A. ஆண்டாள் அர்ஜுனா, டாக்டர் M. A. சரவணன் ஆகிய மூவரும் ஓமியோ சித்த - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவ சிகிச்சையில் குழந்தை பாக்கியம் உண்டாக்கித் தருகிறார்கள்.**

"எங்களிடம் சிகிச் சைக்கு வரும் கணவன் - மனைவி தம்பதியரை பரிசோதித்து பார்த்ததில் ஆண்களுக்கு 60 முதல் 70 சதவிகித குறைபாடும், பெண்களுக்கு 30 சதவிகித குறைபாடும் இருப்பது தெரிய வருகிறது. அதனால் குழந்தை பெறுவதில் கணவன் மனைவி இரு வருமே பொறுமையுடன் பொறுப்புடன் சிகிச்சை பெற முன்வர வேண்டும்.

சில ஆண்களுக்கு உயிரணு உற்பத்தி அறவே இருப்பதில்லை. சிலருக்கு உயிரணுக்கள் உற்பத்தி குறைவாகவே இருக்கும். இதற்கு உண்டான காரணங்கள் - அம்மை நோயினாலும், புட்டாலம்மையினாலும், மஞ்சள் காமாலையாலும், டைபாய்டு ஜுரத்தாலும், முறையற்ற செக்ஸ் பழக்க வழக்கங்களாலும் உயிரணு உற்பத்தி பாதிக்கப்படுகிறது. இதை முக்கூட்டு மருத்துவத்தால் சிகிச்சையளித்து உயிரணு உற்பத்தி செய்து குழந்தை பிறக்கச் செய்கிறோம்.



• டாக்டர் A. அர்ஜுனா, டாக்டர் V. A. ஆண்டாள் அர்ஜுனாவுடன் திருவண்ணாமலை மாவட்டத்தில் உயிரணு உற்பத்தியாகியும் கருக்குழாய் அடைப்பு நீங்கியும் குழந்தை பெற்ற ரங்கநாதன் - கீதா தம்பதிகள்

**விழுப்புரம் மாவட்டம் செஞ்சியைச் சேர்ந்த முருகன் - தமிழரசி தம்பதியர் கருக்குழாய் அடைப்பு நீங்கியும், உயிரணு உற்பத்தி ஆகியும் 20.8.2002ல் முக்கூட்டு சிகிச்சையால் ஆண் குழந்தை பெற்றார்கள். இவர்களுக்கு கடந்த மார்ச் 2005 முதல் வாரத்தில் மீண்டும் ஒரு ஆண் குழந்தை பிறந்துள்ளது.**

பெண்களுக்கும் பல குறைபாடுகள் இருக்கிறது. மாதவிடாய் கோளாறுகள், கருப்பை ஒவரிகள் சிறுத்திருத்தல் (வளர்ச்சியின்மை), கருப்பை ஒவரிகளில் கட்டிகள், கருமுட்டை உண்டாகாதிருத்தல், கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்பட்டிருத்தல், கருமுட்டை வெடிக்காமலிருத்தல் - சிற்றின்பத்தில் சில பெண்களுக்கு நாட்டம் உண்டாகாமலிருத்தல் போன்ற காரணங்களை முக்கூட்டு மருத்துவ சிகிச்சை அளித்து நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறோம்.

சென்ற மாதம் திருவண்ணாமலை மாவட்டம் சாத்தனூர் அணையில் சுப்பிரமணி தம்பதியர் முக்கூட்டு சிகிச்சையால் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

பெங்களூர் சிவாஜி நகரில் ராமு தம்பதியருக்கு 20 ஆண்டு குழந்தை இல்லாமல் இருந்து உயிரணு உற்பத்தி ஆகி முக்கூட்டு சிகிச்சையில் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

துபாயில் முருகன் - வள்ளி தம்பதியருக்கு உயிரணு உற்பத்தி அதிகரித்தும், கருக் குழாய் அடைப்பு நீங்கியும் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

கோயம்புத்தூர் ஆர்.எஸ். புரத்தில் அறவே உயிரணு உற்பத்தி இல்லாத மகேஷ் என்பவருக்கு எங்கள் சிகிச்சையில் 110 மில்லியன் கவுண்ட்டும், 20% மொட்டிலிட்டியும் (உயிரணு) உற்பத்தி ஆகியுள்ளது. இது ஒரு பெரிய சாதனை.

தஞ்சாவூரில் ராமையா என்பவருக்கு உயிரணு உற்பத்தி அறவே இல்லாதிருந்து தற்போது (கவுன்ட்)110 மில்லியனும், 60% மொட்டிலிட்டியும் உற்பத்தி ஆகியுள்ளது.

உலகின் பல நாடுகளிலிருந்து வந்தும், இந்தியாவில் பல மாநிலங்களிலிருந்து வந்தும் எங்கள் நவீன வைத்தியாலயாவில் ஓமியோ - சித்த - ஆயுர்வேத முக்கூட்டு சிகிச்சை பெற்று குழந்தை பாக்கியத்துடன் வாழ்ந்து வருகிறார்கள். பலர் தற்போது சிகிச்சை பெற்று வருகிறார்கள். நூற்றுக்கு தொண்ணூறு சதவிகிதம் பேர் குழந்தை பெற்றுக் கொள்ளுகிறார்கள். நீங்களும் குறைந்த செலவில் குழந்தை பெற வேண்டுமானால் எங்களை உடனே சந்திக்கவும்" என்று அழைக்கிறார்கள்.



டாக்டர்
M.A.சரவணன் B.H.M.S.



மருத்துவ திலகம்
டாக்டர் A.அர்ஜுனா,
டாக்டர் V. A.ஆண்டாள் அர்ஜுனா



"ஃபேஷன் ஷோக்களால் நமது கலாசாரம் சீரழிகிறது என்று சொல்பவர்களெல்லாம் அறியாமையில் பேசுகிறார்கள். அவையெல்லாம் ஓர் ஆளை அப்படியே மாற்றிடும் அபூர்வ சக்திவாய்ந்த திருவிழாக்கள் தெரியுமா?" என்று சண்டிகரைச் சேர்ந்த அமல்தீப், சென்னை மண்ணில் நின்றுகொண்டு நெஞ்சுரமாகப் பேசும் பொழுது, நம்பாமல் இருக்க முடியுமா?



சென்னை, வேளச்சேரியில் அண்மையில் நடந்த 'எல்-மெக்னிஃபிஷியா' என்ற இளைஞர் கலைவிழாவில் கலந்துகொண்டு செகண்ட் ரன்னர் அப் பரிசுப் பெற்ற அழகுப் பதுமை ஆயிற்றே! நம்புவோம்! நம்புவோம்!



'சென்னையிலுள்ள அனைத்துக் கல்லூரி மாணவமணிகளுக்கான அழகு, திறமை, கலந்த உற்சாகப் போட்டி' என பளபளப்பான அறிவிப்புகள் வந்தால், குவியாமல் இருக்குமா விண்ணப்பங்கள்? நூற்றுக்கணக்கான பேரை பரிசீலித்து, மணிமணியாகப் பதினான்கு பேரை மட்டுமே தேர்வு செய்து, பத்து நாட்கள் பயிற்சிகள் தந்து, மேடையேற்றியிருக்கிறார்கள். அழகுடன் புதுமை, திறமை, இளமை என தனித்தனியாக ரசித்து, மதிப்பெண்கள் போட்டு தேர்வு செய்திருக்கிறார்கள் இரண்டு அணியினர்!

டாக்டர் உ.வே. பெஹ்ரன்ஸ் என்கிற ஜெர்மானிய ஜியோடிஸ் நிறுவனத் தலைவர், முன்னாள் இஸ்ரோ விஞ்ஞானி டாக்டர் பிரேம்குமார், சென்னையின் பிரபல மகப்பேறு மருத்துவர்

# அழகன், அழகி,



டாக்டர் சியாமளா போன்றோர் ஒருபுறமும், விக்ரம், விஜய், சூர்யா, நாசர் போன்ற நட்சத்திரங்கள் மறுபுறமும் வீற்றிருந்து, கலை விழாவை சிறப்பித் திருக்கிறார்கள்.



"அழகுப் போட்டின்னா, விதவிதமான ஆடை அலங்காரத்தோட பூனை நடை நடக்கிறது மட்டுமில்லை. பற்பல விஷயங்களைக் கூர்ந்து கவனித்தே கிரீடம் சூட்டுகிறார்கள். விக்ரமின் ஹேர் ஸ்டைலிலும், சூர்யாவின் சார்மிங்கானப் புன்னகையிலும் என்னை மறந்து கோட்டை விட்டு விடுவேனோ என்று கூட பயந்தேன் நல்லவேளை!" என்று நெஞ்சில் கை பதித்து அழகாகப் புன்னகை பூக்கிறார் மிஸ். எல்-மெக்னிஃபிஷியா 2005 அழகு ராணி கரீஷ்மா!

தன் நண்பன் எஸ்.எம்.எஸ்.



அனுப்பியிருக்காவிட்டால், மிஸ்டர்.எல். மெக்னிஃபிஷியா 2005 வாக தேர்வு பெற்ற ஆகாஷுக்கு இப் போட்டி பற்றி தெரிந்திருக்க வாய்ப்பே

# அபூர்வசக்தி!



இல்லையாம்!

''சும்மா ஜாலியா இருக்கும்னு நினைச்சுதான் பயிற்சிக்குப் போனேன். ஆனால் வாழ்க்கையில் பயனுள்ள விஷயங்களை கற்றுக் 'கொடுத்தாங்க. குறிப்பா, மேடை ஏறியதும், பார்வையாளர்களைக் கட்டிப் போடும் வித்தையைக் கற்றுக் கொண்டேன். போட்டி நாளில் உணவைக் குறைத்து, வெறும் பழங்கள் மட்டும் சாப்பிட்டேன். கூலா ஜெயிச்சு, வீட்டுக்குப் போகும்போது பத்தாயிரம் ரூபாய் செக்கோடு போனேன்' என்றார் ஆகாஷ், பூரிப்பாக!

மயிரிழையில் முதல் பரிசைக் கோட்டை விட்ட சையத்திடம் அந்த வருத்தமே இல்லை.

''செம ஃபன்னுங்க! ஆட்டம், பாட்டம்னு அசத்திட்டோம்ல... இப்ப காலேஜ்ல நான்தான் ஃபேஷன் பிரின்ஸ்'' என்றார்.

''இன்றைய மாணவர்கள் எம்.பி.ஏ. எம்.சி.ஏ., என டிகிரிகளாக வாங்கி அடுக்கி விடுகிறார்கள். ஆனால் மேடையில் ஏறி இரண்டு வார்த்தை பேசத் தெரிவதில்லை. ப்ரெஸன்டபிளாக இருப்பதில்லை. தன்னம்பிக்கையோடு இன்டர்வியூக்களைச் சந்திக்கத் தெரிவதில்லை. அழகுணர்ச்சியும், தனித்தன்மையும் மிளிர காரியங்களைச் சாதிக்க, நிறைய உற்சாகம் தேவை. அதை ஊக்குவிக்கவே, இப்படி ஒரு பிரம்மாண்டமான கலை விழாவை நடத்தினோம். பற்பல கல்லூரிகளிடமிருந்து பாராட்டுகள் வந்திருப்பதால், இனி ஆண்டுதோறும் ஒரு சமூக சேவையாகவே நடத்தவிருக்கிறோம்'' என்கிறார் செயின்ட் பிரிட்டோஸ் கல்வி நிறுவனத் தலைவர் ஸேவியர் பிரிட்டோ!

- எழில்



* 'மும்பை எக்ஸ்பிரஸ்' படத்தில் கமல் - வையாபுரி

# "வாய்ப்பில்லாமல் இருந்தேன்"

"நான் இது வரைக்கும் எந்தத் தயாரிப்பாளரிடமும் என் சம்பளம் எவ்வளவு, எத்தனை நாள் கால்ஷீட் என்றெல்லாம் கேட்டதே கிடையாது. ஆனா என்னன்னு தெரியலை. மூணு மாசம் பட வாய்ப்பே இல்லாம தவிச்சேன். அப்போ தான் கமல் சார், 'மும்பை எக்ஸ்பிரஸ்'ல சோலோ காமெடியனா நடிக்கக் கூப்பிட்டாரு. அதுக்கப்புறம் வரிசையா ஹிந்தி, மலையாளம், தெலுங்குனு பிஸியானாலும், இப்பவும் தமிழிலிருந்து ஒரு வாய்ப்பும் வரலை. யாரால எனக்கு இப்படி நடக்குதுன்னு என்னால புரிஞ்சுக்கவே முடியலே" என்று ஸ்ருதி இழந்து பேசுகிறார் வையாபுரி.

'மும்பை எக்ஸ்பிரஸ்' மிகப் பெரிய ப்ரேக் என்று பிரிவியூவில் படம் பார்த்த கிரேஸிமோகன், மதன் போன்ற ஹியூமரிஸ்ட்களெல்லாம் சொல்ல... சந்தோஷத்தில் பூரிக்கிறார் வையாபுரி.

"நாற்பது நாள் மும்பையில் இருந்தேன். நான், கமல் சார், ரமேஷ் அர்விந்த், பசுபதி நாலுபேரும்தான் கதைப்படி குழந்தையைக் கடத்தி சுலபமாகப் பணம் சம்பாதிக்க முயற்சிப்போம். ரொம்ப ஜாலியான படம். மும்பை ப்ரஸ்மீட்ல கமல்சார் என்னை அறிமுகப்படுத்தும்போது, உங்க ஊர் ஓம்பூரி, அம்ரிஷ்பூரி மாதிரி எங்க ஊரு வையாபுரி என்றார். அடுத்த நாள் ஒரு ஹிந்திப்பட வாய்ப்பு வந்தது. ஊமை வேடம்கிறதால மொழிப் பிரச்னை வரலை. அடுத்தது கமல் ஏஷியா நெட்ல பேட்டி கொடுக்கும் போது என்னைப்பத்தி சொல்ல, மலையாளத்திலும் அடித்தது சான்ஸ்" என்று கமல் புராணமாகப் பாடுகிறார் வையாபுரி.

"நான் சினிமாவுக்குள் நுழையாத போதே வடபழனி நூறடி ரோட்ல கமலோட காண்டஸா கிளாஸிக் 2345 காரைப் பார்க்கறதுக்காக கால் கடுக்க நிற்பேன். பார்த்தவுடனே கை தூக்கி கும்பிடு போடுவேன். அப்படியிருந்த நான், ஹேராம் ப்ரீவியூ ஷோவுக்காக கமலோட காரிலேயே போயிருக்கேன். என் சினிமா வாழ்க்கையை விளக்கேத்தி வைச்சவர். அந்த விளக்கு மட்டும் இல்லைன்னா நான் அவ்வளவுதான். ஏன்னா எனக்கு நடிப்பைத் தவிர வேறெதுவும் தெரியாது" என்று கண்ணீர் மல்குகிறார்.

சரி, "தமிழ்ப் புத்தாண்டில் 'சந்திரமுகி', 'மும்பை எக்ஸ்பிரஸ்', 'சச்சின்' - இவர்களில் யார் ஜெயிப்பார்?" என்று கேட்டால் அடித்துச் சொல்கிறார், "நிச்சயம் மும்பைதான் ஜெயிக்கும்"

- செந்தில்

## வையாபுரி சோகம்!

ஒரு நடிகையால், தன் பாய்ஃப்ரெண்ட் பற்றியும், தன் நாய்க்குட்டி பற்றியும்தான் விரிவாகப் பேட்டியளிக்க முடியுமா என்ன? நாட்டு நடப்புகள் பற்றியெல்லாம் அவர்களுக்கு அக்கறை இருக்காதா? நடிகை த்ரிஷாவைச் சந்தித்து நேரடியாய்க் கேட்போம்...





**தமிழ்நாடு சட்டசபையில் ஆளுங்கட்சியும், எதிர்கட்சிகளும் அனுதினமும் முட்டிக் கொள்கிறார்களே...?**

"பேப்பரில் வரும் சட்ட சபைச் செய்திகளை அம்மா என்னிடம் காட்டும்போதெல்லாம் பயங்கர அதிர்ச்சியா இருக்கும். சண்டை போடுபவர்கள் அனைவருமே பெரியவர்கள். அடுத்த தலைமுறைக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டியவர்கள். இவர்களிடமிருந்துதான் நாம் நல்ல விஷயங்களைக் கற்றாக வேண்டும். பள்ளியில் படிக்கும்பொழுது ஆளுக்கொரு கேங்க் வைத்து சண்டை போடுவோமே, அது போலிருக்கிறது சட்டசபை. நிகழ்வுகள். ஹி..ஹி... ஹி...



**பட்ஜெட் வெளியிடும் பொழுது, எந்த விஷயத்தை அதிகமாக கவனிப்பீர்கள்?**

"நான் அதிகமாகப் பயன்படுத்தும் காஸ்மெடிக்ஸ், என் கார் அதிகமாக பயன்படுத்தும் பெட்ரோல்/டீசல் இரண்டின் விலையேற்றத்தையும் கவனிப்பேன்."

**தமிழ் சினிமாவில் பாலியல் காட்சிகள் அதிகரித்திருப்பது சமூகத்தைக் கெடுக்காதா?**

"முன்பு மாதிரி அப்பாவியாக யாரும் இல்லைங்க. நல்லது கெட்டது நாலும் தெரிந்திருக்கிறார்கள். சமூகத்தை சினிமாவில் பிரதிபலிக்கும்பொழுது ஷாக்காகத்தானிருக்கும். ஒரு கோபத்தில் 'உன்னைக் கொன்னுடுவேன்' என்பது மாதிரிதான், ஜாலியான மூடில் 'கல்யாணந்தான் கட்டிக்கிட்டு' என்று பாடுவதும். இதில் என்ன ஆபாசம் உள்ளது? சந்தோஷம் பொங்கும் பொழுது என்ன வேண்டுமானாலும் உளறலாம். ஆபாசம் என்பது அவரவர் கண்ணோட்டத்தைப் பொறுத்தது. என்ன 'கில்லி' மாதிரி பதில் சொல்றேனா...?

**சங்கராச்சாரியார் கைது பற்றி...?**

# த்ரிஷா என்ன

## குட்டித் தலைவர்...

## மோடி...

## தமிழ்ப் பாதுகாப்பு...

## சங்கர மட சர்ச்சை...

''கடவுளுக்கு நிகரான ஒரு மனிதரை போலீஸ் கைது செய்த பொழுது அதிர்ச்சியாகத்தான் இருந்தது. வழக்கின் தீர்ப்பு வந்த பிறகுதான் எது நிஜம், எது பொய் என்று தெரியும். ஆனால் மக்கள் வழிபடுகிற ஒருவர் இது மாதிரியான குற்றச்சாட்டுகளில் சிக்கும் பொழுது, 'ம்ஹூம், இவர்களே இப்படி இருக்கிறார்கள். நாமும் அது போல் இருந்தாலென்ன' என்று நினைக்க வேண்டி வரும். ஆக, உயர்ந்த பொறுப்பிலுள்ளவர்கள் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது.''

(பிரச்னையில் மாட்டி விடுகிறீர்களே என விழிகள் கெஞ்சுகின்றன. அந்த நேரம் தன் எஜமானி ஆபத்தில் மாட்டி விட்டதை மோப்பம் பிடித்த செல்ல கேட் பரீஸ் தாவி வந்து நம்மைப் பார்த்து உர்... ர்!)

**மோடிக்கு அமெரிக்கா விசா வழங்க மறுத்துவிட்டதே...?**

''ஒரு கல்லூரி மாணவருக்கு விசா வழங்கும்பொழுதே 1008 கேள்விகள் கேட்கும் யு.எஸ்., மோடி விஷயத்தை இன்னமும் நாசுக்காகக் கையாண்டிருக்கலாம். மோடி இங்கே கலவரத்தைத் தூண்டியவர் என்று சொல்லப் பட்டாலும், ஒரு தனி மனிதர் அவ்வளவு பெரிய அமெரிக்காவை என்ன செய்துவிட முடியும்?''



**ராமதாஸ், திருமாவளவனின் தமிழ்ப் பாதுகாப்பு குறித்து உங்கள் கருத்து?**

''வெல். நான் பெரும்பாலும் ஆங்கிலத்தில்தான் பேசுவேன். அதற்காக தாய் மொழியான தமிழை மறக்க முடியுமா? தமிழை வைத்து மட்டுமே பிழைப்பு நடத்த முடியாது என்பதால்தான், வேறு மொழிகளைக் கற்கிறோம். உலகம் முழுக்கச் சுற்றினாலும் என் அம்மாவை மறப்பேனா? அது போல்தான் தமிழும். மற்ற மொழிகள் கற்பதாலும் பேசுவதாலும், தமிழை யாராலும் அழித்து விட முடியாது.''

**சரி, ஸ்டாலின் குட்டித் தலைவரா?**

(சிறிது நேரம் தயங்குகிறார்.) ''ஒரு தலைவர் என்றால் அவருக்கு வலது கை என்று ஒருவர் இருப்பது வழக்கம். மற்றபடி ஸ்டாலின் குட்டித் தலைவரா என்று விமரிசிக்க எனக்கு அரசியலில் அறிவோ, பக்குவமோ, வயதோ கிடையாது!''

**தமிழ்நாட்டில் திராவிடக் கட்சிகளுக்கு மாற்று தேவையா?**

''புதிய கட்சிகளையும் புதிய மாற்றத்தையும் நாம் வரவேற்க வேண்டியது காலத்தின் கட்டாயம். இருந்தாலும் எந்த மூன்றாவது அணியாக இருந்தாலும், அனுபவசாலிகளான அதிமுக, திமுகவின் உதவியில்லாமல் ஆட்சி அமைக்க முடியாது. ரைட்?''

**காவிரிப் பிரச்னைப் பற்றி உங்களுக்கு**

# நினைக்கிறார்?...



"என் தலைவருக்குக் கல்யாணம் ஆயிடுச்சு. எனக்கும் பண்ணி வைப்பா."

"யாருடா உன் தலைவர்?"

"தனுஷ்!"

- வசந்தி வள்ளுவன்

என்ன தெரியும்?

"மற்றவர்களுக்கு இது பற்றி என்ன தெரியுமோ, அந்தளவுதான் எனக்கும் தெரியும். காவிரி நீர் இருவருக்கும் பொதுவானது. தமிழ்நாடு - கர்நாடகா அரசுகள் பேச்சுவார்த்தை நடத்தி, தவிக்கும் வாய்களுக்கு தண்ணீர் தந்து உதவ வேண்டும். இதில் மக்களின் நலன் காப்பாற்றப்பட வேண்டும்."

**லஞ்சம் கொடுத்த அனுபவம்...?**

எங்கும் லஞ்சம் கொடுத்து வேலையை முடித்தது கிடையாது. ட்ராபிக்கில்கூட எங்காவது தவறு செய்து மாட்டிக்கொண்டால், என்னை அடையாளம் கண்டதும், ட்ராபிக் போலீஸ் புன்னகை செய்துகொண்டே விட்டு விடுவார். சில பேருக்கு பரிசுப் பொருள்(?) கொடுத்த அனுபவம்தான் உள்ளது.

**காங்கிரஸ் கோஷ்டிப் பூசலைச் சமாளிக்க த்ரிஷாவின் மூன்று டிப்ஸ்?**

"ஹையோ. இதை நீங்க 'சோ'விடம் கேட்கலாமே. ம்... காங்கிரஸ் கோஷ்டிப் பூசல்கள் என்பது ஒரு குடும்பத்தில் ஏற்படும் பிரச்னைகள் மாதிரிதான். அதை அவர்களே சமாளித்துக் கொள்வார்கள். அடுத்தவர் தலையிடுவதும், மூக்கை நுழைப்பதும் தவறான செயல்."

**கேப்டன் பதவியிலிருந்து கங்கூலி நீக்கப்பட வேண்டுமா?**

"இவ்விஷயத்தில் ஊரே அல்லோலகல்லோலப்படுகிறது. எனக்கு கிரிக்கெட்டைவிட டென்னிஸ்தான் பிடிக்கும். இருந்தாலும் சொல்கிறேன். ஒரு அணியின் கேப்டன் சிறந்த ப்ளேயராகவும் இருக்க வேண்டிய அவசியம் கிடையாது."

**நடிகர்களைப் போல் நடிகைகளுக்கு சமூக அக்கறை உள்ளதா?**

"சினிமா ஓர் ஆணாதிக்க உலகம். இங்கு ஒரு பெண்ணால், நினைத்ததையெல்லாம் செய்ய முடியாது. பொதுவாழ்வில் நான் பல சமூக நிகழ்ச்சிகளில் பங்கேற்கிறேன். ஐஸ்வர்யா ராய் கண் தானம் செய்ததைக் கேள்விப் பட்டு, மறுநாள் ஹைதராபாத்தில் இருபதாயிரம் பேர் கண்தானம் செய்தார்களாம். ஸோ, நடிகைகளுக்கும் சமூக அக்கறை உள்ளது."

**Vat என்றால் என்ன?**

"வ்வாட்? ஆக்கவலி Value Added Tax என்றும், ஒரு சில மாநிலங்கள் அதைப் பின்பற்ற மறுக்கின்றன என்றும் தெரியும். அவ்வளவுதான்."

**பத்திரிகை பேட்டிகளுக்காக எப்பொழுதும் பாய்ஃப்ரெண்ட் பற்றியும், காதல் பற்றியும் கேட்கும் பத்திரிகை நிருபர்கள் பற்றி?**

"ஹா..ஹா..ஹா... யெஸ். இல்லாததைப் பற்றி கேட்கும்பொழுது நமக்கே வெறுப்பாகத்தானிருக்கும். ஆனால் செலிபிரிட்டி ஆனதன் விலையை நாம் கொடுத்துதானே ஆக வேண்டியிருக்கு? நடிகைகளின் பர்சனல் விஷயங்களை எழுதினால்தான், மக்கள் அந்தப் பேட்டியை ஆர்வமாகப் படிப்பார்கள். இதனால் நிருபர்கள் பற்றி தவறாக நினைக்கவே முடியது. ஹாலிவுட்டில் எல்லாம் பாப்பராசிகள் (நிருபர்கள்) நடிகைகளின் நிழலாகப் பின்தொடர்வார்கள், தெரியுமா?"

**ஜெயலட்சுமியைச் சந்திக்க நேர்ந்தால் என்ன சொல்வீர்கள்?**

"ஆல் தி பெஸ்ட்!" (அப்படிப் போடு!)

- ச.ந. கண்ணன்

# ஆர்ப்பாட்டமில்லாத கார்ப்பரேட் சினிமா!

• கே.பாலச்சந்தர்





• முத்தையாஜி

பாரம்பரிய இசை, பக்தி இசை இரண்டிலும் முத்திரை பதித்திருக்கும் நிறுவனம் காஸ்மிக் மியூசிக். இப்போது 'கண்ணா' படத்தின் மூலம் திரையுலகில் காலடி பதித்திருக்கிறது. காஸ்மிக் மியூசிக் நிறுவனத்தின் நிதி, நிர்வாக இயக்குனர் முத்தையாஜியிடம் கேட்டோம்.

"இது திடீரென்று எடுத்த முடிவல்ல. ஆடியோ உலகில் எச்.எம்.வி. நிறுவனத்திற்கு அடுத்த இடத்தில் நாங்கள் இருக்கிறோம். திரைப்பட போஸ்ட் புரொடெக்ஷன் வேலைகள் அத்தனையையும் ஒரே கூரையின் கீழ் செய்து தரும் காஸ்மிக் டிஜிட்டல் ஸ்டுடியோ, கடந்த இரண்டு வருடங்களாக தரமுடன் சேவை செய்து வருகிறது. இதுவே எங்களுக்கு திரைப் படத் தயாரிப்புப் பணிகளில் நல்ல அனுபவத்தை கற்றுத் தந்துவிட்டது.

***கார்ப்பரேட் நிறுவனங்கள் இங்கே அபூர்வமாகத்தான் சினிமா தயாரிக்க வருகின்றன. உங்கள் ஸ்டைல் எப்படி?***

நூறு சதவிகிதம் புரஃபெஷனலாக இருக்கும். தொடக்க விழாவில் முழு திரைக்கதையையும் கே.பாலச்சந்தர் வெளியிட்டார். திறமையான புதுமுகங்களை அறிமுகப்படுத்துகிறோம்.

ஆனந்த் என்ற துடிப்பான புதியவர்தான் இயக்குனர். கார்ப்பரேட் நிறுவனம் என்பதால், இயக்குனர் இறுக்கமாகச் செயல்பட வேண்டும் என்ற அவசியம் இல்லை என்பதை எடுத்துச் சொல்லி, அவருக்கு முழுச்சுதந்திரம் கொடுத்திருக்கிறோம். படத்தின் இசையை விநியோகம் செய்ய நாங்கள் யாரிடமும் கற்றுக் கொள்ள வேண்டியதில்லை. ஆர்பாட்டமில்லாத வெற்றி கொடுக்க வேண்டும் என்பதுதான் எங்கள் ஸ்டைல்.

***படத்தின் இசையமைப்பாளர் ரஞ்சித் பரோடுக்கு தமிழ் தெரியாதாமே?***

திறமை யாரிடமிருந்தாலும் அவுட்சோர்ஸ் செய்து கொள்வதில் தவறில்லை. அவுட்புட்தான் முக்கியம். நாளை ஹாலிவுட்டிலிருந்து தமிழ் சினிமாவுக்கு இசையமைக்க கலைஞர்கள் வரலாம். 2005ன் தலைசிறந்த திரையிசையில் 'கண்ணா' பாடல்களும் இடம் பெறும் என்று அடித்துச் சொல்கிறேன்.

***'கண்ணா' பக்திப் படமா?***

இல்லை! இளமைக்கும் இசைக்கும் முக்கியத்துவம் தரும் ஒரு வருடலான படம். பிரகாஷ்ராஜ் முக்கியப் பாத்திரத்தில் நடிக்கிறார். முதலில் கதை கேட்க மறுத்தவர், கேட்ட பிறகு "அய்யோ! ஒரு நல்ல கதையை தவறவிட்டிருப்பேன். இனி கதை கேட்பதில் கவனமாக இருப்பேன்" என்று தொடக்க விழாவில் பேசினார். அதுவே எங்களுக்குத் தெம்பைக் கொடுத்து விட்டது.

**- ஸ்ரீ சக்கரம்**

படங்கள் : **டிஜி சண்முகம்**



• பிரகாஷ்ராஜ்

பளீர் இளமைத் தொடர்

# உள்ளம் துறந்தவன்

அருகிலோ, லாஸ் வேகாஸிலோ படுக்கையில் வீழ்த்தக் காத்திருக்கிறான். ஏதாவது செய்தாக வேண்டும்.

மஞ்சரி இதையெல்லாம் மனசுக்குள் போட்டு உழப்பிக் கொண்டிருந்தபோது, பிரச்னை



இருபுறம் விஜி, உறவு தரும் சுதந்திரத்தைப் பயன்படுத்தி அவ்வப்போது அணைத்துக் கொள்வதையும், சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் விரசமில்லாமல் கண்ணடிப்பதையும், முத்தம் ஒத்துவதையும் மஞ்சரிக்குச் சாமர்த்தியமாக சமாளிக்க வேண்டியிருந்தது.

மறுபுறம் சரவணனின் முரட்டு அணுகுமுறை. அழகேசனை எப்படி இந்தப் பெரிய குடும்பத்துக்கு அறிமுகப் படுத்தப் போகிறோம் என்கிற கவலையுமிருந்தது. அவன்தான் தனக்குரியவன். இதில் அவளுக்குச் சந்தேகமே இல்லை. அதைச் சொல்வது எந்தவகையான எதிர்விளைவை ஏற்படுத்தும், அந்த அதிர்ச்சியை தன் வளர்ப்புத் தந்தை தாங்குவாரா? பரமேஸ்வரன் ஒருவருக்குத்தான் அழகேசன் என்பவனைப் பற்றித் தெரியும். பேசாமல் திருநீர்மலைக்கோ, திருப்பதிக்கோ சென்று கல்யாணம் செய்து கொண்டு வந்துவிட்டு, செய்தியை ஓசைப்படாமல் கொஞ்ச நாள் கழித்து சொல்லலாமா என்ற யோசித்தாள். ஒரு முறைமாப்பிள்ளை நிச்சயதார்த்தம் பண்ண புடைவை வாங்கிக் காத்திருக்கிறான். மற்றொருவன் அமெரிக்காவுக்கு அழைத்துச் சென்று நயாகரா

சட்டென்று எந்தவித ஆரவாரமுமில்லாமல் தீர்ந்துபோனது. விஜி இதை அலட்சியமாக எடுத்துக் கொண்டாலும், அவனது அமெரிக்க வளர்ப்பு சூழ்நிலையில் மற்றவர் உணர்ச்சிகளுக்கு மரியாதை கொடுக்கும் பகுதியும் இருந்தது. தன் தந்தை

# சுஜாதா

## 15

யிடம் தெளிவாகச் சொல்லி விட்டான். "அவள் மற்றொருவனைக் காதலிக்கிறாள், மணக்க விரும்புகிறாள். இதை நிராகரித்து நான் அவளைக் கல்யாணம் செய்துகொண்டால் இருவரும் கஷ்டப்படுவோம். அவளைக் கட்டாயப் படுத்த வேண்டாம்" என்றான்.

பாலா "நானே தயங்கினேன். உறவுக்குள் திருமணம் நல்லதல்ல என்று பலருக்கு நானே சொல்லிக் கொண்டிருக்கையில், நீ அத்தை பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள, பல பரிசோதனைகள் செய்தாக வேண்டும். இப்போது





அது பற்றி யோசிக்கவே சமயமில்லை. உன் தாத்தாதான் முதல் ப்ரையாரிட்டி" என்றார். ராத்திரி வீட்டுக்குப் போனதும் இதை அவர்கள் குடும்பத்தில் பேசிக் கொள்ள முடிவெடுத்தார் பாலா. அவருடைய முதல் கவலை, ராகவேந்தரை படுக்க வைத்து ரெஸ்ட் எடுக்க வைப்பது. அவர் கணிப்பில் அந்த இதயம் சிறகொடிந்த பறவை போல மிக மிக பலவீனமான நிலையில் உள்ளது. பணம் சம்பாதிக்கும் பரபரப்பில் இதயத்தைப் புறக்கணித்துவிட்டு, இப்போது முப்பது நாள் தாங்குமா என்பதே சந்தேகம்.. போர்ட் ரூமில் அடிக்கடி மாத்திரையை அடக்கிக் கொண்டு இடது கையை வலது கையால் பிடித்துக் கொண்டிருந்தபோது, "வாங்க பாலா, எப்ப வந்திங்க, என்ன பாக்கறீங்க? கொஞ்சம் சுண்டுவிரல் பக்கத்தில் மரத்துப் போனாப்பல இருக்குது. மற்றபடி வேற பிரச்னை இல்லை, எனக்குத் தேவை ஒரு ரெண்டுநாள். அப்புறம் கட்டினப் பசுப் போல வந்து படுத்துடறேன். ரெண்டுநாள் என்னை நிக்க வெச்சிருங்க மாப்பிள்ளை"

"மாமா, உங்களுக்கு இப்ப எது முக்கியம்? உயிர் வாழறதுதானே? ஆபீஸ் எங்கயும் போவாது."

"ஆஸ்பத்திரிக்குப் போங்க, உடனே வரேன்" என்றார்.

வரவில்லை.

மஞ்சரிக்கு அழகேசனிடமிருந்து போன் வந்தது. "என்ன புது மாப்பிள்ளைங்க வந்த உற்சாகத்தில் காதலனை மறந்து விட்டாயா இளவரசி?" என்றான்.

"எங்க இருக்கே இப்ப?"

"எங்க இருப்பேன்? புக்ஷாப் இல்லை, காபி ஷாப். அம்மாவை ராயப்பேட்டா ஆஸ்பத்திரிக்கு சாயங்காலம் அழைச்சுட்டுப் போகணும்."

புத்தகக் கடையில தரையில் உட்கார்ந்து ஓசியில் படித்துக் கொண்டிருந்தான். இரண்டு



கைகளிலும் திறந்த புத்தகங்கள். ஒன்று இட்டாலியோ கால்வினோ மற்றது வாலஸ் ஸ்டிவன்ஸ் கவிதைகள்.

"எப்படி ஒரே சமயத்தில் ரெண்டு புஸ்தகம் படிக்கிறே அழகி?"

"ஒரே சமயத்தில இல்லை. மாத்தி மாத்தி. அப்பப்ப வால்ஸ் ஸ்டிவன்ஸ்ன். 'சண்டே மார்னிங்' ஒரு முறை படிச்சே தீரணும். கேக்கறியா? வா காப்பி சாப்பிடலாம். நீ கொடுத்த ஆயிரம் ரூபாய்ல நூத்தம்பது பாக்கியிருக்கு. அவ்வளவு பணம் வெச்சுக்கிட்டு பழக்கமில்லை எனக்கு"

"உங்கம்மாவுக்கு என்ன?"

"லங் ல எதோ இன்ஃபெக்ஷன். கஷ்டப்படவே பிறந்த ஜன்மம். இல்லைன்னா என்னைப் போய்ப் பெத்தெடுப்பாளா... ப்ளூரசி பேட்ச்ங்கறாங்க. ஆம்பிசிலின் கொடுக்கறாங்க"

"உங்கம்மாவை நான் சந்திக்கணுமே"

"சமயம் வரும் இளவரசி"

"அவங்ககிட்ட என்னைப் பத்தி சொல்லிருக்கியா?"

"நிறையவே சொல்லியிருக்கேன்"

" என்ன சொன்னாங்க?"

"ரீல் விடறேன்னாங்க"

"என்ன சொன்னே?"

"இந்தியாவிலேயே மூணாவது பணக்காரருடைய மகளை காதலிக்கிறேன். அவளும் என்னைக் கல்யாணம் பண்ணிக்க விருப்பம் சொல்லிருக்கான்னு சொன்ன உடனே, பயத்தில் அழ ஆரம்பிச்சுட்டாங்க"

"ஏன்?"

"தி யூஷுவல். சினிமா டயலாக். பெரிய இடத்துப் பொல்லாப்பெல்லாம் நமக்கு வேண்டாம்பா. எனக்கு ஒரே ஒரு மகன் நீ. உங்கப்பா குடிச்சே செத்தார். சித்தப்புங்கள்ளாம் நம்மை கைகழுவிட்டுட்டாங்க. உன்னைப் படிக்க வெச்சு ஆளாக்கறதுக்கு, எத்தனை வீட்டில பாத்திரம் துலக்கிருக்கேன். எத்தனை மாவாட்டியிருக்கேன். எத்தனை முறுக்கு சுத்தியிருக்கேன், எத்தனை அப்பளம் இட்டிருக்கேன், எத்தனை பால் பாக்கெட் சப்ளை பண்ணி, எத்தனை பத்திரிகை போட்டிருக்கேன். எத்தனை ஊறுகா பாட்டில் வித்திருக்கேன், எத்தனை முறை மஞ்சள் துணியோட முயல் பொம்மை விக்க டராபிக்ல உன்னைக் கைல பிடிச்சுக்கிட்டு, கார்ல போறவங்ககிட்ட வாங்கிக்கங்கன்னு கெஞ்சியிருக்கேன். பிச்சை எடுக்கறதைத் தவிர மத்ததெல்லாம் பண்ணியாச்சு. உன்னை வளத்தாச்சு. இப்ப இழக்க விரும்

பலைன்னாங்க''

மஞ்சரியின் கண்களில் வழிந்த ஒற்றைக் கண்ணீர்த்துளியை மிக மிக பத்திரமாக ஒரு விரல் நுனியில் வாங்கி அதை ஆராய்ந்தான். சட்டென்று அதை நாக்கில் தொட்டுக் கொண்டான்.

''அனுதாபம் கலந்த கண்ணீர் தித்திக்குது.''

''உங்கம்மாவை நான் பார்த்தே ஆகணும். அவங்க முன்னாலயே நம்ம கல்யாணத்தை வச்சிக்கிடலாம். அதுபோதும். வீட்ல ரொம்ப தொந்தரவு செய்யறாங்க. ஏதோ ஒரு பலவீனமான கணத்தில் சம்மதிச்சுருவேன்னு பயமா இருக்குது அழகி''

அழகேசன் தீர்மானமாகவே இருந்தான்.

''நோ வே!''

''ஏன்?''

''உன்னை நான் திருட்டுக் கல்யாணம் செய்துக்க விரும்பலை. அப்பாவை கேட்டுப்பாரு. சம்மதிச்சா சந்தோஷம்.''

''சம்மதிக்கலைன்னா...''

''காத்திருக்கேன். வரட்டுமா, 23 பி வந்துருச்சு. சிக்னல்ல எறங்கி நடந்து போயிருவேன்''

அதே சமயம் வீட்டில் ஒரு மகா நாடே நடந்துகொண்டிருந்தது. பாலா, நாகரத்தினம், விஜி, சரவணன், கல்யாணி, மரகதம், நாகரத்தினத்தின் இரண்டு பெண்கள் அமிர்தா, ரோகிணி.

''சரவணன், விஜி ரெண்டுபேர்ல யாரையாவது கல்யாணம் கட்டிக்கன்னு எதுக்கு சொல்றோம். சொத்து குடும்பத்தைவிட்டுப் போகாம இருக்கறதுக்கத்தானே?''

பாலா அமெரிக்காவுடன் பேசிக் கொண்டிருந்தார். அங்கிருந்து ஒரு மருந்து அனுப்ப ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்.

''அந்தப் பையன் கூட இத்தனை நான் கத்தியிருக்கா. உங்களுக்குத் தெரியவே தெரியாதா?''

''ராங்கிபுடிச்ச கழுதைங்க'' என்றான் சரவணன்.

விஜி ''அப்படியில்லை, மஞ்சு இஸ் எ வெரி நைஸ் கர்ள்'' என்றான்.

''அக்காவை லூஸ்தனமா ஏதாவது சொல்லாதிங்கப்பா' என்றாள் ரோகிணி.

''சும்மாரு, உனக்குத் தெரியாது. நீ மட்டும் இந்த மாதிரி காதல் கிதல்னு ஆரம்பிச்சே, வெட்டிப் போட்டுருவேன்.''

''எனக்கேதுப்பா காதல்? பயாலஜி சிலபஸ் கொடுக்கற

''ஷூட்டேஜ் ப்ராப்ளத்தால அந்த நடிகைய படத்துல இருந்து தூக்கிட்டாங்களா... ஏன்?''

''தினசரி தீனிக்கே பெரும் செலவு இழுத்து வைச்சாங்க!''

- அம்பை தேவா

தலைவலி போதாதா?''

''எல்லாத்துக்கும் வெட்டு குத்தைத் தவிர உங்களுக்கு எதும் தெரியாது'' என்றாள் கல்யாணி.

''இந்த வீட்டில பொம்பளைங்க ராஜ்யம் சாஸ்தியாயிருச்சு. குடும்ப கௌரதை காத்துல பறக்குது.''

மரகதம் ''மாப்ளை, என்ன ஆச்சுன்னு இப்படி சத்தம் போடுறீங்க?''

''தெளிவா கேட்டுக்கங்க. கம்பெனி ஷேருங்கள்ள பெரிய பகுதி மஞ்சரி பேர்ல இருக்கு.''



# வேட்டா வந்தாலும் வேட்டஸ்ட்டா..!

முதல் படம் சூப்பர் டூப்பர் ஹிட்! தமிழ் ரசிகர்களின் அன்பு மழையில் நனைந்து கனவுக் கன்னியாக வந்திருக்க வேண்டியவர், என்ன காரணமோ, ஆந்திரக் கரையோரம் ஒதுங்கி விட்டார்.

"என்ன சதா... இப்படி செஞ்சுட்டீங்களே?'' என்றால் எக்காலத்துக்கும் பொருந்தக் கூடிய பொன்மொழி ஒன்றை உதிர்த்தார்.

"ஒரே சமயத்தில் இரட்டைக் குதிரை சவாரி செய்வது முட்டாள்தனம் இல்லையா...?''

"கன்னடத்திலும் தெலுங்கிலும் பொன் கொட்டிய 'மோனலிசா' வருகிறது. அப்புறம் மேடியும் நானும் நடிச்ச 'பிரிய சகி' அதுக்கான கிளைமாக்ஸ் காட்சிக்காகத்தான் வந்திருக்கேன். விரைவில் விக்ரமுடன் நான் இணைந்திருக்கும் 'அந்நியன்'. மறுபடி சதா அலை வீசி, ரசிகர்களைத் திணறடிக்கும்'' என்றார் உறுதியாக, இறுதியாக!

"அதை எழுதிக் கொடுத்துட்டு எந்தக் கழுதையை வேணா கட்டிக்கட்டும்.''

"அப்படியே செய்துறலாம்.''

"அந்தப் பொண்ணு சம்மதிக்கும்ங்கறீங்க?''

"கேட்டுப்பார்க்கலாம். சம்மதிக்க வைக்கலாம்.''

"அந்த அளகேசு கையைக் காலை வெட்டிப் போட்டுறலாம்ப்பா.''

"தேவையில்லை.''

பாலா போனை வைத்துவிட்டு "என்ன தீர்மானிச்சீங்க நாகு?''

"டாக்டர், அழகேசனைத்தான் அந்தப் பொண்ணு கட்டிக்க விருப்பம்னா சம்மதிக்கிறதுன்னு முடிவு பண்ணிட்டம்.''

"பரவாலல்லையே, பரந்த மனசு.''

"அதுக்கு பதிலா மஞ்சரி தன் பேர்ல உள்ள ஷேருங்களை நமக்கு எழுதிக் கொடுத்துறணம். அப்ப பார்க்கலாம் காதல் உண்மையான்னு''

"அழகேசன் விசயம் பெரியவருக்குத் தெரியுமா?'' என்றாள் மரகதம்.

"இன்னும் சொல்லலை.''

"ஆபீஸ்லதானே இருக்கார்.''

பாலாவின் முகம் கோபத்தால் சுருங்கியது.

"படிச்சுப் படிச்சு சொன்னேங்க. நான் என்ன பைத்தியக்காரனா? அஞ்சு ஆபரேசனை தள்ளிப்போட்டுட்டு, கிடைச்ச ப்ளேனை புடிச்சுட்டு வந்திருக்கேன். அவர் இப்படி ஆபீசை விட்டு நகராம பிடிவாதம் புடிச்சா, எப்படி? இவரை கைது பண்ணியாவது ஆஸ்பத்திரிக்கு வலுக்கட்டாயமா அழைச்சுட்டுப் போவணும்னு தோணுது''

"வாம்மா மஞ்சரி! உனக்கு ஒரு நல்ல சேதி'' என்றார் நாகரத்தினம்.

(தொடரும்)

# ஜிகு ஜிகு 50!



“எல்லாம் வல்ல திறமையும் புகழையும் கொடுத்த இறைவன், ஹரிஹரனை சற்று முன்னதாகவே இசைத்துறைக்கு வரவழைத்திருக்கலாம். இளம் வயதில் நுழைபவர்களுக்கு மத்தியில் 38 வயதில்தான் இவரது திறமையை உலகம் கண்டு கொண்டது'' என்று விஜய் டீவி, ஹரிஹரனின் ஐம்பதாவது பிறந்த நாளை முன்னிட்டு சென்னையில் நடத்திய இசை நிகழ்ச்சியில், மேடையிலேயே தமது வருத்தத்தைத் தெரிவித்தார், சமீப காலமாக திருவள்ளுவர் தாடியில் காட்சியளிக்கும் எஸ்.பி.பி.

ப்ரெஞ்ச் தாடி, குடுமி ஹேர்ஸ்டைல் சகிதமாக மேடையில் நடனம் ஆடிய கலைஞர்களுக்கு சமமாக ஜிகுஜிகுவென ஆடியது...ம்ஹூம் வயதுக்கும் ஹரிஹரனுக்கும் சம்பந்தமே இல்லை!

ஹரிஹரன் பாடிய 'தாலாட்ட வருவாளா?' மூலம் மிகப் பெரிய ப்ரேக்கை அடைந்த நடிகர் விஜய் நேரிலேயே வந்து வாழ்த்துச் சொன்னார். 'பூவெல்லாம் கேட்டுப்பார்' படத்தில் அவர் பாடிய 'இரவா பகலா' பாடல் கேட்டு, “ஆஹா, இவ்வளவு உருகிப் பாடியிருக்கிறாரே, அதை நம்மால் முகபாவத்தில் கொண்டுவர முடியுமான்னு ஒரு நிமிஷம் ஆடிப்போயிட்டேன்'' என்றார் நடிகர் சூர்யா.

ஹரிஹரன் தமிழில் பாடிய முதல் பாடல் - தமிழா தமிழா (ரோஜா). இவரது ஜாகை மும்பையிலிருந்தாலும், ரஹ்மான் இவரை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்த பிறகுதான் மும்பைக்கும் இவரது அருமை பெருமை தெரிந்திருக்கிறது.

“நான் அதிகமாக தமிழில்தான் பாடியுள்ளேன். நானூற்று சொச்சம் பாடல்களில் முன்னூறு மெலடி பாடல்கள். எத்தனை பேருக்கு இந்த பாக்கியம் கிடைக்கும்?'' என்று மனம் கசிந்தார் ஹரிஹரன். மறக்க முடியுமா 'நிலா காய்கிறது', 'வெண்ணிலவே வெண்ணிலவே' 'உயிரே... உயிரே' போன்ற பாடல்களை!

மெலடி, பாப், கஜல், என ஏகப்பட்டது பாடிவிட்ட ஹரிஹரனுக்கு ஒரேயொரு குறை, இதுவரை கானா பாடல்களை பாடாததுதான்! “கானாவைக் குறைத்து மதிப்பிடவே கூடாது. துள்ளலாட்டம் போட வைக்கிற அற்புதமான இசை அது'' என்கிறார் தன் குடுமியை ஆட்டிக் கொண்டே!

- ச.ந.

# அருள்வாக்கு



ஒரு தேசத்தின் பண்புக்கு அளவுகோல் எது? ஒரு நாடு என்று இருந்தால் அதில் எல்லோரும் பண்பாளர்களாக (Cultured) இருக்க முடியாது. திருடன், பொய்யன், மோசக்காரன் எல்லோரும் இருக்கத்தான் செய்வார்கள். இப்படிப்பட்டவர்கள் இருந்தாலும், 'இந்தத் தேசத்தில் பண்பு இருக்கிறது. கெடுதலானவர்கள் இருந்தாலும்கூட இந்த நாடு பிழைத்துப் போகும்' என்று தெரிந்து கொள்வதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒரு நோயாளிக்குப் பல கோளாறுகள் இருந்தாலும், டாக்டர் இருதயத்தைச் சோதனை செய்து பார்த்துவிட்டு, 'இருதயம் நன்றாக இருக்கிறது; ஆகவே பயமில்லை' என்கிறார் அல்லவா? அது போல், ஒரு தேசத்தில் கோளாறுகள் இருந்தாலும், அதன் பண்பாட்டை உரைத்துப் பார்க்க ஓர் இருதய ஸ்தானம் இருக்கிறதா?

இருக்கிறது. ஒரு தேசத்தின் பண்பு உயர்ந்திருக்கிறது. மனோபாவங்கள் உயர்ந்திருக்கின்றன. அங்கங்கே அழுக்குகள் இருந்தாலும் மொத்தத்தில் அது சுத்தமாக இருக்கிறது என்பதை உரைத்துப் பார்ப்பதற்கு, அந்தத் தேசத்து மகாகவிகளின் (இலக்கியகர்த்தர்களின்) வாக்கே ஆதாரமாகும். ஒரு தேசத்தின் பண்புக்கு இதயமாக, அல்லது உரைகல்லாக இருப்பது அந்த நாட்டு மகாகவியின் வாக்குத்தான்.

இலக்கியகர்த்தர்களில் உயர்ந்தவர்கள், மட்டமானவர்கள் எல்லோரும் இருப்பார்கள். இவர்களில் அசுத்தமே இல்லாதவனின் வார்த்தைதான் அழுக்கின் கனம் இல்லாததால் காலப் பிரவாகத்தில் அமுங்காமல், என்றென்றும் மேலேயே விளங்கிக் கொண்டிருக்கும். அப்படிப்பட்டவனின் வாக்கே நமக்குக் கலாசார விஷயங்களில் பிரமாணமாகும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

• 'ஒரு கல்லூரியின் கதை' முற்றிலும் புதுமுகங்கள் கொண்ட படம் என்பதால், அதில் கதாநாயகியாக நடிக்கும் சோனியா அகர்வால் வழக்கமாக, தனது படங்களில் ஹீரோவை ப்ரமோட் செய்வதுபோல் இப்பொழுது நீண்ட மௌனத்துக்குப் பிறகு பேட்டிகளெல்லாம் கொடுத்து படத்தை தனி ஆளாக ப்ரமோட் செய்து வருகிறார்.

• தமிழ்ப் புத்தாண்டன்று எல்லோர் கண்களிலும் படுவது ரஜினி Vs கமல் போட்டிதான். ஆனால் திரை மறைவில் நடக்கும் இன்னொரு யுத்தம், கமல் Vs கலைப்புலி எஸ். தாணு. பின்னே? தாணு தயாரிக்கும் 'சச்சின்'னும் அன்றுதானே ரிலீஸாகிறது.





• பாடலாசிரியர் நா. முத்துகுமாரின் சகோதரர் நா. ரமேஷ், சினிமா நிருபராக பணியாற்றிக் கொண்டிருக்கிறார். அண்ணனுடையான் நியூஸுக்கு அஞ்சான்!

• மணிரத்னத்தின் அடுத்த படம், துள்ளத் துடிக்க காதல் படம்.

• முதன்முறையாக வைரமுத்து கவிதை தோய்ந்த இசை நிகழ்ச்சி ஒன்றை வெளிநாடுகளில் நடத்த இருக்கிறார்.

• பின்னணிப் பாடகியும், ரேடியோ ஜாக்கியுமான மிர்ச்சி சுசித்ரா கூடிய விரைவில் அரசியலில் கலக்கவுள்ளார். அரசியலில் குறை கண்டு ஒதுங்கிப் போய்விடக் கூடாது என்பது இவரது கொள்கை!

# நன்றி, ஜோதிகா நன்றி!



• அப்பாடா! இனிமேல் ஜோதிகா சொந்தக் குரலில் பேச மாட்டாராம். எல்லாம் 'மாயாவி' தந்த கொட்டாவி விமர்சனங்களின் விளைவு!

• வசூல்ராஜாவுக்குப் பிறகு மீண்டும் கமல் - சரண் - கிரேஸி மோகன் கூட்டணி விரைவில் இணைகிறது.

• ரஜினியின் அடுத்த படத்தை எடிட்டர் மோகன் தயாரிப்பதாகவும், அவரது புதல்வர் ராஜா படத்தை இயக்குவதாகவும் இறுதிக்கட்ட தகவல்கள் தெரிவிக்கின்றன. இதனாலேயே வழக்கம் போல் தனது தம்பி ரவியை வைத்து எந்தப் படமும் இயக்காமல், ரஜினி பட ஹோம்வொர்க்கில் மூழ்கியிருக்கிறார் ராஜா.



• 'காதல்' படம் முழுக்க டப்பிங் குரலைப் பயன்படுத்திய சந்தியா, க்ளைமாக்ஸில் மட்டும் சொந்தக் குரலில் கதறியிருக்கிறார்.



• இயக்குனர் லிங்குசாமி 'ஜி'க்குப் பிறகு அடுத்ததாக 'செல்லமே' விஷாலை வைத்து புதிய படமொன்றை இயக்கவிருக்கிறார். இதுவும் 'ரன்' மாதிரி ஆக்ஷனில் தோய்த்த காதல் கதை.

• பிரபுதேவா இயக்கிய 'நேனு ஓஸ் தானன்டே' படம் தெலுங்கில் சூப்பர்ஹிட் ஆனதைத் தொடர்ந்து 'சங்கராந்தி' என்ற படத்தை இயக்குகிறார். அதே தயாரிப்பாளர், (எம்.எஸ். ராஜு), அதே ஹீரோயின் (த்ரிஷா) ஆனால் கதாநாயகன் மட்டும் பிரபாஸ்! (சித்தார்த்துக்கு கல்தா!)

- பப்பி





அமரர் கல்கி

# மனோன்மணி

தமிழ் டாக்கி எடுப்பவர்களுக்குச் சென்னை நகர்வாசிகள் மேல் என்ன கோபமோ, அல்லது சந்தேகமோ, தெரியவில்லை. சாதாரணமாய் ஒரு படம் வெளியாகி நீண்ட காலத்துக்குப் பிறகுதான் சென்னைக்கு அனுப்புகிறார்கள். அவர்களைப் பழி வாங்குவதற்காக, நானும், ஒரு தமிழ்ப்படம் சென்னைக்கு வந்து வெகு நாளைக்குப் பிறகுதான் அதைப் பார்ப்பதென்று வைத்திருக்கிறேன். சில சமயம் சில படங்கள் என்னை ஏமாறச் செய்து விட்டுச் சட்டுப்புட்டென்று ஓடியே போகின்றன! அவற்றுக்கு ஒரு 'ஸலாம்' வைத்து விடுகிறேன். - இவ்வாறின்றி 'மனோன்மணி' என்ற படம் இருபத்தைந்து வாரத்துக்கு மேல் சென்னையில் விடாமல் ஓடிக் கொண்டிருக்கவே, அதைப் பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

டாக்கியைப் பார்த்த பிறகு ரொம்பவும் மன ஆறுதல் உண்டாயிற்று என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறேன். நிச்சயமாகக் குட்டிச்சுவராயடிக்கவில்லை; அதற்கு மாறாக 'மனோன்மணி'யை மிகவும் உயர்தரத் தமிழ்ப் படமாகக் கொண்டு வர முயற்சி செய்திருப்பது நன்றாய்த் தெரிகிறது. அந்த வரையில் மிகவும் திருப்தியடைய வேண்டிய காரியம்.

இந்த டாக்கியில் முக்கியமான சில நல்ல அம்சங்கள் இருக்கின்றன.

(1) கதையை நன்றாக டாக்கிக்கு அமைத்திருக்கிறார்கள். 'மனோன்மணி' கதை முன்னால் தெரியாத சில நண்பர்கள் என்னுடன் படம் பார்த்தார்கள். அவர்கள் பெரும்பாலும் கதைப் போக்கை நன்றாய்த் தெரிந்து கொள்ள முடிந்தது.

(2) காட்சி ஜோடனைகள் எல்லாம் பிரமாதமாயிருந்தன. அரண்மனை என்றால் அரண்மனைதான்; சபா மண்டபம் என்றால் சபாமண்டபந்தான்; போர்க்களம் என்றால் போர்க்களந்தான். யுத்தக் காட்சிகூட பழைய காலத்து நிஜ யுத்தக் காட்சி மாதிரியே தோன்றியது.

(3) இந்தப் பேசும் படத்தை, நல்ல தமிழ் பேசும் படம் என்று சொல்லலாம். வெறும் சொல்லடுக்குகளோ, கொச்சைத் தமிழோ இல்லாமல், சுத்தமான உணர்ச்சியுள்ள தமிழ் நடையில் சம்பாஷணை அமைந்திருக்கிறது.

கதாநாயகன் புருஷோத்தமனாக நடித்திருக்கும் ஸ்ரீ சின்னப்பா கொஞ்சம் 'பெரியப்பா'வாகவே இந்தப் படத்தில் காட்சியளிக்கிறார். ஆவேசம் வரும்போது காலில் 'ஸ்பிரிங்' உள்ளவரைப் போல் அவர் குதித்து குதித்து (சென்னைத் தமிழில் 'எகிரி எகிரி')ப் பேசுவது எதிர்பாராத ஹாஸ்ய மாகிறது.

ஸ்ரீ சின்னப்பாவும் சரி, மற்ற ஆண் நடிகர்களும் சரி, இந்தப் படத்தில் தெளிவாகவும், கூடிய வரையில் உணர்ச்சியுடனும் நன்றாய்ப் பேசியிருக்கிறார்கள் - நன்றாய் நடித்துமிருக்கிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறேன்.

கதாநாயகி 'மனோன்மணி'யாக நடித்திருக்கும் ஸ்ரீமதி டி.ஆர். ராஜகுமாரி, வாயைத் திறக்காமல் சித்திரப் பதுமையாக நடிக்க வேண்டிய இடங்களிலெல்லாம்





அபாரமாய் நடித்திருக்கிறார். மற்றபடி அவருடைய நடிப்பானது, பரத நாட்டியத்தில் 'அலாரி'ப்பில் கழுத்தை யசைப்பது போல் அசைப்பதுடன் முடிந்து விடுகிறது. ஸ்ரீமதி ராஜகுமாரி கொஞ்சம் பாடியிருக்கிறார்; சற்றே அழுதிருக்கிறார். ஒரு சமயம் பாட்டையும் அழுகையையும் கலந்து, எது பாட்டு, எது அழுகை என்று கண்டு பிடிக்க முடியாமல் நம்மைத் திணற அடித்துவிடுகிறார்!

மனோன்மணி காவியத்தில், நம்முடைய மனதைப் பெரிதும் கவரும் பாத்திரம் மனோன்மணியின் தோழியாகிய வாணி. படத்தில் இந்தப் பாத்திரமாக நடிப்பவர் குறுகுறு வென்று இருக்கிறார். சுமாராய் நடிக்கிறார். ஓரிடத்தில் அதிகப்

பட்ட வரையில்,

கதை, வசனம், பாட்டு, டைரக்ஷன்

**என்.எஸ். கிருஷ்ணன்**

என்று போட வேண்டியதுதானாம்.

அமெரிக்காவில் சார்லி சாப்ளின் எந்த ஸ்தானத்தை வகிக்கிறாரோ, ஏறக்

# (ஒரு பழைய படம்)

படியாக அழுது விரஸப்படுத்தி விடுகிறார்.

'மனோன்மணி' படத்தில் ரொம்ப நன்றாய் நடித்திருப்பவர்கள் யார் என்று கேட்டால் - கேட்பானேன்? - என்.எஸ். கிருஷ்ணனும், டி.ஏ. மதுரமுந்தான். தொட்டதையெல்லாம் துலங்க வைக்கும் சக்தி ஸ்ரீ என்.எஸ். கிருஷ்ணனிடம் இருக்கிறது. ஹாஸ்ய நடிப்பிற்குப் புதிது புதிதான விஷயங்களும் இவருக்கு எப்படியோ கிடைத்துக் கொண்டிருக்கின்றன. 'சகுந்தலை' படத்திலிருந்து இந்தத் தம்பதிகளுடைய 'காமிக்' எல்லாம் பாமரர்களுடன் படித்தவர்களும் ரஸிக்கும்படியாக - உயர்தரமாயமைந்து வருகின்றன. இன்னொரு முக்கிய விஷயம் சமீபத்திலே தான் எனக்குத் தெரிய வந்தது. எந்தப் படத்தில் இந்தத் தம்பதிகள் நடித்தாலும் இவர்களுடைய பகுதி சம்பந்தப்

குறைய அந்த ஸ்தானத்தைத் தமிழ்நாட்டில் ஸ்ரீ என்.எஸ். கிருஷ்ணன் கூடிய சீக்கிரம் அடையக்கூடும் என்று கருதுகிறேன்.

இந்த 'மனோன்மணி' படத்தில் கடைசியில் ஸ்ரீ என்.எஸ். கிருஷ்ணன் 'ஏஹேஹேஹே' என்று உள்ளே ஓடுவதும், உடனே எருமை மாடு பிரவேசிப்பதுமான காட்சியைப் பார்க்கும்போது, நாலு மணி நேரம் படம் பார்த்ததில் ஏற்பட்ட களைப்பெல்லாம் நமக்கு மாறிப் போய் விடுகிறது. திரும்பி வீட்டுக்கு போகையில் நாம் 'ஏஹேஹேஹே! - மனோன்மணி - ஓஹோஹோஹோ! - வெகு ஜோர்!'' என்று சொல்லிக் கொண்டு போகிறோம்.

- 'மனிதன் எப்படி உயர்கிறான்?'

வானதி பதிப்பகம்



# மழைக்கு நடுவே காதல்!

சென்னை முழுவதும் கொளுத்தும் வெயில்! கோடம்பாக்கத்திலோ, ‘மழை’ படத்தின் ஒளிப்பதிவு பற்றி ஜிலீர் டாக்! ஒவ்வொரு ஃபிரேமிலும் சாரல்! ஃபிலிம் சுருள் மொத்தமும் தூறல்! - என, தயாரிப்பில் இருக்கும்போதே பேச வைத்திருக்கிறார் ஓர் இளம் ஒளிப்பதிவாளர். பி.சி. ஸ்ரீராம், கே.வி. ஆனந்த், ரவி.கே. சந்திரன், ரத்னவேலு வரிசையில் இப்போது ராஜேஷ் யாதவ். படப்பிடிப்புக்காக மழையில் நனைந்து நனைந்து ஜலதோஷத்துடன் தும்மிக் கொண்டிருந்தவரைச் சந்தித்தோம்.

**படம் முழுவதும் மழையா?**

''ஆமாம்! ஆனால் இடைவிடாமல் பெய்து அடம் பிடிக்கிற மழை அல்ல. நாயகன், நாயகி இருவரும் சந்திக்கிற காட்சிகளில் பெருமழை! 'நாம் சந்திக்கிறபோதெல்லாம் மழை வருகிறதே!' என்று அவர்களுக்குள் காதலை முளைவிடச் செய்கிறது மழை! இதனால் அவர்கள் காதலை பரஸ்பரம் வெளிப்படுத்திக் கொள்வதும் ஒரு மழை நாளில். வில்லனும்கூட மழையில் நனைய வேண்டியிருக்கிறது. மழையில் நனைந்தாலும் கூலாகாத வில்லன். ஒரு ரயிலும் குளிரக் குளிர மழையில் நனைந்திருக்கிறது. படத்தில் மழையின் பங்கு பற்றி இதற்கு மேல் பேசினால், இயக்குனர் ராஜ்குமார் என் மீது விசாரணைக் கமிஷன் வைத்துவிடுவார்.''



**நாயகன், நாயகி, நனைந்து கொண்டிருக்க நீங்கள் ஏன் தும்முகிறீர்கள்?**

''நாம் மட்டுமே மழையில் நனைந்து கொண்டிருக்கிறோம் என்ற உணர்வு அவர்களுக்கு வந்துவிடக் கூடாதே என்று, படப்பிடிப்பில் கேமராவைத் தவிர எல்லோரும் அவர்களோடு நனைந்து கொண்டிருப்போம். 'ஷாட் ரெடி, சைலன்ஸ்' என்றதும் ஒருவர் அச்சென்று தும்முவார். ஒரு தமிழனுக்கு தும்மல் வந்தால் போதாதா? அனிச்சையாய் எல்லோரும் தொடர்ச்சியாகத் தும்மி வைக்க, படப்பிடிப்பு மொத்தமும் ஒரே கலகலப்புதான்.''

**படத்தின் பட்ஜெட்டில் மழைக்கான செலவு எவ்வளவு?**

''ஒருநாளைக்கு பத்து டேங்கர் லாரிகளில் தண்ணீர் வரவழைக்கிறார் தயாரிப்பாளர். தண்ணீருக்காக பணத்தைத் தண்ணீராய்ச் செலவழிக்கிறார். ஷாட் எடுத்துக் கொண்டிருக்கும்போது கேமரா லென்ஸில் ஒரு மழைத்துளி விழுந்துவிட்டாலும், ரீடேக்தான் எடுத்தாக வேண்டும்.''



**உங்களுக்கு ஸ்கோப் எப்படியிருக்கிறது?**

செயற்கை மழையை, இயற்கை மழையாகக் காட்டவேண்டிய சவால். மழை பெய்வதை, அதன்

குளிரை தியேட்டரில் படம் பார்க்கும் ரசிகர்கள் உணர வேண்டும். இதற்காக உழைத்துக் கொண்டிருக்கிறேன். என் தேவைகளைப் புரிந்துகொண்டு ஸ்பெஷல் கேமரா, விதவிதமான லென்சுகள் என்று முகம் சுளிக்காமல் வாங்கித் தருகிறார் தயாரிப்பாளர் எஸ்.பி.பி. சரண். தனிப் பட்ட முறையில் எனக்கு நெருக்கமான நண்பர்."

**'உன்னைச் சரணடைந்தேன்' படத்தின் நட்பு தொடர்கிறதா?**

"அந்தப் படத்தின் கதையே இரு பொஸசிவ் நண்பர்களைப் பற்றியது. 'இந்தப் படத்தில் எனக்கு லாபம் கிடைக்கிறதோ இல்லையோ, நாம் பிரிந்துவிடக் கூடாது' என்றார். அதேபோல் படத்துக்குக் கிடைத்த பாராட்டுகளால் திக்கு முக்காடிப் போனோம். பாலு மகேந்திரா எனது ஒளிப்பதிவு பற்றிக் கேள்விப்பட்டு, படத்தை வந்து பார்த்துவிட்டு 'நீ யதார்த்தக் கலைஞனாக வருவாய்' என்று மனம் திறந்து பாராட்டி விட்டுப் போனார். எனக்கு தேசிய விருது கிடைத்த மாதிரி இருந்தது. ஆனால் நிஜமாகவே தேசிய விருது வாங்க வேண்டும் என்பதை லட்சியமாகக் கொண்டிருக்கிறேன்."

**நீங்கள் திரைப்படக் கல்லூரி மாணவரா?**

"ஆமாம்! ஆனால் அங்கே நான் படித்தது நடிப்புப்பயிற்சி. சென்னை கிண்டியில் உள்ள எஸ்.எஸ்.ஐ.யில் போட்டோகிராபி வகுப்பில் சேர இடம் கிடைக்காத கோபத்தில், தரமணி இன்ஸ்டிடியூட்டில் எந்த கோர்ஸ் கிடைத்தாலும் சேர்ந்து விடுவது என்று சேர்ந்தேன். அங்கே நடிப்புத் துறையில் என்னைப் பார்க்க முடியாது. ஒளிப்பதிவுத் துறையில்தான் தவமாய்க் கிடப்பேன். திரையுலகில் எனது குரு ரவி யாதவ். அவர் மூலம்தான் தேசிய விருது இயக்குனர் அகத்தியனிடம் தொடர்ந்து பணிபுரிய முடிந்தது."

**உங்கள் காட்டில் எப்போது மழை?**

"மழை படம் வெளியான பிறகு! மீண்டும் பேட்டியெடுக்க வருவீர்கள் என்று நம்பிக்கையிருக்கிறது."

சந்திப்பு: **ஜெய்**
படம்: **ஸ்ரீஹரி**



"'இந்தப் படம் பொழுதுபோக்கு அம்சங்கள் நிறைந்தது'ன்னு விளம்பரம் பண்ணி இருக்காங்களே?"

"ஆமா.. படம் போரடிச்சா உள்ளே விளையாடுறதுக்கு இன்டோர் கேம்ஸ் ஏற்பாடு செஞ்சிருக்காங்களாம்!"



"உங்களை போலீஸ் எதுக்கு அரெஸ்ட் பண்ணாங்க?"

"கைல படமே இல்லைனு ஒரு சாமியார் படத்தை வைச்சு வேண்டிக்கிட்டிருந்தேன்... பிடிச்சுட்டுப் போயிட்டாங்க!"

- வசந்தி வள்ளுவன்




சொல்லித்தான் தெரிய வேண்டும் என்பதில்லை. எஸ்.பி. பாலசுப்பிரமணியம், 'மெல்லிசை மன்னர்' எம்.எஸ். விஸ்வநாதனிடம் பாட வாய்ப்புக் கேட்டுப் போனபோது, அந்தப் பாட்டைத்தான் பாடிக் காட்டினார். இதை அவரே பல மேடைகளில் இன்றும் சொல்லி வருகிறார். அப்படியொரு ஹிட் பாடலாக அது அமைந்தது.

என் சகோதரர் குமரனுக்கு இசை பற்றிய ஆர்வமும், திறமையும் அதிகமுண்டு என்றும், எங்கள் படங்களில் இசையையும், பாடல்களையும் அவர்தான் ஓ.கே செய்வார் என்றும் நான் ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறேன்.

# அவல் கேசரி, மிளகாய் பஜ்ஜி, திராட்சை நீர்!

'அன்பே வா' படத்தை நாங்கள் டிசம்பரில் குளுகுளு சிம்லாவில் எடுத்தோம். 'ராமு'வோ அப்படியே நேர் எதிர். காடுவெட்டி நகர் என்ற இடத்தில், அக்னி நட்சத்திரம் கொளுத்த, மொட்டைப் பாறையில் வியர்த்து விறுவிறுக்க படப்பிடிப்பை நடத்தினோம். பச்சையிலையைப் போட்டால், ஐந்தே நிமிடங்களில் காய்ந்து கருகிப் போய் விடும் அளவுக்குச் சுட்டெரிக்கும் வெயில்.

'ராமு' படம் மிகப் பெரிய வெற்றி கண்டது. எங்களுக்கெல்லாம் மிகவும் மகிழ்ச்சி.

அதில் பி.பி. ஸ்ரீனிவாஸ் பாடிய 'நிலவே என்னிடம் நெருங்காதே' பாடலின் வெற்றி குறித்து நான்




'ராமு' படத்திலும் பாடல்களை ஓ.கே செய்தவர், என் சகோதரர் குமரன்தான்.

இந்தக் காட்சிக்கு இந்தப் பாடல் பொருத்தமாக இருக்கும் என்று முடிவெடுக்கும் குமரனின் திறமைக்கு, 'ராமு' படப் பாடல்களின் வெற்றி மேலும் ஒரு சான்றாக அமைந்தன.

'ராமு படத்தை என்.டி. ராமராவை வைத்து தெலுங்கில் எடுத்தோம். தமக்கென சில வித்தியாசமான கொள்கைகளைக் கொண்டிருந்த மிக வித்தியாசமான கலைஞர் என்.டி.ஆர்.

'ராமு' தெலுங்குப் படத்தில் ஒப்பந்தம் செய்வது தொடர்பாக சந்தித்துப் பேச, அவரிடம் நேரம் கேட்டிருந்தோம்.

ஒரு தேதி கொடுத்து, ''காலை நாலரை மணிக்கு வாருங்கள்'' என்றார். அவ்வளவு அதிகாலையில் அப்பாயின்ட்மெண்ட் என்பதே வித்தியாசமாக இருந்தது.

விஜயா பிக்சர்ஸ் பூர்ண சந்திரராவுடன் சென்று பேசினோம். அந்த விடியற்காலை வேளையிலேயே தமது காலைக் கடன்களை முடித்து



• 'ராமு' படத்தில்...



விட்டு, கச்சிதமாக மேக்அப் செய்துகொண்டு ஜம்மென்று அமர்ந்திருந்தார்.

''என் சம்பளம் எவ்வளவு தெரியுமா?'' என்று சுற்றி வளைக்காமல் கேட்டார். தொடர்ந்து ''ஒரு லட்சம் வாங்குகிறேன்'' என்று அவரே சொல்லிவிட்டு, ''ஆனால் சமீபத்தில் எனது இரண்டு படங்களும் சரியாகப் போகவில்லை. எனவே பத்தாயிரம் ரூபாய் குறைத்துக் கொள்வேன். நீங்கள் எனக்கு தொண்ணூறாயிரம் ரூபாய் சம்பளம் தர வேண்டும்'' என்றார்.

ஒளிவு, மறைவு, சூது, வாது தெரியாத கலைஞர் அவர். இந்தக் காலத்தில் ஹீரோக்கள் தங்களின் ஒரு படம் ஓடினால், அடுத்த படத்துக்கு சம்பளத்தைப் பல லட்சங்கள் உடனே ஏற்றி விடுவதையும், தொடர்ந்து சில படங்கள் படு தோல்வி கண்டாலும் சம்பளத்தைக் கொஞ்சம் கூடக் குறைத்துக் கொள்ள மனமில்லாமல் இருப்பதையும் பார்க்கும்போது, என்.டி.ஆரின் பெருந்தன்மையை நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

''நாற்பது நாட்கள்தான் கால்ஷீட் தருவேன். அதற்குள் முடித்துக் கொள்ள வேண்டியது உங்கள் சாமர்த்தியம்'' என்று நிபந்தனை போட்டார் ராமராவ். ஒப்புக் கொண்டோம்.

இருபத்தொன்பது நாட்களிலேயே அவர் தொடர்பான காட்சிகளையெல்லாம் நாங்கள் எடுத்து விட்டோம். அவருக்கு மிகவும் திருப்தி.

'ராமு' தமிழ்ப்படம் எடுத்த அந்த காடுவெட்டி நகர் லொகேஷனிலேயே தான் 'ராமு' தெலுங்குப் படத்தையும் எடுத்தோம்.



பாறைகளும், புதர்களும் நிறைந்த பகுதி அது. 'என்.டி. ராமராவ் நடிக்கும் படப்பிடிப்பு' என்ற செய்தி பரவியதும், ஏராளமான

**ஏவி.எம். சரவணன்**

ரசிகர்கள் அங்கே கூடி விட்டார்கள். அங்கே பாறைகளிடையிலும், புதர்களிலும் அமர்ந்து என்.டி.ஆர் வருகைக்காகக் காத்திருந்தார்கள்.

என்.டி.ஆர் வந்ததும் ஷூட்டிங் தொடங்கிவிட்டது. ரசிகர்கள் அவருக்குத் தொல்லை தராமல் அந்தந்த இடங்களிலேயே காத்திருந்தார்கள்.

ஷூட்டிங் முடிந்து இவர் எழுந்ததும் அவ்வளவு ரசிகர்களும் பாறைகளின் நடுவிலிருந்தும், புதர்களிலிருந்தும் எழுந்து நின்று ஆரவாரித்தார்கள். என்.டி.ஆர் கைகளை உயர்த்தி ஆசிர்வாதம்



செய்தபோது, அப்படியே அவர்கள் அந்த இடங்களிலேயே தரையில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தார்கள்.

இதைப் பார்த்தபோது இப்படியும் ஒரு ஹீரோ வொர்ஷிப்பா என்று வியப்பாக இருந்தது.

திரிலோக்சந்தர் ராமராவிடம் "அடேயப்பா... என்னால் நம்பவே முடியவில்லை. உங்களுக்குள்ள பாப்புலாரிட்டிக்கு, நீங்க எலெக்ஷனில் நின்னா நிச்சயமா முதலமைச்சரா வந்துடுவீங்க போலிருக்கே' என்றார். என்.டி.ஆர். சிரித்துக் கொண்டார்.

ஆனால் அப்படி ஒரு நிலைமை ஏற்படும் என்று, அப்போது என்.டி.ஆரோ, திருலோக்கோ நிச்சயம் நினைத்திருக்க மாட்டார்கள்.

பின்னாளில் திரிலோக்கின் வாக்கு பலித்தது!

என்.டி.ஆர். தெலுங்கு தேசம் கட்சியைத் தொடங்கி மின்னல் வேகத்தில் வளர்ந்து, ஒன்பதே மாதங்களில் ஆட்சியைப் பிடித்து சாதனை புரிந்தது, இந்திய அரசியலில் மட்டுமன்றி, உலக அரசியலிலும் அதுவரை யாரும் செய்யாத ஒன்றாகவே கருதப்பட்டது, நமக்கெல்லாம் தெரியும்.

ஆந்திர முதல்வராக அவர் பதவியேற்ற பின்பு முதன்முறையாக சென்னைக்கு வந்திருந்த சமயம் தமிழ்த் திரைப்படத் துறையினர் அவரைச் சந்தித்து வாழ்த்துகளைத் தெரிவிக்க வேண்டுமென விரும்பி, சேபரிலிருந்து அனைவரும் அவரது வீட்டுக்குப் போனோம். என் ஃபியட் காரை நானே ஓட்டிக் கொண்டு போனேன் மற்றவர்கள் உள்ளே போய்விட, நான் காரை இடம் பார்த்து நிறுத்திவிட்டு உள்ளே போக சில நிமிடங்கள் ஆகிவிட்டன. உள்ளே போனவர்கள் அதற்குள் செட்டில் ஆகி விட்டிருந்தார்கள்.

நான் சற்றுத் தயங்கி உள்ளே போனேன். என்னைப் பார்த்ததும் என்.டி.ராமராவ் உடனே எழுந்து கம்பீரமாக தமது கைகள் இரண்டையும் விரித்தபடியே என்னருகில் வந்து "ஹலோ பிரதர்" என்று தனக்கே உரிய குரலிலும், ஸ்டைலிலும் அப்படியே என்னை ஆரத் தழுவிக் கொண்டார்.

எனக்கு மிகவும் சங்கடமாகிவிட்டது. "என்ன... என்ன ஸார் இது? நீங்களே எழுந்து வந்து..." என்று நெகிழ்ந்துபோய் வாக்கியத்தை முடிக்கத் தடுமாறினேன்.

என்.டி.ஆர். சொன்னார்: "ஐ ஆம் நாட் ராமராவ். ஐ ஆம் தி சீஃப் மினிஸ்டர் ஆஃப் ஆந்திர பிரதேஷ். யு ஆர் நாட் சரவணன். யு ஆர்

தி ஷெரீஃப் ஆஃப் மெட்ராஸ். ஐ மஸ்ட் ரிஸீவ் யு பிராப்பர்லி"

நான் அப்படியே ஆடிப் போய்விட்டேன்.

என்.டி.ஆர் செட்டில் இருந்தாலே பயம் கலந்த மரியாதை அந்த இடத்தில் மென்மையாக வியாபித்திருக்கும்.

கரகரப்பான குரலில் இடி போலப் பேசுவார். அனாவசியமாக யாருடனும் பேச மாட்டார். தானுண்டு, சம்பந்தப்பட்ட ஷாட்ஸ் உண்டு என்றிருப்பார்.

கொஞ்சம் நேரம் கிடைத்தாலும் கண்களை மூடிக் கொண்டு ரிலாக்ஸ் செய்து கொள்வார்.

அவர் இன்னொருவர் மீது குறை, புரளி, புகார் எதையும் சொல்லி நான் கண்டதில்லை; கேட்டதில்லை.

பொதுவாக காலை ஒன்பது மணி முதல் இரவு ஒன்பது மணி வரை என்பதுதான் ஒரு கால்ஷீட். பகலில் இதை மிகச் சரியாகக் கடைப்பிடிப்பார் ராமராவ். ஆனால் அவரைப் பொறுத்தவரை, இரவு கால்ஷீட் என்றால், இரவு ஒன்பது மணி முதல் நள்ளிரவு பன்னிரண்டு மணிவரைதான். இதை மாற்றிக் கொள்ளவே மாட்டார்.

அவர் அமர்வதற்கு எப்போதும் ஒரு மடக்கு நாற்காலியை அவரது உதவியாளர் கொண்டு வருவார். அதில்தான் என்.டி.ஆர் உட்காருவார். சரியாகப் பன்னிரண்டு மணிக்குப் போய்க் கொண்டே இருப்பார்.

இந்த விஷயத்தில் எந்தச் சலுகையையும நாம் அவரிடத்தில் எதிர்பார்க்கவே முடியாது.

எங்கள் ஸ்டுடியோ கேன்டீனில் அவல் கேசரியும், மிளகாய் பஜ்ஜியும் மெனு என்றால், அன்று என்.டி.ஆர் ஷூட்டிங் இருக்கிறது என்று அர்த்தம். அவை இரண்டும் ராமராவ்காருவின் அபிமான அயிட்டங்கள்.

"ப்ளீஸ் டேக் இட். வெரி நைஸ்" என்று நீட்டுவார். எங்கள் கேன்டீன் அயிட்டங்களை எங்களுக்கே ஆஃபர் பண்ணுவார்.

இன்னொரு சுவையான விஷயம் அவர் தன்னுடன் எப்போதும் கொண்டு வரும் செம்பும், அதற்குள் இருக்கும் குடிநீரும். அந்தத் தண்ணீரை என்.டி.ஆர் யாருக்கும் தர மாட்டார். தான் மட்டும் குடிப்பார். இதில் இயக்குனர் ஏ.ஸி. திரிலோக் சந்தர் மட்டும் விதிவிலக்கு.

அப்போது அவருக்கு மாம்பலத்தில் வீடு இருந்தது. "திரிலோக், இந்தா குடி.... மாம்பலம் வாட்டர்" என்று தந்து சிரிப்பார். திராட்சை போன்ற உலர் பழங்கள் போட்டுக் காய்ச்சப் பட்ட ஸ்பெஷல் குடிநீர் அது.

எங்களிடமும், எங்கள் ஏவி.எம். நிறுவனத்திடமும் பேரன்பு கொண்டிருந்த பெருமகன் என்.டி.ராமராவ்.

> "கதாசிரியருக்கு மட்டும் சம்பள பாக்கி வைக்காதீங்க!"
> "ஏன்?"
> கண்ணுல படுறவங்ககிட்ட எல்லாம் கதைய சொல்லிகிட்டு அலையறார்!"
> - அம்பைதேவா

சில சமயங்களில்அவர் வெளிப்படுத்தும் கருத்துகளை சட்டெனப் பார்க்கையில், அதிர்ச்சியை ஏற்படுத்தும். ஆனால் மனதுக்குப் பட்டதை கொஞ்சம்கூட தயை தாட்சண்யமின்றி போட்டுடைப்பார்.

'இதயம் பேசுகிறது' - மணியன், கமல்ஹாசன் சம்பந்தப்பட்ட இரண்டு சம்பவங்களில் நான் தெரிந்து கொண்டது பற்றி அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)

# மாலையில் மலரும் நோய் எது?



"காலை அரும்பி
பகலெல்லாம் போதாகி,
மாலை மலரும் இந்நோய்!
மூளை - திருகும், மூச்சுக்குள்
அடுப்பெரிக்கும்,
இடப்பக்கம் வலப்பக்கம் இதயம்
பெண்டுலமாகும்!
வாய் மட்டும் பேசாது
உடம்பெல்லாம் பேசும்!
இது மோசமான நோய்!
ரொம்பப் பாசமான நோய்!"
என்று தொடங்கும் வைரமுத்துவின்
பாடலுக்கு ஸ்ரீகாந்தும் - கோபிகாவும்
இங்கே பட்டையைக்
கிளப்பியிருக்கிறார்கள்.





வழியில் எங்கெல்லாம் அழகு கொட்டிக் கிடக்கிறதோ, உடனே நாடோடிகளைப் போல அங்கேயே டென்ட் அமைத்து ஹாயாக சமைத்துச் சாப்பிட்டு, வயல்வெளிகளில் உள்ள பம்பு செட்டுகளில் குளித்து-தூங்கி, நிதானமாகப் படம் பிடித்துக் கொண்டு கிளம்புவது வழக்கமாகிவிட, பாடல் படப்பிடிப்பு, இனிய சுற்றுலா போல ஆகிவிட்டிருக்கிறது.

**பா**டல் ஒலிப் பதிவுக்கு லண்டன், பல்லவியைப் படம் பிடிக்க பேங்காக். சரணத்துக்கோ சுவிஸ். இதுவும் 'போதாமல் நாயகன், நாயகி பின்னால் நின்று, பாலேயோ, பெல்லி நடனமோ ஆட, ஆறடி உயரத்தில் ஐரோப்பியப் பெண்கள். வெளிநாடுகளில் பகட்டாகப் படம் பிடிக்கப்படும் பாடல்கள் பட்ஜெட்டில் பாதியை விழுங்கிவிடும். ரிசல்ட்?! சந்தேகமில்லாமல் பாக்ஸ் ஆபீஸ் ஃபிளாப்!

இந்த விஷயத்தில் 'கனாக் கண்டேன்' படத்தை இயக்கி வரும் கே.வி ஆனந்த் படு தெளிவான பார்ட்டி. "தமிழ்நாட்டில், இந்தியாவில் இல்லாத லொக்கேஷன்களா! வாங்கப்பா என் கூட!" என்றபடி ஒட்டு மொத்த யூனிட்டையும் கூட்டிக் கொண்டு பூம்புகாருக்கு விரைந்திருக்கிறார்.

**பூ**ம்புகார், தரங்கம்பாடி கடற்கரைகளில் ஸ்ரீகாந்தும், கோபிகாவும் ஓடிப் பிடித்து விளையாடுவது போல படம் பிடித்துக்கொண்டு, அங்கிருந்து கிழக்குக் கடற்கரைச் சாலை வழியே சென்னையை நோக்கித் திரும்பியிருக்கிறார்கள். வரும்

**மா**மல்லபுரத்தை ஒட்டிய மரக்காணத்துக்கு வந்தபோது, "நம் ஊரிலேயே ஒரு வெனிஸ்'' என்று வியந்து போன ஆனந்த், 'காலை அரும்பி' பாடலை அங்கேயே படம் பிடிக்க வம்படியாகத் தங்கி விட்டாராம்.

**இ**ங்கிருந்து பல்லாவரம் வந்தபோது, ஒரு கல் குவாரியின் அழகில் சொக்கிப் போய், "சின்னச் சின்ன சிகரங்கள் காட்டி செல்லக் கொலைகள் செய்யாதே!" என்ற டூயட்டை குவாரியின் முந்நூறு அடி பள்ளம் வரை சென்று, அபாயகரமான குழிகளில் அழகாகப் படம் பிடித்திருக்கிறார்.

"அமெரிக்காவின் உலகப் புகழ் பெற்ற அரிசோனா பள்ளத்தாக்கில் படமாக்கியது போன்ற பிரமாண்டத்தை இந்தப் பல்லாவரம் குவாரி தந்துவிட்டது" என்று பிரமிக்கும் ஒளிப்பதிவாளர் சௌந்தர் ராஜன், இன்னொன்றையும் அடித்துச் சொல்கிறார். "2005-ன் விஷுவல் ட்ரீட் என்றால் அது 'கனாக் கண்டேன்' தாங்க!"

**- ஸ்ரீ**

படங்கள்: **'கனாக் கண்டேன்'**

# மாறிட்டியா மீனாட்சி?

"ஏங்க! சொன்னாக் கேளுங்க! பிள்ளைங்களும் ரொம்ப ஆசைப்படுது! நான் என்ன மெட்ராசுக்கா போகணுங்கறேன்? இதோ பக்கத்துல இருக்கிற தேனிக்குத்தானே? மீனாட்சியப் பார்த்துப் பேசணும்னு ரொம்ப ஆசையா இருக்குங்க!"

"இங்கப்பாரு கல்பனா, புரியாமல் பேசாதே! உன்கூட பத்தாவது படிச்ச மீனாட்சி இப்ப, சினிமாலே பெரிய ஹீரோயினா இருக்கா. சந்தோஷம்தான். ஆனால் நீங்க நேருக்கு நேர் பார்த்தே பத்து வருஷத்துக்கு மேலே ஆகுதுன்னு சொல்றே. இன்னுமா உன்னை ஞாபகம் வைச்சிருக்கப் போறாங்க" உலகநம்பி கேலியாகச் சிரித்தான்.

"சே! சே! மீனாட்சி என்னை மறக்கவே மாட்டா! எங்க கிளாசிலேயே ரொம்ப நல்லப் பொண்ணு அவதான். ரொம்ப அமைதியா இருப்பா. அவளுக்கு என்னைதான் ரொம்பப் பிடிக்கும். என்கிட்டே எதையுமே அவ மறைச்சது இல்ல தெரியுமா?" என்று கண்கள் அகல பழைய நினைவுகளில் சிறிது நேரம் லயித்தாள் கல்பனா.

"மீனாட்சி சின்ன வயசுலேயே ரொம்ப அழகா இருப்பா. ஒரு நாள் யாரோ ஒரு பையன்கிட்டே பேசினாங்கிறதுக்காக அவங்கம்மா தொடையிலேயே சூடு போட்டுட்டாங்க. அதைக் கூட என்கிட்டதான் காட்டி அழுதா! அவ எப்படிங்க என்னை மறப்பா?"

புலம்பலும் கொஞ்சலுமாய், அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு "ப்ளீஸ்... போலாங்க!" என்றாள் கல்பனா.

"இப்ப என்ன? உனக்கு மீனாட்சியைப் பார்க்கணும், அவ்வளவுதானே. வர்ற ஞாயிற்றுக் கிழமை போலாம். ஆனால் ஒண்ணு! நாம ஷூட்டிங் நடக்கற இடத்துல போயி, கும்பலோட கும்பலா நின்னுதான் பார்க்கணும்"

"ஏங்க, என்னத்துக்கு அப்படி?" முகம் சுண்டிப் போனது கல்பனாவுக்கு.



## சினேகன்

"காசு, பணம் சேர்ந்தா மனுஷனுங்க இயல்பே தலைகீழா மாறிடும். ஒரு வேளை, நீ அவங்கக் கிட்டப் பேசப் போயி, உன்னை அவங்க அலட்சியப் படுத்திட்டா, உன்னால தாங்க முடியுமா கல்பனா?"

"சீ... சீ... என் மீனாட்சி மாறவே மாட்டா!" கணவனிடம் சவாலாகச் சொல்லிவிட்டாளே தவிர, மனசுக்குள் ஒரு வித பயம் புரளத்தான் செய்தது.

'சரி... அவ என்ன பழைய பித்தல பாவாடை மீனாட்சியா? பெரிய ஸ்டாரு!' சமாதானம் செய்து கொண்டே உறங்கிப் போனாள் கல்பனா.



மறுநாள் காலை, கல்பனா வீட்டு வாசலுக்கு தண்ணீர் தெளித்துக் கொண்டிருந்தபோது, படகு போன்ற கார் ஒன்று 'சர்' என்று மெல்லிய குலுங்கலுடன் வந்து நின்றது.

அழகான சுரிதாரில் எந்தவித மேக்கப்பும் இல்லாமல், பளிச் என்று இறங்கினாள் மீனாட்சி.

"ஏய்... கல்பூ!" கட்டித் தழுவிக் கொண்டாடினாள்.



சிலையாக நின்றுவிட்ட கல்பனாவை, உலக நம்பி இலேசாகத் தட்டி இந்த உலகுக்கு மீட்டு வந்தான். மின்சார விசிறியைத் தட்டி, நாற்காலியை எடுத்துப் போட்டபோதும், மீனாட்சி, கல்பனாவுடன் தரையிலேயே அமர்ந்துவிட்டாள்.

"இவரு என் வீட்டுக்காரர் உலக நம்பி... ஈபிலே வேலை பார்க்கறாரு. இவ ஐஸ்வர்யா அஞ்சாவது படிக்கிறா... பையன் சுந்தர் மூணாவது" அறிமுகம் முடிந்தது.

கையோடு கொண்டு வந்திருந்த பழங்களையும், இனிப்புப் பெட்டிகளையும் குழந்தைகள் கையில் கொடுத்து, முத்தமிட்டாள் மீனாட்சி.

"அது... சரி... எங்க வீட்டை எப்படிக் கண்டுபிடிச்சே?"

"நேத்து ஷூட்டிங்குல நம்ம கூட படிச்ச மாதவனைப் பார்த்தேன். அவன்தான் அட்ரஸ் கொடுத்தான். நீ இங்க இருக்கன்னு தெரிஞ்சதுல இருந்து எனக்குத் தூக்கமே வரலை தெரியுமா? உடனே பறந்து வந்தாவது உன்னைப் பார்த்துடணும்னு துடியா துடிச்சுப் போயிட்



சினிமா ஸ்பெஷலாச்சே! 'சந்திரமுகி' பற்றி நியூஸ் இல்லாமலா?

"ரஜினி ஸார் இப்பல்லாம் என்னை பேர் சொல்லியே கூப்பிடறதுல்ல. 'துர்கா'ன்னே அழைக்கிறார். அப்படியானால் அந்த அளவுக்கு கதாபாத்திரத்தோடு ஒன்றி நடிச்சிருக்கேன்னு தானே அர்த்தம்?" என்று பெருமை பொங்குகிறார் நயன்தாரா! சந்திரமுகியில் அம்மணியின் பெயர் துர்கா!

# நயன்தாராவைப் பாராட்டிய ரஜினி!

டேன்டி"

காபி கலக்க கல்பனா, சமையலறைக்குள் போகவே, அவளோடு இயல்பாய் ஒட்டி நடந்தாள் மீனாட்சி.

உலகநம்பி மெல்ல வாசலுக்கு நழுவினான்.

இங்கிதம் தெரிந்த கிராமத்துக்காரனாச்சே!

பத்து வருட கால இடைவெளி, பதினைந்து நிமிடத்தில் நிரப்பப்பட்டதாக இருவருமே உணர்ந்தார்கள்.

"அழகான குழந்தைகள். அன்பான புருஷன். குடுத்து வைச்சவடி நீ" மீனாட்சி, கல்பனாவின் கன்னத்தை வழித்து, திருஷ்டி கழித்தாள்.

"ஏய்... நீ மட்டும் என்ன? லட்சம் லட்சமா சம்பாதிக்கிற பெரிய நடிகை! காரு, பங்களா, பணம், புகழ்னு வந்தும் நீ கொஞ்சம் கூட மாறலை. அதே பாசம். அதே வெள்ளந்தித்தனம். உனக்கு என்னடி பிரச்னை?"

காபியை நீட்டிக்கொண்டே கேட்டாள்.

"நான் மாறாததுதாண்டி எனக்கு பிரச்னை! உன்கிட்டே சொல்றதுக்கு என்ன? நான் என்னவோ இன்னும் பழைய மீனாட்சியாதான் இருக்கேன். ஆனா எங்கம்மா ரொம்ப மாறிட்டாங்க. சின்ன வயசுல ஆண்களோட பேசினாலே திட்டுவாங்க. அடிப்பாங்க. இப்ப ஜெண்ட்ஸோட குழைஞ்சு, சிரிச்சு பேசலைன்னா அடிக்கிறாங்க" கண்ணில் எட்டிய நீர்த்துளியைச் சுண்டினாள் மீனாட்சி.

கல்பனா அதிர்ந்து நிற்க, எதையோ இறக்கி வைத்த திருப்தியில் காரில் ஏறினாள் டாப் ஸ்டார் மீனாட்சி!

# "சின்னத்திரையில் மரியாதையில்லை!"

**– ராஜேஷ்**

**வெள்ளித்திரை, சின்னத்திரை, ரியல் எஸ்டேட் பிஸினஸ் என்று ரொம்பவும் பரபரப்பாக வளைய வருகிறார் நடிகர் ராஜேஷ். சினிமாவில் இருபத்தைந்து வருடம், டீ.வியில் இருபத்தி மூன்று வருடம் என்று பழுத்த அனுபவம் கொண்டவரை, பரபரப்பான ஒரு காலை நேரத்தில் சந்தித்தோம்.**

**தங்களின் வெள்ளித்திரை, சின்னத்திரை பிரவேசத்துக்கான காரணங்கள் வித்தியாசப்படுகிறதா?**

"நிச்சயமாக... சினிமாவுக்கு வந்ததன் காரணம், சிவாஜி, எம்.ஆர். ராதா போல பெரிய நடிகனாக வர வேண்டும் என்ற வெறி. டீ.விக்கு வந்ததன் காரணம், சினிமாவில் தொடர்ச்சியாக வாய்ப்புகள் வராததுதான்."

**வாய்ப்பில்லை என்று போகும்போது இங்குள்ளவர்களின் அணுகுமுறை எப்படி இருந்தது?**

"சீனியர், திறமையானவர் என்பதற்காக, சின்னத் திரையில் பெரிய அளவில் மரியாதை தருவதில்லை... இன்றைக்கு யார் பிஸியாக, பிரபலமாக உள்ளார்களோ அவர்களுக்குத்தான் மரியாதை. நான் மரியாதையை அதிகம் எதிர்பார்ப்பதில்லை. அதேசமயம் அவமானங்களை எதிர்கொள்ளவே மாட்டேன். மரியாதை குறையும் பட்சத்தில் உடனடியாக விலகி வந்து விடுவேன்."

**சின்னத்திரைக்கு வந்துவிட்டதை டீப்ரொமோஷனாகக் கருதவில்லையா...?**

"ஹாலிவுட், பாலிவுட், கோலிவுட் என்று ஒட்டுமொத்த சினிமா உலகத்தையே டீ.வி மிரள வைத்துக் கொண்டிருக்கிறது. சுமார் எழுபதாண்டு காலம் மேடைப் பிரசங்கம் செய்து வாரியார் அடைந்த புகழை, டீ.வி மூலம் சாலமன் பாப்பையா, சுகிசிவம் போன்றவர்கள் அடைந்து கொண்டிருக்கின்றனர். இப்படிப்பட்ட சக்தி வாய்ந்த டீ.விக்கு வந்தது எப்படி டீப்ரொமோஷனாகும்...?"

**நீங்கள் சந்தித்த மிகப் பெரிய சோதனை...?**

"1988 முதல் 91 வரை சோதனையான கால கட்டம்.... ஆசை ஆசையாய்க் கட்டிய வீட்டில் குடியிருக்காமல் படப்பிடிப்புக்கு வாடகைக்கு விட்டேன்... வாய்ப்புகள் வருவது நின்றுவிட்டன. பெரிய அளவில் பொருளாதாரச் சிக்கல்கள்... இப்பொழுது எல்லாவற்றிலிருந்தும் மீண்டு, கடந்த மூன்று நான்கு வருடங்களாக வளமாகவே இருக்கிறேன்..."

**இரண்டு திரைகளில் இருந்தும் கற்றுக் கொண்ட பாடம்...?**



"சினிமா போஸ்டர்களில் அதிகம் மின்னினால் பிஸியாக இருப்பதாக நினைத்துக் கொள்பவர்கள், டீ.வியில் என் முகம் வந்தால் ஏதோ வாய்ப்புக் குறைந்து போய்விட்டதாக நினைத்து நகைப்பார்கள்.... இதுதான் நான் கற்ற பாடம்."

- முத்து

படம்: ராஜன்

புதிய பகுதி

வாசகர் பங்கேற்பு

# கோயில் பழசு

சிவாலயங்களிலும் சிவபெருமான் முன்னே நந்தி தேவர் அமர்ந்திருப்பார்.

ஆனால் புதுக்கோட்டை மாவட்டம் பொன்னமராவதிக்கு அருகில் உள்ள வேந்தன்பட்டியில், மீனாட்சி சொக்கலிங்கேஸ்வரர் கோயிலில் சிவபெருமான் முன்னே அமர்ந்துள்ள நந்தீஸ்வரர், நெய்நந்தீஸ்வரராக அருள்பாலிக்கின்றார்.

சதாசர்வகாலமும் நெய்பூசிய கோலத்தில் பக்தகோடிப் பெருமக்களுக்கு அளவற்ற செல்வத்தையும் நலன்களையும் வாரி வழங்குகின்றார்.

தினந்தோறும் காலை நேரத்தில் நெய் நந்தீஸ்வரரின் மீது உடல் முழுதும் நெய்யைப்பூசி சிறப்புச் செய்கின்றனர். சாதாரணமாக சிறு பாத்திரத்தில் நெய் வைத்திருந்தால் கூட, அதை ஈ, எறும்பு முதலியன சூழ்ந்து விடுகின்றன. ஆனால் இந்த நெய்நந்தீஸ்வரர் மீது பூசப்படும் நெய்மீது ஈ, எறும்பு நெருங்குவதில்லை. பிரதோஷ தினத்தன்று பக்தர்கள் காணிக்கையாகச் செலுத்தும் நெய்யை நெய்நந்தீஸ்வரர் மீது அபிஷேகம் செய்கிறார்கள். இந்நிகழ்ச்சி பக்திப் பெருவிருந்தாக அமைகின்றது.



தஞ்சாவூர் பெரிய கோவிலில் உள்ள நந்தீஸ்வரரின் தோற்ற அமைப்பில் ஏறத்தாழ முக்கால் பங்கு உயரமும் அந்த அளவு பருமனும் கொண்டவர் இந்த நெய்நந்தீஸ்வரர்.

''அண்ணன் அவன் தஞ்சையிலே, தம்பி இவன் வேந்தனிலே'' என்பார் கவியரசர் கண்ணதாசன்.

இத்திருக்கோயில் நந்தவனத்தின் உள்ளே நெய்க்கிணறு ஒன்று உள்ளது. ஸ்ரீ நெய்நந்தீஸ்வரரின் வேண்டுகோளுக்கு இணங்க, இவ்வூரில் இருக்கும் பெரியவர்கள் அனைவரும் ஒன்று கூடி உருவாக்கிய சிறப்பு ஏற்பாடு இது. ஸ்ரீ நெய்நந்தீஸ்வரர்மீது பூசப்படும் நெய்யின் அளவு அதிகமாகிறபோது, அதை ஒரு பாத்திரத்தில் எடுத்து இந்த நெய்க்கிணற்றில் கொட்டி விடுகிறார்கள். இந்த நெய்க்கிணற்றில் உள்ள நெய்யை ஈக்களோ, எறும்புகளோ, சிறு பூச்சிகளோ நெருங்குவதில்லை. இந்த நெய்யை வேறு எதற்கும் பயன்படுத்துவதில்லை.

ஸ்ரீ நெய்நந்தீஸ்வரரின் இரு கொம்புகளுக்கு நடுவே ஸ்ரீ சக்கரம் உள்ளது. இது





இயற்கையாகவே அமைந்த அமைப்பு. ஸ்ரீ நெய்நந்தீஸ்வரரின் அருள்பாலிக்கும் சிறப்புக்கும். பூசிய நெய் கெடாமலிருக்கும் தன்மைக்கும் இந்த ஸ்ரீ சக்கரம்தான் ஆதார சக்தியாக அமைந்துள்ளது.

ஸ்ரீ நந்தி பெருமானுக்கு 'தனப்ரியன்' என்ற பெயர் உண்டு.

# கோலம் புதுசு!

அதனால் தானோ என்னவோ, இவ்வூர் மக்கள் ஸ்ரீ நெய்நந்தீஸ்வரரின் நெற்றியில் காசுகளை பொட்டுகளாக வைக்கும் பழக்கத்தைக் கையாண்டு வருகின்றனர். தமக்கே பிரியமான செல்வத்தை தமது நெற்றியிலே தாங்கிக் கொண்டு அருளாட்சி புரிகின்றார்.

செய்த பாவம் தீர, வேண்டியதெல்லாம் கை கூட, நெய் நந்தீஸ்வரரை நேரில் காண வாருங்கள்.

செந்தில் - நாகப்பா,
வேந்தன்பட்டி

# இனிமா... இரிமா!



''‘டோர்’னு இருந்த உங்க படத்தோட பெயரை ஏன் ‘கதவு’னு மாத்திட்டீங்க! அரசியலில் தலைவர் யாராவது மிரட்டினாங்களா?''

''இல்லீங்க. வாஸ்து நிபுணர் கட்டாயப்படுத்தறார்.''



''படத்தோட டைட்டிலிலேயே ‘இது உங்கள் கதை’ன்னு போட்டது தப்பாப் போச்சு''

''ஏன்?''

''கதை தன்னோடதுன்னு தினமும் ஒருத்தன் கேஸ் போடறான்!''



''உங்க படம் அஞ்சு மணி நேரம் ஓடுமாமே..?''

''இல்லியே. அது ரெண்டரை மணி நேரப் படமாச்சே!''

''அதாவது ரெண்டு ஷோ தான் ஓடும்னு பேசிக்கறாங்க!''

- எம். ஆர். மூர்த்தி

"நம்ம ஹீரோ புலியோட சண்டை போடற காட்சியில தனக்கு டூப் வேண்டாம்னு சொல்லிட்டார்."

"மெய்யாவே பெரிய ஹீரோ தான்."

"நீங்க ஒண்ணு. புலியை கிராஃபிக்ஸ்ல பண்ணிடுங்கன்னுட்டார்!"



" 'ஒண்ணும் ஒண்ணும் இரண்டு'ங்கற உங்க படம் தோல்வியடைஞ்சுடுச்சே!"

"தப்புக் கணக்குப் போட்டுட்டேன்"





"என்னோட அடுத்த படத்துக்கு நீங்கதான் மியூசிக் போடணும்."

"எந்தப் படத்தோட மியூசிக் போடணும்?"



"சினிமாவுல நடிக்கற புரோகிதரை இந்தக் கல்யாணத்தை நடத்தி வைக்கச் சொன்னது தப்பாப் போச்சு"

"ஏன்?"

"முஹூர்த்த நேரம் நெருங்கிடுத்து; போலீஸை வரச்சொல்லுங்கோன்னு சொல்றார்"

கலகல தொடர்

# மாம் ஃப்ரம் இண்டியா

ஜெனட், காலையிலிருந்தே 'முணுக் முணுக்' என வலிப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

ஸ்டீஃபன், மனைவியை மருத்துவமனைக்கு அழைத்துப் போவதற்காகவே, ஆபீசுக்கு லீவு போட்டு விட்டுக் காத்திருந்தான்.

சுகந்தா, ஒரு பெரிய கிண்ணம் நிறைய எண்ணெயைக் காய்ச்சி, அதில் இஞ்சியை நசுக்கிப் போட்டு, ஓமத்தை வெடிக்க விட்டு, இதமானச் சூட்டில் ஜெனட்டின் பொன்னிறக் கூந்தலில் 'பரபர' எனத் தேய்த்தாள். கை, கால், முதுகு எல்லாம் நீவி, நீவித் தேய்க்க, அதையும் ஸ்டீஃபன் விடாமல் வீடியோ கேமராவில் சுட்டுக் கொண்டான்.

சுகந்தாவுக்கு இப்பொழுது புதுத் தெம்பு வந்திருந்தது.

'எப்படியோ அவர், இங்கே வந்துட்டாரே. பரவாயில்லே. சென்னையில இருந்ததைவிட, இங்கே கோட்டும், சூட்டுமாப் பிரமாதமாத்தான் இருக்கார்.'

'அடடா... என் கண்ணே பட்டுடும் போல இருக்கே'

சுகந்தா, தனது உற்சாகத்தை வெளியில் காட்டிக் கொள்ளாமலேயே வளைய வந்தாள்.

ஜெனட்டுக்கு சுடச்சுட பூண்டு ரசம் சாதம்... அவள், இடுப்பைப் பிடித்துக் கொண்டு, உட்கார்ந்த போதெல்லாம், தனக்குத் தெரிந்த அரைகுறை இங்கிலீஷில் விரட்டினாள்.

"டோன்ட் ஸிட். வாக். நீ 'வாக்'கலையின்னா பேபி வில் நாட் கம் குவிக். அன்டர்ஸ்டான்ட்?"

"எஸ்... எஸ் மாம்.."

ஜெனட், சுகந்தாவின் கரத்தைப் பிடித்துக் கொண்டே நடை பயின்றாள். அடிக்கடி, சுகந்தாவின் தோளில் சாய்ந்து விம்மினாள்.

யாராய் இருந்தால் என்ன பிள்ளைப்பேறு என்பது ஒவ்வொரு பெண்ணுக்கும் தவிர்க்க முடியாத அவஸ்தை தானே?

'அங்கே ஒரு 'பனிச்', 'இங்கே ஒரு வெட்டு' என்று நிதானமாக வந்த வலி, அரை



"எங்க குழந்தைக்கு ஒரு நல்ல பேரைச் சொல்லுங்க மாம்"

மணிக்கொரு முறை வந்து, இருபது நிமிஷத்துக்கு ஒன்று என விரட்டியபோதுதான் சுகந்தா, அவளது தலையில், தான் ஊரிலிருந்தே பிரியம்வதாவுக்காகக் கொண்டு வந்திருந்த காய்ந்த வேப்பிலையில் ஒன்றைச் செருகினாள். நெற்றியில் திருநீறு இட்டாள்.

"மாம்... யூ ஆல்ஸோ கம் வித் மீ..."

"என்னடா சொல்றா...?"

அவள் தமிழிலேயே ஸ்டீஃபனை அதட்டினாள். ஸ்டீபனுக்கும், சுகந்தாவின் உதவியினால் சில பரத நாட்டிய முத்திரைகள் பழகிவிட்டதால், அவன், தனஞ்ஜெயன் போல அபிநயித்தான்.

"நானுமா.. அந்தப் பேண்ட்டை போட்டுண்டு நடக்கவே முடியலையே... நான் வீட்டுலேயே இருக்கேனே... விட்டுடேன்."

அவள் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தாள். அவன் விடவில்லை. ஜேனட், அவள் கையைப் பிடித்துக் கொண்டு அழுதாள்.

விதி அழைக்கிறது. மாட்டேன் என்றால் முடியுமா?



ஜேனட்டுக்கு ஃபிளாஸ்க்கில் தண்ணீர், கரைத்துக் குடிக்க ஏதோ ஒரு மால்ட், இன்னும் அவசரத்துக்காக சில உபகரணங்கள்.

சுகந்தா, இந்தியாவிலிருந்து வரும்போதே ப்ரியம்வதாவின் குழந்தைக்கு முதன் முதலில் போடுவதற்காக ஐந்தாறு பழைய சட்டைகளை, தன் நாத்தனார் பெண்ணிடமிருந்து கேட்டு வாங்கி வந்திருந்தாள்.

இப்பொழுது அதில் இரண்டை எடுத்து வைத்துக் கொண்டாள்.

"இது எதற்கு?"

ஜேனட் வினவ, சுகந்தா அதட்டினாள்.

"டோன்ட் ஆஸ்க் மீ அதிகப் பிரசங்கி கொஸ்சின்ஸ். ஓல்ட் டிரஸ் ஃபார் பேபீஸ் லாங்க் லைஃப். திஸ் இஸ் அவர் டிரெடிஷனல்..."

சுகந்தாவுக்கே வியப்பாக இருந்தது. எப்படியோ தட்டுத் தடுமாறி, முழு நீள ஆங்கில வார்த்தையை பேசி விட்டோமே என்று...

'ஐயோ.. இதை அவர் கேட்கலையே.. அசடு, அசடுன்னு சொல்வாரே... இந்த அசடுக்கு

இவ்வளவு தெரிஞ்சிருக்கே...'

மனசு பாட்டுக்கு ஒரு பக்கம் செயல்பட, அவள் ஸ்டீஃபனுடன், ஜேனட்டை கைத்தாங்கலாய்ப் பிடித்து காரில் ஏற்றினாள்.

டெலிவரி தியேட்டரில், மனைவியுடன் கூடவே கணவனும் இருப்பது என்பது சுகந்தாவுக்கு அதிர்ச்சி தரும் விஷயம்.

அவனை வெளியே தள்ளுவதிலேயே குறியாக இருந்தாள். பிறகுதான் புரிந்தது. ஜேனட் போலவே, மூன்று பெண்கள்... அவளவள் புருஷனோடு வந்து பிரசவிக்கக் காத்திருந்தார்கள்.

"ஜெயில்ல இருக்கற சாமியாரைப் பார்க்க சினிமா ப்ரடியூசர் எதுக்குப் போறார்?"
"க்ரைம் திரில்லர் படம் எடுக்க ஆலோசனை கேட்கவாம்!"
- வசந்தி வள்ளுவன்

"ஆவ்... ஜீஸஸ்..."

இப்படி ஒருத்தி அழ, அவளது புருஷனாகப் பட்டவன் அந்த இம்சையான தருணத்திலும் அவளை முத்தமிட்டுக் கொண்டிருந்தான்.

இன்னொருவன், சமய சந்தர்ப்பம் தெரியாமல், மனைவிக்கு தங்களது ஹனிமூன் ஆல்பத்தைக் காட்டி, அவளை ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்தான்.

மூன்றாமவனுக்கு, மனைவியின் அவஸ்தையில் முகம் சிவந்து, வியர்த்து விட, அவசரமாய் ஒரு நர்ஸ், அவனுக்கு பிளட் பிரஷர் பார்த்துக் கொண்டிருந்தாள்.

நல்ல வேளை. குழந்தை பிறக்கிற நேரத்தில், நாலாபக்கமும் பிளாஸ்டிக் திரைகள், தானாகவே ஸ்லோமோஷனில் வந்து மறைத்துக் கொண்டன.

உள்ளே டாக்டர், நர்ஸ்கள், ஜேனட், இவர்களுடன் ஸ்டீஃபனும், சுகந்தாவும் தான்.

என்னதான் இரண்டு பிள்ளைகளைப் பெற்றிருந்தாலும், ஒரு பிரசவத்தை நேரில் பார்ப்பது, சுகந்தாவுக்கு இதுதான் முதல் தடவை.

ஏர்கண்டிஷனின் குளிரையும் மீறி வியர்த்தது அவளுக்கு. பற்கள் கிடுகிடுக்க, தன்னை மறந்து 'அனுமன் சாலீசா' ஸ்லோகத்தைச் சொல்ல....

டாக்டர், தலையை உயர்த்தி இவளைப் பார்த்தான்.

"பிரசவம் கொஞ்சம் சிக்கலாயிருக்கு. உங்களுக்கு பயமா இருந்தா வெளியில போய் இருக்கலாம்..."

டாக்டர் சொல்வது புரியாமல் சுகந்தா விழிக்க, ஜேனட், அவளது கரத்தை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அலறினாள்.

"ஓ... நோ... ஐ வாண்ட் மாம்..."

சுகந்தா அழுதே விட்டாள்.

ஒரு ஸ்டூலைப் போட்டுக் கொண்டு, ஜேனட்டின் தலைமாட்டிலேயே உட்கார்ந்துவிட்டாள்.

"குழந்தை, ஐ வோன்ட் கோ..."

அவள், மறுபடியும் ஸ்லோகத்தைச் சொல்ல, டாக்டர், சுகந்தாவின் முதுகில் சிநேகமாய்த் தட்டினான்.

"குட்.... நல்ல அம்மா.. ஆனா, என்ன சொல்றீங்க..."

"ஆங்?"

"வாட் ஆர் யூ ஸேயிங் யுவர் ஸெல்ஃப்?"

"அது ஒண்ணுமில்லே. ஸ்லோகம்."

"ஆங்?"

"ஸ்லோகம்னா புரியாதோ.... இது ப்ரேயர்..."

அங்கிருந்த அத்தனைப் பேரும் தங்கள் நெஞ்சில் சிலுவைக் குறியிட்டுக் கொள்ள...

"க்வா..."

ஜேனட்டின் குழந்தை, இத்தனைக் கல்யாணங்களுக்கு நடுவில் சுபமாய்க் குரல் கொடுத்தபடி

வெளியே வர...

"வாவ்..."

குழந்தையை நர்சுகள் எடுத்து, அப்படியே ஜேனட்டின் மீது குப்புறக் கிடத்த, ஸ்டீஃபன் தன்னை மறந்து, பக்கத்தில் உள்ள டாக்டர், நர்ஸ் அத்தனைப் பேரையும் கட்டிக் கொண்டு அழுதான்.

டாக்டர், பரவசத்துடன், "எல்லாம் உன் மாமியாரின் ப்ரேயரினால்தான்" என்றாள்.

குழந்தைக்கு அங்கேயே, அப்பொழுதே நாமகரணம் செய்தால்தான், பர்த் சர்டிபிகேட் தயாரிக்க முடியும்.

இந்த பத்து மாதங்களில் ஜேனட்டும், ஸ்டீஃபனும் ஆயிரக்கணக்கானப் பெயர்களை அலசி, ஆராய்ந்து, கடைசியில் வாயில் நுழையாத ஏதோவொரு பெயரைத் தேர்ந்தெடுத்திருந்தனர்.

ஆனால், ஜேனட் இப்பொழுது, சுகந்தா வைக்கும் பெயரைத்தான் சூட்டுவது என்று பிடிவாதம் பிடிக்க -

ஸ்டீஃபனும் கண்ணீர் வழிய, சுகந்தாவின் கரத்தைப் பிடித்தபடியே கேட்டான்.

"எங்க குழந்தைக்கு ஒரு நல்ல பேரைச் சொல்லுங்க மாம்..."

"நானா?"

"ஆமா. நீங்கதானே குழந்தையோடப் பாட்டி?"

சுகந்தா, குழந்தையை ஆசையுடன் கையில் வாங்கிக் கொண்டாள். செக்கச் செவேலென, கழுக் மொழுக்கென்றிருந்தது குழந்தை. தலை திருச்சூர் வெண்கலப் பானை மாதிரி ம்ழு வழுக்கை. நீள மூக்கு. பச்சைக் கண்...

ஜேனட்டும், ஸ்டீஃபனும் கலந்த கலவை...

"உம்... பரமேஸ்வரன்..."

"என்னது...?"

ஜேனட் திருப்பிக் கேட்டாள்.

சுகந்தா, தன் அன்பிற்குரிய கணவனின் பெயரைத்தான் சொல்கிறாள் என்பதை அவள், அறிந்திருக்க நியாயமில்லை.

"பரமேஸ்வர்..."

சுகந்தா, குழந்தையை வாரியணைத்து முத்தமிட்டாள். கண்களில் வழியும் கண்ணீரைக் கூடத் துடைக்க மறந்த ஸ்டீஃபன், சுகந்தா சொல்லச் சொல்ல, ஆங்கிலத்தில் அந்தப் பெயரை எழுதி, அங்கிருந்த நர்ஸிடம் தர, அவள் பரமேஸ்வர் ஸ்டீஃபன் என்று பிறப்புச் சான்றிதழை உடனேயே, கம்ப்யூட்டரில் தட்டித் தர....

அதில், பிறந்த சிசுவின் குட்டிப் பாதங்களை மையில் நனைத்து, நம்ம ஊர் கிருஷ்ண ஜெயந்திக்கு வைக்கும் கிருஷ்ணர் பாதம் மாதிரி ஒற்றிக் கொடுத்தனர்.

குழந்தைகள் மாறிப் போகாமல், தொலைந்து போகாமல் இருக்க இந்தப் பாதப் பதிவாம்.

ஸ்டீஃபனின் மேல் சட்டையில் கூட, குட்டிப் பாப்பாவின் பட்டுப்



பாதங்களின் பிரிண்ட்.

பிரசவ அறையிலிருந்து தகப்பன் வெளியே வரும்போது, சட்டையில் இந்த அடையாளம் இருந்தால் வெளியில் உள்ள அனைவரும் 'ஹா ஹா'வென மகிழ்ச்சியுடன் ஆரவாரிக்கிறார்கள்.

சுகந்தா வியப்புடன், கன்னத்தில் கை வைத்து, இத்தனை அமர்க்களத்தையும் பார்த்துக் கொண்டிருக்க -

ஜேனட்டுக்கு பிரசவம் பார்த்த லேடி டாக்டர், சுகந்தாவின் தோளைத் தொட்டு வினயமாக ஏதோ சொன்னார்.

"என்னது...?"

டாக்டர், ஜெனட்டுக்கு அடுத்த கேபினில், பிள்ளை பெற மன்றாடிக் கொண்டிருந்த ஒரு தென் ஆப்பிரிக்கப் பெண்ணிடம், சுகந்தாவை அழைத்துப் போனார்.

கறுப்பாய் யானை அளவில் இருந்த அப்பெண் வீறிட்டுக் கொண் டிருந்தாள்.

அமெரிக்க வசதிப்படி, ஒரு ஊசி போட்டால், வலியின்றி, பேசிக் கொண்டே, பாடிக் கொண்டே, பாட்டு கேட்டுக் கொண்டே பிள்ளை பெற முடியும்.

ஆனால் அங்கேயும் இப்பொழுது வலியெடுத்துதான் பிள்ளை பெறுவது என்கிற அடம், பெண்களிடம் புதுசாய்ப் புகுந்திருந்தது.

ஆதலால், அவள் கதறிக் கொண் டிருந்தாள்.

சுகந்தாவின் டாக்டர் சொன்னார்,

"ப்ளீஸ்... ப்ரே ஃபார் ஹெர்..."

"இவ்வளவுதானா....!"

சுகந்தா, அந்தப் பெண்ணின் தலையைத் தேடி - அது அவ்வளவு சுலபமானதாக இல்லை. சுருண்ட முடியுடன், தோள் பட்டையோடு அமுங்கி, நம்மூர் தர்பூசணி மாதிரி இருந்தது - தடவிக் கொடுத்தபடி, தனது ஃபேவரிட் 'அனுமான் சாலீசா' ஸ்லோகத்தைச் சொல்ல...

அடுத்த சில நிமிடங்களில், புலிக் குட்டிகள் போல இரண்டு குழந்தைகள்.

"குவா... க்ராவ்..."

டாக்டர், மகிழ்ச்சியில் தன்னை மறந்து சுகந்தாவை இறுக அணைத்துக் கொண்டாள்.

தென் ஆப்பிரிக்கப் பெண்ணோ, படுத்தபடியே, சுகந்தாவின் கரத்தைப் பிடித்து முத்தமிட்டாள்.

அவளது கணவன், சுகந்தாவிடம் பணிவாக, கழுவிச் சுத்தப்படுத்தப்படாத இரு குழந்தைகளையும் நீட்டினான்.

மழைக்காக கறுத்த மேகப் பிஞ்சுகள் போல... எந்த நாட்டுக் குழந்தைகளாக இருந்தாலென்ன... அழகுதான்.

'ப்ளீஸ் நேம் இட்..."

"பாய் அண்ட் கேர்ள்..."

சுகந்தாவின் நெஞ்சு ஒரு முறை விம்மித் தணிந்தது.

"பரமேஸ்வரன். பரமேஸ்வரி.."

சிரம சிரத்தையுடன் குழந்தைகளின் தகப்பன் சான்றிதழ்களில் எழுதினான்.

"பரமேஸ்வரன் வில்லியம்ஸ், பரமேஸ்வரி வில்லியம்ஸ்..'

டாக்டர் இன்னமும் வியப்பு களையாமல், சுகந்தாவைப் பார்த்துக் கொண் டிருக்க...

"ஷீ இஸ் எ ஹோலி மதர்..."

நர்சுகள் கிசுகிசுத்தனர். இந்தச் செய்தியை வெளியே பரப்ப இவர்கள் போதாதா?

- தொடரும்



## சிக்கன அம்மணி!

சொகுசு ஹோட்டலில் அறை போட்டு அமர்க்களம் செய்யும் ஹீரோயின் களிடையே நடிகை ப்ரியா மணி, சிக்கனச் செம்மல்! தன்னுடைய அத்தை மாம்பலம் சுபா வீட்டில் தங்கிக் கொண்டே, படப்பிடிப்புக்குப் போய்விட்டு வருகிறார். கேமிரா பயம் இல்லாமல் குளிக்கலாமே!

* ''சுலபமா வெளியிலே வீசிடுவாங்க..''



**சினிமாவின் ஒவ்வொரு ஃப்ரேமுக்காகவும் உழைக்கும் இவர்களது ஒவ்வொரு வியர்வைத் துளிக்கும் ஒரு பவுன் தங்கக்காசு கிடைப்பதில்லை. ஏதோ நம்மாலானது, சின்ன அறிமுகம்!**

# ''சீண்டுவார் யாருமில்லை!''

## ''பத்தாயிரம் கொடுத்த ரஜினி!''

சினிமாவில் 29 வருடங்களாக லைட்மேனாகப் பணி புரியும் ராஜு. ஜூனியர் ஆர்டிஸ்ட், சைன் போர்டு ஆர்டிஸ்ட் என சீரியல் பல்பு போல பல விதமாக ஜொலிக்கக் கூடியவர்.

''பத்தாப்பு படிச்சிருக்கேங்க. வேலை ஏதும் கிடைக்கலை. வீட்ல வறுமை. கொஞ்சம் வரைவேன். அப்படியே அம்பது படங்களில் நடிக்கவும் செஞ்சிருக்கேன். 'சிந்து நதிப்பூ', 'தாமரை' படத்திலெல்லாம் சின்னதா டயலாக்கும் பேசியிருக்கேன். ஏதோ ஒரு ஸீன்ல நடிச்சாலும், பொம்மையா நிக்காம வசனம் பேசிடணுங்க'' என்பவருக்கு ஒருநாள் சம்பளம் ரூபாய் இருநூற்று ஐம்பது. ஊட்டி போன்ற மலைப் பிரதேசங்களில் படப்பிடிப்பு நடந்தால், கூடுதலாக இருபது ரூபாய் தருவார்கள். மாதத்தில் பத்து நாள் தான் ஷூட்டிங் இருக்கும். மழைக்காலத்தில் அதுவும் கஷ்டம்'' என்கிறார்.

''முதல்ல எங்களை லைட் பாய்னுதான் கூப்பிடுவாங்க. பாய்னா ஒரு மாதிரி இருக்குன்னு லைட்மேனா மாறிட்டோம். எங்களுக்கு எந்தக் கஷ்டம்னாலும் விஜய்காந்த் முதல் ஆளா உதவி செய்வாரு. கல்யாணம்னு போய் நின்னா, ரஜினி பத்தாயிரம் வைச்சுத் தருவாரு. பொதுவா லைட் மேன்னா

* உஷாராய் ஓரிரு வார்த்தைகள்...





• "நெஞ்செல்லாம் வலிக்கும்..."

கேரக்டர் ஆர்டிஸ்டாவாவது ஆகணும். அதுவரைக்கும் இருக்கட்டும்னு கிரேன் வாங்கி அதோட ஆபரேட்டராகவும் இருக்கேன்" என்று பேசிக் கொண்டிருந்தவர் 41 அடி உயரத்துக்குச் சென்று காமிராவைச் சரி செய்து மீண்டும் வந்து பேசுகிறார். "இரும்பை டீல் பண்ணற வேலை இது. அதனால நிச்சயமா நாற்பது வயசுக்கு மேல வேலை செய்ய ஆசைப்பட்டாலும் உடம்பு தாங்காது. மலைப் பிரதேசத்துல ஹீரோ - ஹீரோயின் டூயட் பாடறதுக்காக கிரேனை இருபது பேருக்கு மேலே நரம்பு புடைக்க இழுத்துட்டும், தூக்கிட்டும் போவோம். நெஞ்செல்லாம் வலிக்கும். என்ன கஷ்டப்பட்டாலும் இந்த சினிமாவுல எங்களை சீண்டுவார் யாரும் இல்லை" என்று சொல்லும் போது அவரது கண்களில் விரக்தி!

எல்லோரும் ஓடி வந்து செய்வாங்க" என்கிற ராஜுவின் கலப்புத் திருமணத்தை 1980ல் முன்னின்று நடத்தியவர் எம்.ஜி.ஆர்.

### "நாற்பது வயசுக்கு மேலே?"

"சினிமாவின் எந்தத் துறையில் இருந்தாலும் நடிகனாக வேண்டும் என்ற ஆசையில் தான் காலெடுத்து வைத்திருப்பார்கள். காமிராவை எவ்வித உயரத்திலிருந்தும் இயங்க வைக்கும் கிரேன் ஆபரேட்டரான சுப்ரமணியனும் இதற்கு விதிவிலக்கல்ல.

"தென்காசி பொய்கை கிராமங்க! இருபத்து மூணு வயசுல பெரிய ஹீரோவாயி காட்டுறேன்னு மெட்ராஸுக்கு வந்தேன். ஏழு வருஷம் தலைகீழா நின்னேன். ஒண்ணும் முடியலை! வெறுத்து சவூதிக்குப் போய் நல்லா சம்பாதிச்சேன். மறுபடியும் சினிமாவுக்குள்ள நுழைஞ்சேன். ஹீரோ ஆசை போயிடுச்சு,

### "தூக்கி எறிஞ்சிடுவாங்க!"

"ஒரு நாளைக்கு முந்நூற்று ஐம்பது ரூபாய். இதே விளம்பர ஷூட்டிங் என்றால் ஒருநாளைக்கு சுளையாக, மூவாயிரம் கூட கிடைக்கும், மேக்-அப் ஆர்டிஸ்டான ராஜாவுக்கு. ஆனால் நிலையில்லாத வருமானம்.

"அஞ்சாவது வரைக்கும்தான் படிச்சிருக்கேன். விவரம் தெரியாம சினிமாவுக்குள்ள நுழைஞ்சு கண் மூடித் திறக்கறதுக்குள்ள இருபத்துநாலு வருஷம் ஓடிப்போச்சு. நட்சத்திரங்களை மிக நெருக்கத்துல பார்க்குற சந்தோஷம் இருந்தாலும், ஏண்டா சினிமாவுக்கு வந்தோம்னு இருக்கு. இதுல நுழையாட்டி எங்க மாமியார் உதவியால ஏர்போர்ட்ல வேலைக்குச் சேர்ந்திருப்பேன். சினிமாவுல ஒரு நெருடலான விஷயம், ரொம்ப சுலபமா வெளியில வீசிடுவாங்க. அதனால நான் யார் கிட்டயும் நெருங்கிப் பழகறதில்லை" என்று வழக்கம் போல் ப்ரெஷ்ஷை எடுத்துக் கொண்டு, ஹீரோயின் சமிக்ஷாவை அழகுபடுத்த ஆரம்பித்தார்.

### நாங்க முக்கியம்

நயாகரா கேள்விப்பட்டிருப்போம், நாகரா? படப்பிடிப்பில் பாடல்களை ஒலிக்க விடுவதற்கும், ஸ்பாட்டில் நடிகர் நடிகையர் பேசுவதைப் பதிவு செய்வதற்கும் இக்கருவி பயன்படுகிறது. இதை இயக்குபவர்களில் ஒருவர் ராமச்சந்திரன்.

"படிக்காதவர்கள் மட்டுமே ஈடுபடும்

துறை என்கிற பெயர் போய், இன்னைக்குச் சவுண்ட் டெக்னாலஜி படிச்சவங்க நிறையப் பேர் உள்ளே நுழைஞ்சிட்டாங்க. பேப்பர்ல இருக்கிற வசனத்தை யாரும் பேச மாட்டாங்க. குறிப்பா காமெடி ஸீன்ல டைமிங்கா நடிகர்கள் பேசறதால, எங்களோட வேலை காமிராவுக்கு அடுத்த படியா ரொம்ப அவசியமானது'' என்ற தமது தொழிலைப் பற்றி ஓரிரு வார்த்தைகள் கூறிவிட்டு நகர்ந்தார். ரொம்ப உஷாரான பேர்வழி!



• ''கையை ஏந்த மாட்டோம்...''

### ''கை கழுவிடுவாங்க''

ஐம்பத்து ஐந்து வயதாகும் பரீத்பாயின் பணி, ஷூட்டிங்கில் பணிபுரியும் அத்துணை பேருக்கும் சரியான நேரத்தில் வயிரார அன்னமிடுவது.

''இருபத்தெட்டு வருஷமா இந்தத் தொழிலில் இருக்கிறேன். மெஸ்ஸுக்குப் போய் ஆர்டர் செய்த உணவுகளை கரெக்டான நேரத்துக்குக் கொடுத்து, மறுபடியும் அடுத்தவேளை உணவுக்கு ரெடியாவதுன்னு நான் முழுக்க பறந்துட்டே இருப்போம். எல்லோரும் சாப்பிட்டு முடிக்க மதியம் மூணு மணி ஆயிடும். ராத்திரி பதினொரு மணிக்கு முன்னாலே சாப்பிடவே முடியாது. ஒரு நாளைக்கு இருநூற்று எழுபத்தைந்து ரூபாய் கிடைக்கும். உலகத்துல எந்தத் தொழில்லயும் இல்லாமல் சினிமாவில் மட்டும்தான் வேலையோடு சேர்த்து சாப்பாடும் போடுவாங்க. உதவிக்காக நாங்க நடிகர்களிடம் கையை ஏந்துவது கிடையாது. எங்களுக்குச் சம்பளம் தர்ற தயாரிப்பாளர்கள்கிட்டதான் உரிமையோடு கேட்போம். ஆனாலும் முழுப் படமும் முடிஞ்ச பிறகு விக்ரம், ரோஜா, டைரக்டர் பாலாவெல்லாம் யூனிட் ஆட்களுக்கு வாட்ச்சோ அல்லது வேஷ்டி சட்டையோ எடுத்துக் கொடுப்பாங்க. பச், என்ன சொன்னாலும் சினிமாக்காரங்க சாப்பிட்டு கை கழுவின அடுத்த நிமிஷமே எங்களையும் கைகழுவி விடுவாங்க. கசப்பா இருந்தாலும் இதுதான் உண்மை!'' **- சநகன்**

• ''மழைக்காலத்தில் அதுவும் கஷ்டம்...''



படங்கள்: **பப்பி**

# அன்பளிப்பு

மறுநாள் ஆதரவற்ற குழந்தைகள் விடுதியொன்றில் நடைபெறப் போகும் விழாவுக்கு முதன்மை விருந்தினராக அழைக்கப்பட்டிருந்தார் நடிகர் ஹரிபிரசாத்.

விழாவில் குழந்தைகளுக்கு அன்பளிப்பாக வழங்கப் போகும் பொருள்களை வாங்கச் சென்றிருந்த அவரது உதவியாளர், பொருள்களின் தரம் வாரியான விலைப்பட்டியலையும் மாதிரிகளையும் எடுத்துக் கொண்டு வந்தார்.

எடுத்து வந்தவற்றிலிருந்து பென்சில்களைக் காட்டி,

"சார், இந்தப் பென்சில் ஒண்ணு ஒரு ரூபாய்... இது ஐம்பது காசு... இது நாற்பது காசு..."

"நாற்பது காசு பென்சில்ல இருநூறு வாங்கிக்கோ!"

"சார், இது ரொம்ப மட்டமானதாம். கூர் ஒடைஞ்சி ஒடைஞ்சி போகுமாம். கடைக்காரனே சொன்னான்."

"பரவாயில்ல பரவாயில்ல"

"ஓ.கே சார்! இந்தப் பேனா ஒண்ணு நாலு ரூபாய்... இது மூணு ரூபாய்... இது ரெண்டு ரூபாய்..."

பேனாக்களைக் காட்டி விளக்கினார்.

"ம்... ரெண்டு ரூபாய் பேனால இருநூறு வாங்கிக்கோ."



## வீ.விஷ்ணுகுமார்

உடனே உதவியாளர் ஒரு காகிதத்தில் அந்த பேனாவைக் கொண்டு கிறுக்கிப் பார்த்தார். பேனா சரியாக எழுதவில்லை.

"சார், சேம்பிளுக்கு வந்த பேனாகூட சரியா எழுத மாட்டேங்குதே"

"பரவாயில்ல விடப்பா."

இதே மாதிரி உதவியாளர் கொண்டு வந்திருந்த நோட்டுப்புத்தகம், ஸ்கேல், ரப்பர் என எல்லாவற்றிலிருந்தும், விலை மலிந்த பொருள்களை மட்டுமே தேர்வு செய்து வாங்கி வரச் சொன்னார்.

வாங்கி வந்த பொருள்களை மிக அழகாய் பேக் செய்யச் சொல்லி உதவியாளருக்கு ஆணையிட, அவர் மிகத் துரிதமாகக் காரியத்தில் ஈடுபட்டார்.

மறுநாள் திட்டமிட்டபடி விழாவில் கலந்து கொண்ட ஹரிபிரசாத் - குழந்தைகளுக்கு அன்பளிப்புகளை வழங்கினார்.

அக்காட்சிகளை அவர் உடன் சென்றிருந்த புகைப்படக்காரரும், வீடியோக்காரரும் சுட்டுத் தள்ளினர்.

அடுத்தநாள்.

பரபரப்பாய் வந்தார் உதவியாளர்.

"சார், நீங்க சொன்னபடி போட்டோக்களோட எல்லாப் பத்திரிகைகளுக்கும் நியூஸ் கொடுத்துட்டேன்... அப்புறம் ஹால்ல மாட்டறதுக்குன்னு, பெரிய சைஸ்ல போட்டோ பிரிண்ட் சொன்னீங்களே ஐந்நூறு ரூபாய் ஆகுமாம்... ஃபிரேம் போடணும்னா, சாதாரண ஃபிரேமுக்கு நூறு ரூபாயாம். லேமினேஷன் ஃபிரேமுன்னா ஐந்நூறு ரூபாயாம்! பத்து வருஷமானாலும் புத்தம் புதுசாவே இருக்குமாம்."

"அப்போ லேமினேஷன் ஃபிரேமே போடச் சொல்லிடு. காசு கெடக்குது காசு, லைஃப்தான் முக்கியம்." ○

> "சார், சேம்பிளுக்கு வந்த பேனாகூட சரியா எழுத மாட்டேங்குதே"



# டமில் நட்டு ரஸிகர்கலே..!



### ரீல் - 1

‘டண்டனக்கா டமுக்கு, ஜினுக்கு டுண்டணக்கா டுமுக்கு’ எனும் வாழ்க்கைத் தத்துவ டுயட்டில் ‘டண்டணக்கா’ என்று ஆழ்வார்பேட்டையில் கனவு காண ஆரம்பிக்கும் ஹீரோவும் ஹிரோயினும் ‘டமுக்கு’ வரும் பொழுது, அல்ஜீரியாவுக்குப் போய் விடுவார்கள். அடுத்து ‘ஜினுக்கு’ வரும்பொழுது நைஜீரியாவில் இருப்பார்கள். பின் ‘டுண்டணக்கா’ எனும் ஒரே வார்த்தைக்காக நேர்த்திக் கடன் போல ஓடிப்போய் சான் பிரான்ஸிஸ் கோவைத் தொட்டுவிட்டு, ஒரு வழியாக ‘டுமுக்கு’ என்று முடியும் பொழுது ஆழ்வார்பேட்டைக்கு மீண்டும் வந்து குதிப்பார்கள். இதெல்லாம் டூ மச்சா இல்லை?

### ரீல் - 2

ஹீரோயின் : ‘டமில் அவ்ளோவா வாழாது... ஐ மீன் எனக்கு அவ்ளோவா வலாது. நான் படிச்சது புல்லா அவுட்சைட் டமில் நட்டு. என்க்க்கு டமில்நட்டு ரசிகர் எல்லார்ரையும்ம் சோ மச் புடிக்க்கும். டமில் நட்டு மாதிரி வேற எந்த நட்டும் இருக்காடு. ஈவன் அமெரிக்கா, பிரான்சு நெதர்லாந்துலகூட இன்டமாட்ரி நட்டுவை யூ கான்ட் சீ... வாட்? யா யா, ஐ லைக் டமில் நட்டு லிடரேச்சர். எஸ்பெஷலி தட்... புறா நானுறு... ஐ லைக் தட் வெரி மச். புறா இஸ் ஸோ சாப்ட். ச்சோ ச்வீட்ட... மில்க் வொய்ட் கலர்ல அலுகா இர்க்கும்...

வாட்... நோ நோ... என்க்கு ஹாலிவுட் அவ்ளோவா புடிக்காடு. ஆக்சுவலா ஜூலியா ராபர்ட்ஸ் மேடம் அண்டு கேட் வின்ஸ்லெட் மேடம் ரண்டு பேரும் என்னை கெஸ்ட் ரோல் ஆக்ட் பன்ன லவ் நட்டு...”

### ரீல் - 3

ஹீரோ தன் பாட்டுக்கு ரோடில் நடந்து போய்க் கொண்டிருப்பார். திடீரென்று யூனிபார்ம் போட்ட ஒரு




வில்லன் படை ஏகே 47, ஹாக்கி ஸ்டிக், கிரிக்கெட் ஸ்டம்ப்பு, ஒட்டடைக் குச்சி, சைக்கிள் ஹாண்ட் பார், வழியில் தாகம் எடுத்தால் குடிப்பதற்கு வாட்டர் பாக்கெட் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு ஹீரோவைச் சுற்றி வளைப்பார்கள். யாரும் எதிர்பாராத ஒரு நேரத்தில், 'ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரே பூ பூத்ததாம்...' என்று ஹீரோவை நடுவில் நிற்க வைத்து பாடிக் கொண்டே சுற்றிச் சுற்றி ஓடி வருவார்கள்.

அடுத்து என்ன நடக்கும் என்று நன்றாகத் தெரிந்து வைத் திருக்கும் ஆடியன்ஸ் சீட்டின் முனையிலிருந்து தாமாகவே வழுக்கி விழுந்து ஆர்தோபெடிக்ஸ் ஹாஸ்பிடலுக்குப் போய் அட்மிட் ஆவதற்குள், யாராவது ஒரு பொடி வில்லன் விளையாட் டில் அவுட் ஆகிவிடுவான். உடனே எல்லோரும் அவனைப் பிடித்து ஹீரோவிடம் தள்ளிவிடுவார்கள். அவனும் ஏதோ பூச்சி, பொட்டு கடித்து விட்டதைப் போல 'டாய்ய்ய்' என்று கத்திக் கொண்டே ஹீரோ மீது பாய்வான்.

இதுவரை அம்பயர் போல இவர்களது விளையாட்டை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஹீரோ சிறிதும் அலட்டிக் கொள்ளாமல், தனது ஆயுதத்தை (ஸ்க்ரு ட்ரைவர், அரையடி ஸ்கேல், துப்பட்டா, துண்டு அல்லது இதுபோன்ற ஒரு வஸ்து) எடுத்து 'விஷ்க் விஷ்க்' என்று சுழற்றுவார். அப்பொழுதே பாதிப் படை (தியேட்டரில் பாதி சீட்) அம்பேல். பின்னர் மீதியிருப் பவர்களை ரவுண்டு கட்டி அடிப்பார். ஆனால்...

முதலில் அவுட் ஆன பொடி வில்லன் மட்டும் எஞ்சியிருப் பான். இவனை 'அவுட்' ஆக்குவதற்கு. ஹீரோ சுமார் 40 அல்லது 50 அடி மேல்நோக்கி மங்கி ஜம்ப் அடித்து காணாமல் போய்விடு வார். "சரி அவர் போயிட்டாரு, வா வீட்டுக்குப் போகலாம்" என்று தியேட்டரிலிருந்து எல்லோரும் கிளம்புவதற்குள் 'டோய்ய்ய்' என்று கத்திக்கொண்டே கிழே லாண்ட் ஆவார். அந்தப் பொடியன் அதற்குள் ஆட்டோ பிடித்து எஸ்கேப் ஆகி யிருப்பான். இப்படியாக எல்லா 'ஸ்டண்ட்ஸும்' முடிந்த பிறகு பார்த்தால், ஹீரோவின் இடது பக்க நெற்றியின் ஓரத்தில் சிம் கார்ட் அளவுக்கு குட்டியாக ஒரு சிராய்ப்பு இருக்கும்.

## ரீல் - 4

**டை**ரக்டர் - "தமிழ்ல இந்தப் படம் ஒரு புதிய முயற்சி" (அப்ப இதுக்கு முன்னாடி ஆப்பிரிக்க மொழில முயற்சி செஞ்சிக் கிட்டிருந்தாரா?)

- மருதன்

‘சந்திரமுகியும், மும்பை எக்ஸ்பிரஸும் வரட்டும். கொஞ்சம் லேட்டாகக் களமிறங்கலாம்' என்று ஓரம் கட்டி இருக்கிறார் அந்நியன். ஷங்கர் பாணியில் நிதானமாக, பிரம்மாண்டமாகத் தயாராகிவரும் படம். "மொத்தக் குடும்பமும் ஒன்றாக உட்கார்ந்து, பார்த்து, ரசித்து, பிரமிக்க வைக்கும் வகையில் எடுக்கப்பட்ட படம்" என்கிறார்கள் ஆஸ்கார் பிலிம்ஸ்காரர்கள்.

படத்தின் பட்ஜெட் முப்பத்தி இரண்டு கோடி. இதில் விசேஷம் என்னவென்றால், ஐ.டி.பி.ஐ. வங்கி, ஆஸ்கார் பிலிம்ஸுக்கு ஒன்பதரை கோடி ரூபாய் கடன் வழங்கியிருக்கிறது. படக்கம்பெனியின் ஜாதகத்தை அலசிப் பார்த்து, சினிமா எடுக்க இவ்வளவு பெரிய தொகையை வேறு யாருக்கும் இந்தியாவில் வழங்கியதில்லையாம். பைனான்சியரிடம் வட்டிக்கு வாங்கி இருந்தால் குறைந்தது மூணு வட்டி ஆகி இருக்கும். வங்கிக் கடன் என்பதால் வட்டி பன்னிரண்டு சதவிகிதம்தான். இது சினிமாத்துறையை ஆரோக்கியமான பாதையில் அழைத்துச் செல்லும்.

படத்துக்கான இன்ஷ்யூரன்ஸ் பிரீமியம் மட்டும் முப்பது லட்சம் ரூபாய். நடிக்கும் நட்சத்திரங்கள், தொழில் நுட்பக் கலைஞர்கள், ஸ்டண்ட் கலைஞர்கள், கேமரா முதலிய உபகரணங்களுக்கு மட்டுமின்றி, ஷூட்டிங்கை வேடிக்கை பார்ப்பவர்களுக்கு ஏதாவது அசம்பாவிதம் என்றால்கூட, அதை ஈடுகட்ட இன்ஷ்யூரன்ஸ் எடுக்கப்பட்டது புது விஷயம்.



# டிக்கெட் 50! ஜாலி 500!




"இது ஒரு ரொம்ப வன்முறை இல்லாத, ஆனால் அதிரடி ஆக்ஷன் நிறைந்த படம். ஃபிரேமுக்கு ஃபிரேம் மிரட்டியிருக்கிறார் டைரக்டர் ஷங்கர். ஒவ்வொரு காட்சியையும் எப்படி புதுமையாக, பிரம்மாண்டமாகச் செய்யலாம் என்கிற அவரது கிரியேடிவிடி, என்னை பிரமிக்க வைத்தது" என்கிறார் ஆஸ்கார் பிலிம்ஸ் ரவிசந்திரன்.

**வி**க்ரமும், சதாவும் திருவையாறு தியாகபிரம்ம மகோத்சவத்தில் பங்கேற்பது போல ஒரு காட்சி. இந்தக் காட்சியை திருவையாற்றில் படம்பிடிக்க முடியாத சூழ்நிலை. மகாபலிபுரம் அருகில், செட் போட்டுவிட்டார்கள். சென்னையிலிருந்து டி.என். சேஷகோபாலன், உமையாள்புரம் சிவராமன், ராஜம் அய்யர், கிருஷ்ணன், சீர்காழி சிவசிதம்பரம் என்று பலரையும் அழைத்துக் கொண்டு போய், ஷூட்டிங்கில் பங்கேற்க வைத்துவிட்டனர். மொத்தம் பதினாலு நாள் ஷூட்டிங். ஆனால் என்ன, நிஜமாக, திருவையாற்றில் தியாகராஜர் உத்சவம் நடத்த முப்பது லட்சம் செலவாகாது. ஷூட்டிங்குக்கு ஆகியிருக்கிறது.

ஆம்ஸ்டர்டாமுக்குப்போய் ஒரு பாடலை படம் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார் ஷங்கர். வருஷத்தில் ஏப்ரல் மாதத்தில் மட்டும் உலகம் முழுவதிலுமிருந்து டூரிஸ்ட்களைக் கவரும் ஒரு பூந்தோட்டம். பத்து நாட்கள் மட்டுமே முழுசாகப் பூத்துக் குலுங்க விடுவார்கள் அப்புறம் பூக்களைக் கத்தரித்து, விற்பனைக்கு அனுப்பி விடுவார்கள். அந்த இடத்தில் எடுக்கப்பட்ட பாட்டு, அழகுணர்வின் வெளிப்பாடு. ஆம்ஸ்டர்டாமிலேயே ஒருவரை நியமித்து, அடிக்கடி பூந்தோட்டத்தைப் போட்டோ எடுத்து அனுப்பி வைக்கச் செய்து, திட்டமிட்டு, படம் பிடித்தது அசுர சாதனைதான்.

பாறைகளில் சினிமா ஸ்டார்களை வரைந்தது, மலைகளுக்கு பட்டுப் புடைவை கட்டியது, மலேசியாவின் புது விமான நிலையத்தில் எடுத்துள்ள பாட்டு, இவை அனைத்தையும் தூக்கிச் சாப்பிடும் விதமாய் விக்ரமின் விதம் விதமான கெட்அப்கள், பீட்டர் ஹெய்ன்ஸின் சிலிர்க்கவைக்கும் ஸ்டண்ட் காட்சிகள்.

"ஐம்பது ரூபாய் டிக்கெட்டில் ஐந்நூறு ரூபாய் பொழுதுபோக்கு கியாரண்டி" என்கிறார் தயாரிப்பாளர் ஆஸ்கார் பிலிம்ஸ் ரவிசந்திரன்.

**- எஸ்.சந்திரமௌலி**



# பார்த்திப தமிழ்ப் புத்தாண்டு பலன்கள்

**மேஷம் :** இந்த வருடம் சிறப்பான பலனைக் கொடுக்கும். மாணவ, மாணவியருக்கு பரீட்சையில் வெற்றி அளிக்கும். கலைஞர்கள், தொழில் அதிபர்கள் நலம் பெறுவார்கள். கணவன் மனைவி உறவு சீர்படும். பிரிந்து வாழ்ந்தவர்கள் ஒன்று சேருவார்கள். ஆரோக்கியம் சீர்படும். உத்தியோகஸ்தர்களுக்கு பதவி மாற்றம் / பதவி உயர்வு கிட்டி இடமாற்றம் கிட்டும். திருமணம் ஆகாத பெண்களுக்கு இந்த வருடத்தின் மத்திம பாகத்தில் திருமணம் ஏற்படும். போட்டி, பந்தயங்களில் வெற்றி கிட்டும். நண்பர்கள் உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். ராசியான எண் : 1, 3, 9. நாட்கள் : ஞாயிறு, திங்கள், வியாழன், வெள்ளி. திக்கு : தெற்கு / மேற்கு. வழிபாடு: குருவழிபாடு சிறந்தது.

**ரிஷபம் :** ஆரம்பமே மேன்மையான வருடமாக உள்ளது. குடும்பத்தில் சுபகாரிய பிரார்த்தனைகள் நடக்கும். திடீர் தனவிருத்தி ஏற்படும். ஒரு குழப்பமான பிரச்னைக்கு விடை கிடைக்கும். சிலருக்கு வேலை வாய்ப்பினைக் கருதி வெளிநாடு செல்லும் வாய்ப்பு வீட்டுக் கதவைத் தட்டும். புதிய வியாபாரம் (அ) கமிஷன், கான்டிராக்ட் ஆதாயம் சேர்க்கும். மாணவர்களுக்கு எதிர்பார்த்தபடி அட்மிஷன் கிடைக்கும். பங்கு மார்க்கெட் வியாபாரத்தில் புதிய மாறுதல் ஏற்படும். பெண்களுக்கு ஆடை ஆபரணங்கள் சேரும். இந்த ஆண்டு கடைசி பாகத்தில் எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. வயதான பெண்மணிகள் உடல்நலத்தில் அக்கறை செலுத்துவது நல்லது.

**மிதுனம் :** இந்த ஆண்டு ஆரம்பத்தில் சில சோதனைகள் இருந்தாலும், மத்திம பாகத்தில் சோதனைகள் விலகி சாதனைகள் படைப்பீர்கள். திருமணம் கை கூடும். முன்னேற்றம் கிட்டும். சிலருக்கு இடமாற்றம் நிர்ப்பந்த மாற்றமாக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. தொழில் செய்பவர்கள் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. ஜாமீன் போடுவது கூடாது. குடும்பத்தில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. கலைஞர்களுக்கு பொற்காலம். வயதானவர்களுக்கு உடல் ஆரோக்கியத்தில் கவனம் அவசியம். அதிர்ஷ்ட எண் : 5, 6. நாள் : ஞாயிறு, புதன், வியாழன், சனி. கல் : மரகதம்

**கடகம் :** இந்த வருடம் நன்மையும், தீமையும் கலந்து நடக்கும் வருடம். எதிலும் எச்சரிக்கையாக கவனமுடன் செயல்படுவது நல்லது. கொடுக்கல் வாங்கல் - எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. திருமணம் ஆகாத பெண்களுக்கு







# தஞ்சை பரத்வாஜ்



திருமணம் கைகூடும். திடீர் வைத்திய செலவுகள் ஏற்படும். வேலையில் இருப்பவர்கள் அவசரப்பட்டு வேறு வேலைக்கு முயற்சி செய்ய வேண்டாம். குழந்தைப் பேறு இல்லாதவர்களுக்கு குழந்தை பாக்கியம் கிட்டும். மாணவர்கள் சிரத்தையுடன் படிக்கவும். கலைஞர்கள் நற்பலனைப் பெறுவார்கள். எழுத்தாளர்களுக்கு பொற்காலம். அதிர்ஷ்ட எண் : 1, 5. நாள் : ஞாயிறு, திங்கள், செவ்வாய். கல் : கனகபுஷ்பராகம்

**சிம்மம் :** இந்த வருடத்தின் முதல் ஆறு மாதங்கள் சிறப்பானவை. தொட்டது துலங்கும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்கும். மாணவர்களுக்கு விரும்பிய துறைக்கு சீட்டு கிடைக்கும். திருமணம் ஆகாத பெண்களுக்கு திருமணம் நடக்கும். கணவன் மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நன்மையை அளிக்கும். உத்யோகஸ்தர்கள் தான் உண்டு வேலை உண்டு என்று இருப்பது நல்லது. குடும்பப் பெண்மணிகள் உடல் நலத்தில் கவனம் தேவை. விரதம் அதிகம் இருப்பதைத் தவிர்க்கவும். அரசியல்வாதிகள் நற்பலனை அடையலாம். அரசாங்க விருதுகள் சிலருக்குக் கிடைக்கும். அதிர்ஷ்ட எண் : 1, 5, 6. நாள் : ஞாயிறு, புதன், செவ்வாய், வியாழன், வெள்ளி. கல் : மாணிக்கம்

**கன்னி :** இந்த வருடத்தின் முதல் மூன்று மாதங்கள் சோதனைகள் வந்தாலும், அதன்பின் கஷ்டங்கள் விலகி சனி நல்லது செய்யும் . குடும்பப் பெண்மணிகள் கணவருடன் அனுசரித்துப் போவது நல்லது. குழந்தைப் பாக்கியம் இல்லாதவர்களுக்கு குழந்தைப் பேறு கிட்டும். தொழில் தொடங்க உள்ளவர்கள் மூன்று மாதம் கழித்து ஆரம்பிப்பது நல்லது. உத்தியோகத்தில் பணிமாற்றம் (அ) இடமாற்றம் ஏற்படும். வயதானவர்களுக்கு உடல் நலம் சீரடையும். அதிர்ஷ்ட எண் : 5, 6. நாள் : புதன், வியாழன், வெள்ளி, சனி. கல் : மரகதம்

**துலாம் :** குடும்பத்தில் சுபகாரிய நிகழ்ச்சிகளும், இதுவரை இருந்துவந்த கருத்து வேறுபாடுகளும் மறைந்து சுமூகமான மாற்றத்தை ஏற்படுத்தும். மாணவ மாணவிகள் பரீட்சையில் அதிக மதிப்பெண் எடுப்பார்கள். கணவனைவிட்டு பிரிந்து வாழ்ந்தவர்கள் இனி ஒன்று சேருவார்கள். திருமணம் ஆகாமல் தடைப்பட்டு வந்த பெண்களுக்கு திருமணம் உடன் கைகூடும். சிலருக்கு வீடு வாங்கும் அமைப்பு ஏற்படும். குழந்தைகள் பாராட்டு மழை பெறுவார்கள். பெண்மணிகளுக்கு ஆடை அலங்கார ஆபரணப் பொருட்கள் சேரும். நோய், நொடிகளால் பாதிப்பு இராது. அதிர்ஷ்ட எண் : 5, 6. நாள் : திங்கள், புதன், செவ்வாய், சனி. கல் : மரகதம்.

**விருச்சிகம் :** இந்த வருடம் சாதனை படைக்கப் போகிற வருடம். வருமானத்துக்குக் குறைவு இருக்காது. திருமணம் ஆகாத பெண்களுக்கு திருமணம் நடக்கும். வயதான பெரியோர்கள் உடல் நலம் சீர் அடையும். அதிபர்







## வாசகர்கள் சந்தேகங்கள்

# கல்யாணம் எப்ப? ● வியாபாரம் வள

**எஸ்.ரம்யா, கடலூர் :** *30 வயதுக்குள் மேற்கு / தெற்கு திசையிலிருந்து, தனியார் துறையில் வேலை செய்யும் நல்ல வரன் அமையும். ஒரே பிள்ளை / 2 சகோதர சகோதரி உள்ள குடும்பம். ஞாயிற்றுக் கிழமையில் திருமணம் நடக்கும்.*

**வி.பி. கோபால், சென்னை - 71 :** *மகனுக்கு வேலை பார்க்கும் பெண், இரு உடன் பிறந்தோர், மேற்கிலிருந்து வந்து டிசம்பர் 2005க்குள் அவசரத் திருமணமாக முடியும். பரிகாரம் வேண்டாம்.*

**வம்சராமன், சத்யா தோட்டம் :** *ராதா கல்யாணம் ஜூன் 2005க்குள். பன்னாட்டு நிறுவனத்தில் வேலை பார்க்கும் வரன், மேற்கு / தெற்கிலிருந்து வந்து நல்லபடி அமையும்.*

**சுகுமாரி ராதா கிருஷ்ணன், சென்னை-28 :** *11.2.2007 வரை சசிகலாவின் குழப்பம் நீடிக்கும். பின்பு திருமணம் நல்ல இடத்தில் அமையும். அதுவரை தெய்வ நம்பிக்கை வளர்ப்பது காப்பாற்றும். பரிகாரம் வேண்டாம்.*

**நதி ஸ்ரீ, கோவை - 12 :** *'அன்னராஜா'வுக்கு 2006ல் புனர்பூசம் / விசாகம் / பூரட்டாதி ஏதேனும் ஒன்றில் சனி / வியாழன் கிழமையில் பெண் குழந்தை பிறக்கும். வெளி நாடு செல்லும் யோகம் உண்டு.*

களுக்கு தொழில் விரிவாக்கம் ஏற்படும். ஏற்றுமதி இறக்குமதி தொழிலில் உள்ளவர்கள் கொடி கட்டி பறப்பார்கள். கலைஞர்களுக்கு விருதுகள் பெறும் காலம். மனைவி பெயரில் கணவர் மார்கள் தொழில் செய்தால் நல்ல வருவாய் கிடைக்கும். ஜூலை மாதம் முதல் எடுத்த காரியம் முற்றிலும் சக்ஸஸ். அதிர்ஷ்ட எண் : 1, 3, 9. நாள் : ஞாயிறு, திங்கள், வியாழன், வெள்ளி. கல்: கனகபுஷ்பராகம்

**தனுசு :** உங்களுக்கு இந்த வருடத்தின் 27.9.2005க்குப் பிறகு நன்மைகள் நிறைய நடக்கும். அதுவரை எதிலும் கவனமுடன் இருப்பது நல்லது. வேலையில் உள்ளவர்களுக்கு வேலை பளு ஜாஸ்தியாக இருக்கும். மனைவி மக்களை விட்டு விலகிச் செல்ல நேரிடும். இந்த வருடத்தில் குருப்பெயர்ச்சிக்குப் பிறகு நன்மை கூடும். வயதானவர்கள் ஆரோக்கியத்தில் கவனமுடன் இருப்பது நல்லது. வண்டி வாகனத்தில் செல்வோர் எச்சரிக்கையுடன் போனால் விபத்தைத் தவிர்க்கலாம். அதிர்ஷ்ட எண் : 1, 3, 9. நாள் : திங்கள், செவ்வாய், புதன், வியாழன். கல் : கனகபுஷ்பராகம்

**மகரம் :** இந்தப் புத்தாண்டு உங்களுக்கு பொன்னான ஆண்டாகப் பிறந்து இருக்கிறது. வாக்கு, சொல் வன்மை, புகழ், மதிப்பு மிகுந்து காணப்படும். பெண்களுக்கு திருமணத் தடைகள் நீங்கி திருமணம் நடக்கும். ஆபரணங்கள் சேரும். வயதானவர்கள் உடல்நிலை சீராகும். கலைஞர்களுக்கு பொற்காலம். விளையாட்டுத் துறையில், மாணவர்களுக்கு விருதுகள் கிடைக்கும். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். சிலருக்கு கௌரவப் பதவிகள் வந்து அணுகும். அதிர்ஷ்ட எண் : 1, 5, 6. நாள் : திங்கள், புதன், வெள்ளி, சனி. கல் : வைரம் / நீலம்.

**கும்பம் :** இந்த வருடத்தின் 3வது







## ...பெறுமா? ● பரிகாரம் தேவையா?

'த. ஜானு' வால் அதிகபட்சமாக ஜனவரி 2008 வரையே பிரச்னை. பின்பு எந்தப் பிரச்னையும் இல்லாமல் போய்விடும். மனதை திடமாக வைத்திருங்கள்.

**'ஓவிய' தேவி, சென்னை- 48 :** 1½ வருடங்களுக்குப்பின் கணவருடன் நிரந்தரமாக வெளிநாட்டில் வசிப்பீர்கள். குழந்தையின் நல்ல எதிர்காலம் வெளிநாட்டில் அமையும்.

**சேஷாத்திரி, சென்னை-40 :** உங்கள் பெயரிலோ, கூட்டாகவோ தொழில் வேண்டாம். மனைவி பெயரில் உணவு, கார்மெண்ட், கெமிக்கல், ஜுவெல்லரி - வியாபாரம் வளம் பெறும்.

**சுதர்ஸனன் :** தீவிர முயற்சியால் ஏப்ரல் 2005க்குப் பின் நிச்சயம் வெளிநாட்டு வாய்ப்புக் கிட்டும். பரிகாரமேதும் வேண்டாம்.

**ராமநாதன், சென்னை - 28 :** அனந்தகிருஷ்ணனுக்கு வெளிநாட்டு வேலை முயற்சியே நல்லது. இங்கு நல்ல வேலை இல்லை. 15.8.2005க்குப் பின் / 31 வயதில் மேற்கிலிருந்து, இரு உடன்பிறந்தவர் உள்ள பெண் நல்லபடி அமையும். ஞாயிற்றுக் கிழமையில் திருமணம் நடக்கும்.

மாதம் முதல் நற்பலன் நடக்கும். மனச் சலனங்கள் போகும். தொல்லைகள் விலகி குதூகலம் ஏற்படும். அக்கம்பக்கத்தில் இருப்பவர்களிடம் எதிலும் நிதானமாகப் பேசவும். மாணவ மாணவிகள் படிப்பில் அக்கறை செலுத்துவது நல்லது. நண்பர்களிடத்தில் அதிக பழக்கம் வேண்டாம். கலைஞர்கள் முன்னேற்றம் அடைவார்கள். உடற்சோர்வுகள் இருக்கும். நேரத்திற்கு சாப்பிடுவது நல்லது. அதிர்ஷ்ட எண் : 5, 6. நாள் : திங்கள், புதன், வியாழன், வெள்ளி. கல் : கனகபுஷ்பராகம்.

**'தஞ்சை பரத்வாஜ் பதில்கள்' பகுதிக்கு கேள்விகளை அனுப்பும் வாசகர்கள் மிக முக்கியமானதாகக் கருதும் இரண்டு அல்லது மூன்று விஷயங்கள் குறித்து கேள்விகள் அனுப்பலாம். பலருக்கும் பயன் தரக்கூடியதாக இப் பகுதி அமைய, அதிகமாகக் கேள்விகளை அனுப்புவதைத் தவிர்க்கும்படி கோருகிறோம்.**

**மீனம் :** இந்த வருடம் ஆரம்பமே இனிமையான ஆண்டாகும். திருமணம் ஆகாத பெண்களுக்கு விரைவில் சுபகாரியம் நடக்கும். வேலை தேடும் இளைஞர்களுக்கு வேலை உடன் கிடைக்கும். புதிய வீடு, மனை வாங்கும் சூழ்நிலை உருவாகும். வைத்தியச் செலவுகள் குறையும். கணவன் மனைவி உறவு மேம்படும். உத்தியோகஸ்தர்களுக்கு இது நாள் இருந்துவந்த தொல்லை விலகும். அதிர்ஷ்ட எண் : 1, 3, 9. நாள் : திங்கள், செவ்வாய், புதன், வியாழன். கல் : கனகபுஷ்பராகம்.







# குருதேவா



(குண்டர் சட்டம் பாயும் என்ற பயம் துளியுமின்றி திருட்டு வீசிடியில் 'குருதேவா' படம் பார்த்த சென்னை தாதாக்கள் இருவர், செல்ஃபோனில் பேசிக் கொண்டிருந்ததை ஒட்டுக் கேட்ட நமது சினிமா விமர்சகர், அதை அப்படியே இந்த வாரம் எழுதிக் கொடுத்து விட்டு, கூலாக கோடை மழையில் நனையப் போய் விட்டார்).

"டேய்... குரோம்பேட்டை கிரி, வியாசர்பாடியிலேர்ந்து வெள்ளை ராஜு பேசறேண்டா! ஏண்டா டுபுக்கு! ஹீரோ நம்மள மாதிரி பொருளு (கத்தி, கபடா, துப்பாக்கி) தூக்கி பொளப்பு நடத்துற பேமானின்னு சொன்னியாங்காட்டியும்னு 'குருதேவா' படத்தைக் குடும்பத்தோட பார்த்தேன்! கொய்யாலே! நம்ம நெசக்கத தேவல போலகிது! அது இன்னாபா, ஹீரோ லோக்கல் ரவுடின்னு தெரிஞ்சு, ஐந்நூறு கோடிக்கு அதிபதியா இருக்குற கோடீஸ்வர ஹீரோயினி லவ் பண்றா! அப்பாலிக்கா அந்தம்மா சொத்துக்கு வில்லனா வர்ற வக்கீலு விஜயகுமாரை, இவன் போட்டுத் தள்ளணும்னுதான் லவ் பண்ற மாதிரி நடிச்சதா டைரக்டரு பிலிம் காட்டுறாரு! இந்த பேமானி ஹீரோவும் 'காதல் பிச்சை போடு தாயி'ன்னு தொங்கறான். கடைசிலே நெசமாலுமே ஹீரோயினிக்கு நம்ம ரவுடி மேல லவ்ஸ் வந்துடுது. சரியான டுபாக்கூர் கதையாக்கிதே!"

"கதைய வுடுண்ணே! படத்தோட டைட்டிலப் பாரு! குருன்றது நம்ம ஹீரோ பேரு. தேவான்றது நம்ம ஹீரோயினி! ரெண்டையும் சேர்த்தா குருதேவா! சூப்பரா இல்லை."

"டேய் நம்ம கையிலே சிக்குனியாங்காட்டியும் கைமாதான். ஏண்டா படமாடா இது? சரியான படுத்தல்டா!"

"உன்னைய மாதிரி கிழடு கட்டைக்கெல்லாம்... குருதேவா காதலோட புனிதம் புரியாதுண்ணே! ஆக்டரு ஜெய்ஆகாஷு ரவுடி கேரக்டர்லே, நம்ம மெட்ராஸ் பாசைய என்னமா பேசிக்கிறாரு! என்னமா நடிச்சிக்கிறாரு."

"கய்தே! அது டப்பிங் வாய்ஸ்டா! மாரின்ற கேரக்டர்லே ரவுடிப் பையனோட நைனாவா நடிச்சிக்கிற நாசரு நடிப்பு சூப்பரு! அவுரு நடக்குறாரு பாரு ஒரு லொடுக்கு நட! படா நேச்சருப்பா"

"கடைசி சீன்லே ஹீரோயினி சூசைடு பண்ணிக்க டிரை பண்றப்போ கண்ணுலே தண்ணி வந்துடுச்சி! இந்தப் பேஜார் புடிச்ச பொழப்ப வுட்டுட்டு, குருமாதிரி ஒரு துட்டுப்பார்ட்டிய காதலிச்சு கண்ணாலம் பண்ணிக்கலாம்னு தோணுது."

"ச்சீ கஸ்மாலம்! பகல் கனுவு காண்றியா? பழைய சினிமால்லாம் பார்த்து கெட்டுப் போயி, அதே மாதிரி ஒரு படத்தை எடுத்துருக்காரு டைரக்டரு! அதப் பார்த்து நீ கெட்டுப் போயிராமே, பொளப்பப் பாருடா எம்புர்ரு..."

- விஷுவல்தாசன்

## நீங்கள் கேட்டவை – தராசு



• 'தள்ளு' - ஆடும் தலைகனம்!

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1.

? "செப்டம்பருக்குப் பிறகே நான் யாருக்கு எதிரி என்பது தெரியும்" என்கிறாரே விஜய காந்த்?

! அனுசரிப்பு எல்லாம் பிறகு இருக்கட்டும்... எதிர்ப்பையே முக்கிய நோக்கமாகக் கொண்டு அரசியலுக்கு வருவதே எதிர்க்கப் பட வேண்டிய விஷயம். இதில் யாரை எதிர்ப்பது என்ற குழப்பம் வேறு! தேவுடா!



• 'எதிரி' - பிரவேசம் - அரசியல்!

● ஆர். கர்ணன்,
பெத்தரங்கப்புரம்.

? தராசாரே! ஒரு சட்டப் பேரவைத் தலைவர் எப்படிச் செயல்பட வேண்டும் என்று கருதுகிறீர்கள்?

! சட்டப் பேரவையில் இடம் பெறும் அனைத்துக் கட்சியினரின் மதிப்பையும் பாராட்டையும் பெறுகின்ற வகையில்.



• எதிர்ப்பு - தீர்ப்பு - அவமதிப்பு!

# கங்குலி காப்டனாக நீடிக்கலாமா?

● எஸ். சக்தி,
விக்கிரமசிங்கபுரம்.

? சட்டமன்ற நிகழ்வுகளைப் பார்த்து மனம் மிகவும் சங்கடப்படுகிறதே... உறுப்பினர்களுக்கு என் போன்றோரின் எதிர்ப்பையும் கண்டனத்தையும் எப்படித் தெரிவிப்பது?

! தேர்தலின்போது உங்கள் வோட்டைப் பயன்படுத்தும் விதத்



• 'பாட்டு' - ஆட்டம் - ஓட்டம்?

தில்.

● **பொன்விழி, அன்னூர்.**

**? கமலின் 'மும்பை எக்ஸ்பிரஸ்' வெளியாகும் முன்பே கேசட் 1,75,000 விற்பனையானது சாதனைதானே?**

! சாதனைதான். பாடல்கள் இன்னும் ஒரு வருஷம் சென்ற பிறகும் மறக்கப்படாமல் மக்களால் முணுமுணுக்கப்பட்டால், அதை விடப் பெரிய சாதனை!

● **எஸ். அன்புமணி, ஈரோடு** ❐

**? இந்தியன் வங்கியில் 200 கோடி ரூபாய்க்கு ஒரு தொழிலதிபர் மோசடி செய்துள்ளாரே...?**

! முன்பே நடந்த மோசடிதான் இது. குற்றவாளி இப்போதுதான் கைது செய்யப்பட்டிருக்கிறார். அயல்நாட்டில் பதுங்கி வாழ்ந்த அந்தத் தொழிலதிபரை சி.பி.ஐ பிடித்த விதம் தனிக்கதை. இனியாவது வழக்கு வேகமாக நடந்து, மோசடிக்குத் துணை போனவர்கள் தண்டிக்கப்படுவது அவசியம். இல்லாதுபோனால், மேலும் மோசடிகள் நடக்க ஊக்கமளித்ததாகிவிடும்.



● 'வண்ட' - தண்ட - வாளம்!

● **ஆர்.எம்.சு. மலை, அக்ரஹாரம் (அஞ்).**

**? மோசமாக ஆடி வரும் கங்கூலி காப்டன் பதவியில் நீடிக்க வேண்டும் என்கிறாரே கபில்தேவ்?**

! "கங்கூலி பேட்டிங்கில் சொதப்பினாலும் காப்டனாகச் சிறப்பாகப் பணியாற்றுகிறார்" என்ற சிலரது வாதம் ஏற்கத்தக்கது அல்ல. கிரிக்கெட்டில் ஒவ்வொருவரது பங்களிப்பும் முக்கியம். நமது வெற்றிகள், ஓரிருவரின் சிறந்த ஆட்டத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்து வருகின்றன. இது ஆரோக்கியமான போக்கு அல்ல. இந்த ஆரோக்கிய சூழலை உருவாக்குவதுதான் காப்டனின் முக்கியப் பணியாக இருக்கணும்.

● **டி. முருகேசன், திருவாரூர் - 1.**

**? வாட் வருவதால் மக்களுக்கு நற்பயன் உண்டா?**

! வாட் அமலான மாநிலங்களில் சில பொருள்களின் விலை குறைகிறது; சில வற்றின் விலை அதிகரிக்கிறது. வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் கலந்துதான் வரும். வரி விதிப்பிலும் அப்படித்தான்!

● **ஜெயஸ்ரீ மகேந்திரன், சங்கரன்கோயில்.**

**? திருமாவளவன் திரைப் படத்தில் நடிக்கப் போகிறாராமே...?**

! அரசியலில் நடிப்பும், நடிப்பில் அரசியலும் மிகவும் சகஜமாகிவிட்ட இன்றைய சூழலில், திருமாவளவன் நடிக்க வந்தால் அதிசயமில்லை. எது நடிப்பு, எது அரசியல் என்று மக்கள் பகுத்தறியும் திறனை அடைவதுதான் அதிசயம். அந்த அதிசயமும் சில காலத்தில் நடக்கும்.

● **ஆர்.கே. எப்சிபா, சென்னை -12.**

**? கோடைக்கால மழை, குளிர் கால வெயில் - எது பரவசம்...?**

! நூற்றியொரு டிகிரி வெயிலைத் தண்ணென்று குறைக்கும் கோடை மழை பரவசம். குளிர்கால வெயில் இதம்.

● **ஜெ. மல்லிகா, சந்தனப்பள்ளி** ★

**? நமது தமிழக மக்களிடையே, வாசிக்கும் பழக்கம் வளர்ச்சி பெற்றுள்ளதா...?**

! வாசிக்கும் பழக்கமும் வாசிப்போரின் எண்ணிக்கையும் அதிகரித்திருப்பதை, பத்திரிகைகள் விற்பனை அதிகரித்துள்ளதன் மூலம் அறியலாம்.



● 'சமய' - யோசித - விளக்கம்!

❐ ரூ 100 பரிசு பெறுபவர்:
எஸ். அன்புமணி,
3, சொக்கநாத வீதி,
ஈரோடு - 638 001

ஆனால் வாசிப்பின் தரம் உயர்ந்துவிட்டதாகச் சொல்ல முடியாது.

● சி. சசிகலா தேவி,
விருதுநகர்.

? தமிழகத்தை அடுத்து ஆள்வதற்குரிய திறமை யாருக்கு உள்ளது என்று நினைக்கிறீர்கள்?

! சமர்த்தாக வோட்டுப் போட்டால், மக்களுக்கு.



• 'திரை'-மா-வளவன்!

● ஆர். வஸந்தா,
சென்னை - 86.

? பல சாமியார்களின் வண்டவாளம் தண்டவாளம் ஏறிவிட்டது... இனியாவது ஜனங்கள் 'சாமியார்' என்ற மாய வலையில் சிக்கிக் கொள்ளாமல் சுய அறிவுடன் வாழ்க்கை நடத்துவார்களா...?

! இதுவரை பாடம் கற்றிராவிட்டாலும், பிரேமானந்தாவுக்கு உயர்நீதிமன்றம் விதித்த தண்டனையை உச்சநீதிமன்றம் உறுதிசெய்த பிறகாவது கற்பார்கள் என்று நம்புவோம். வாழ்க்கையில் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ள குறுக்கு வழியெல்லாம் கிடையாது. தெய்வ நம்பிக்கை எவ்வளவு முக்கியமோ, அவ்வளவுக்குத் திட்டமிடலும் உழைப்பும் முக்கியம் என்று உணர்ந்தால், போலிச் சாமியார்களிடம் ஏமாற மாட்டோம்.

● நகை. இ. மகாராசன், சின்னமனூர்

? "சமயத்தைப் பரப்ப வந்த கால்டுவெல், போப், ராபர்ட், சீகன் பால்க் போன்றோர் தமிழ் படித்து, அதைச் செம்மொழி என்று கூறி சிறப்புச் செய்தனர். ஆங்கிலேயர்களால்தான் தமிழ் பிழைத்தது..." என்கிறாரே அன்பழகன்.

! மதத்தைப் பரப்புகிற உள்நோக்கம் இந்த ஆங்கிலேயர்களுக்கு இருந்ததை நாம் ஒப்புக் கொள்ளும்போதே, மொழிச் சேவை அவர்களுக்கு இரண்டாம் பட்சம்தான் என்றாகிவிடுகிறது. உண்மையில் அந்த உள்நோக்கத்தால் விளைந்த பெரிய நன்மை, தமிழில் நவீன அச்சுத்தொழில் அறிமுகமாகி, பிற நூல்களும் அச்சு வடிவம் பெற வழி பிறந்ததுதான்.

● க. குழந்தைவேல்,
மேட்டுத்திருக்காம்புலியூர் ★

? இன்றைய சூழ்நிலையில் மனிதர்களிடம் மிக அதிகமாகச் சுயநலம் பெருக என்ன காரணம்...?

! 'தேவைகள்' தேவைக்கதிகமாகப் பெருகிவிட்டதுதான். அவ்வளவையும் அடைந்து அனுபவிக்கணும்னா, ஒருத்தர் சுயநலமாயிருந்தாத்தான் முடியும். அவ்வளவு 'தேவை'கள்!

● கல்யாண மீனாக்ஷி,
சென்னை - 61.

? டான்ஸி நிலம் யாரிடம் இருக்கிறது இப்போது...?

! உச்சநீதிமன்றம் ஆணையிட்டபடி அதை ஜெயலலிதா இன்னும் டான்ஸிக்குத் திருப்பித் தராததை எதிர்த்துப் போராடப் போவதாகக் குரல்கள் எழுந்துள்ளன. அம்மா இன்றுவரை இதுபற்றி வாய் திறக்கக் காணோம். சீக்கிரம் செயல்படாது போனால் நீதிமன்ற அவமதிப்பாகி விடும். ○

★ ரூ. 50 பரிசு பெறும் இருவர்:
ஜெ. மல்லிகா,
த/பெ. ஜெயராம்,
முத்தூர், சந்தனப்பள்ளி (அஞ்)
கிருஷ்ணகிரி மா.வ

★ க. குழந்தைவேல்,
மேட்டுத்திருக்காம்புலியூர்,
கிருஷ்ணராயபுரம் வட்டம்,
கரூர் மாவட்டம்,
639 102.

பகவான் கிருஷ்ணாவதாரம் பண்ணி கோகுலம், பிருந்தாவனம், துவாரகை என்று மூன்று இடங்களிலும் ஜ்வலித்ததைப் பார்த்தோம். பகவத் அவதாரமே அக்னியினுடைய பெருமையைக் காட்டுவதற்குத்தான். அக்னியாகவும் இருந்து, அக்னிக்கு அந்தர்யாமியாகவும் இருந்து அவனே பலனைக் கொடுக்கிறான்.

வேதத்தில் பல இடங்களில் அக்னி என்ற சப்தத்துக்கு அக்னி என்றே பொருள். அதே வேதத்தில் வேறு சில இடங்களில், அக்னி சப்தத்துக்கு 'அக்னியில் அந்தர்யாமியாய் இருக்கிற பகவான்' என்றும் பொருள் வருகிறது.

சுவாமி தேசிகன், ரஹஸ்ய த்ரய ஸாரம் என்கிற கிரந்தத்தில் ரொம்ப அழகாக விவரிக்கிறார் :

ஒரு ராஜ சேவகன் ராஜாவுக்குப் பன்னீர் தெளிக்கிறான்... சந்தனம் பூசுகிறான். அப்படிப் பூசுகிறபோது, ராஜா பட்டுப் பீதாம்பரங்களெல்லாம் போட்டுக் கொண்டிருக்கிறான். அதற்கு மேலே பன்னீர் தெளிக்கிறான் என்றால், பூமாலையைப் போடுகிறான் என்றால், மேலே போட்டுக் கொண்டிருக்கிற ஆடை அணிகலன்களா சந்தோஷப் படுகின்றன?! அவற்றைத் தாங்கி உள்ளுக்குள்ளே இருக்கிற அரசனின் மனம் தானே சந்தோஷப்படுகிறது! பணிவிடையினாலேயும், பண்ணக் கூடிய ஆராதனையினாலேயும் மனம்தானே மகிழ்கிறது!

அந்த மாதிரி, எந்த தேவதையாக இருக்கட்டும்... அக்னியாயிருக்கட்டும். வாயுவாயிருக்கட்டும்... அந்த தேவதைக்கு அந்தர்யாமியாய் இருக்கக் கூடிய பரமாத்மா சந்தோஷிக்கிறான் என்பதை நாம் உணர வேண்டும்.

ஆகையினாலே, பூதப்ருத் என்றதனாலே, சர்வதேவதாந்தர்யாமியாய் இருந்து சமஸ்தத்தையும் தாங்கக் கூடியவன் அந்த எம்பெருமான் என்பதை, சஹஸ்ரநாமம் அழகாகக் காட்டுகிறது. அதையே ஆழ்வார்களும் ஆசார்யர்களும் காட்டினார்கள்.

யக்ஞத்தினால் பகவானை ஆராதியுங்கள் என்று கூறும் சாஸ்திரமானது, நமக்கு ஏதாவது பிரயோஜனமிருந்தால் தான் அந்தக் காரியத்தில் ஈடுபடுவோம் என்பதை உணர்ந்து, அதற்கான பலன் என்ன என்று பலச்ருதி



# குறையொன்றுமில்லை

யையும் சொல்கிறது.

யக்ஞத்தைச் செய்கிற யஜமானன், ஸகல விருப்பங்களும் நிறைவேறி, சகல க்ஷேமங்களையும் அடைவான் என்கிறது. இப்படிச் சொல்லி, யக்ஞ கர்மாக்களிலே நமக்குப் பற்று உண்டாகும்படி பண்ணுகிறது. வேதம் சொல்லும்படியான அந்த வார்த்தை சத்தியமான வார்த்தை. கட்டாயமாக அந்தப் பலன் நமக்குக் கிடைக்கும். அப்படிப்பட்ட யக்ஞாதிகளைப் பண்ணுவதற்கு சக்தி உடையவர்கள் அதையெல்லாம் பண்ணி பயனடைந்தார்கள், அந்தக் காலத்திலே சிறந்த மகான்கள். இன்றளவும் அவ்வாறு பண்ணுகிறவர்கள், இருந்து கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், 'அந்த மாதிரி எல்லோராலும் யக்ஞம் பண்ண முடியாதே... என்ன பண்ணுவது?' என்று கேட்டால், யக்ஞ ஸ்தானத்தில் இருக்கும்படியான எம்பெருமானே அதற்குப் பதில் சொல்கிறான்.

'பிருஹதே விஷ்ணும் சுமதிம் பஜாமஹே'

- 'பிருஹத்' என்று மிகவும் உயர்ந்தவனாய் இருக்கக்கூடிய எம்பெருமானின் திருநாமத்தை யார் நன்கு உச்சரிக்கிறார்களோ, வெட்கத்தை விட்டு யார் பக்திப் பரவசத்துடன் ஆனந்தமாய் எம்பெருமான் நாமாக்களை உச்சரிக்கிறார்



களோ, அவர்களுக்கு எல்லாப் பலனும் ஏற்படுகிறது.

யக்ஞத்தினால் ஆராதித்தால் பகவான் என்ன சந்தோஷத்தை அடைவானோ, அதே சந்தோஷத்தை நாம சங்கீர்த்தனத்தினால் அடைந்து, நமக்கு அனுக்ரஹம் பண்ணுகிறான். - இவ்வாறு வேதமே நமக்கு எடுத்துச் சொல்கிறது. ஆகவே, யக்ஞ கர்மாவினால் பகவானை ஆராதனம் பண்ண முடியவில்லை என்றால், அவன் திருநாமத்தை நன்கு சொல்லுங்கள். முதலாவது (யக்ஞம்) நமக்கு முடியுமோ முடியாதோ, இரண்டாவதை நன்கு பண்ணலாம். அவன் திருநாமத்தை உகந்து, நம்

"படத்துல ஹீரோ சதா சாப்பாட்டைப் பற்றியே பேசறார்!"

"'லஞ்ச்' டயலாக்னு சொல்லு!"

- அம்பை தேவா

கிருஹத்தில் உட்கார்ந்தபடியே சொல்லலாம்.

'யக்ஞானாம் ஜப யக்ஞோஸ்மி' என்றான் பகவத் கீதையிலே.

பெரிய யக்ஞம் பண்ணுவதற்கு நிறைய திரவியங்களெல்லாம் சேர்க்க வேண்டும்; பல பேரிடம் யாசிக்க வேண்டும்; அதிலே திரவிய லோபம் ஏற்படலாம்; நியம லோபம் ஏற்படலாம்; பல வித கஷ்டங்கள் இருக்கும். ஆனால், ஜப யோகத்துக்கு அந்தக் கஷ்டங்களெல்லாம் இல்லை. ஏகாந்தமாக உட்கார்ந்துகொண்டு, திருப்பித் திருப்பி பகவன் நாமாவைச் சொல்லிக் கொண்டேயிருக்கலாம். அப்படிச் சொல்லக் கூடியவர்களுக்கு, அதுவே உயர்ந்த யக்ஞமாய் இருப்பதனாலே, யக்ஞ பலனே கிடைக்கிறது.

'யக்ஞங்களுக்குள் ஜப யக்ஞமாய் நான் இருக்கிறேன்' என்று பரமாத்மா சொன்னதனாலே, சஹஸ்ரநாம ஜபம் என்று இதைச் சொல்ல வேண்டும். சஹஸ்ரநாம பாராயணம் என்பதைக் காட்டிலும், 'சஹஸ்ரநாம ஜபம்' என்பதே சரி.

இப்படி சஹஸ்ரநாமம் ஜபித்து, ஒவ்வொரு நாமாவாக நாம் பார்த்துக் கொண்டே வருகிறபோது, அத்தனை நாமாக்களும் வேத கருத்தை தங்கள் அகத்தே கொண்டவை என்பதைப் பார்க்கிறோம்.

எதுவாக இருந்தாலும் வேதத்தோடு சம்பந்தமிருந்தால்தான் அது பெருமை அடையும். அவைதிகமான விஷயங்கள் ஒரு நாளும் பெருமை அடையவே அடையாது. அந்த வேத சம்பந்தம் நமக்கு இருக்கிறபோது அது சிறந்து விளங்குகிறது. சஹஸ்ரநாமத்துக்கு என்ன சம்பந்தம் என்று கேட்டால், வேத சம்பந்தம்தான். அதனால்தான் ஒவ்வொரு நாமாவையும் நாம் பார்க்கிறபோது ஒவ்வொரு வேத மந்திரத்தை எடுத்தாண்டு சொல்லிக்கொண்டே பார்த்து வருகிறோம்.

இரண்டாவது சுலோகத்திலே பார்ப்போம்.

*'பூதாத்மா பரமாத்மாச முக்தானாம் பரமா கதி'*
*அவ்யய புருஷ ஸாக்ஷி க்ஷேத்ரக்ஞோக்ஷர யேவச'*

பூதாத்மா என்று அவனைக் கொண்டாடுகிறது சஹஸ்ரநாமம்.

அந்த எம்பெருமான் சர்வ சராசரங்களுக்குள்ளேயும் இருக்கிறான். இவையெல்லாவற்றையும் படைத்து இவற்றின் உள்ளே இருப்பதுடன், இவற்றுக்கு வெளியேயும் அவன் இருக்கிறான் என்றால், உலக சம்பந்தமான இந்த விஷயங்களால் அவனுக்கு பாதிப்பு உண்டா? உலக விஷயங்களுக்கு வரக்கூடிய குண தோஷங்கள் அவனுக்கும் சம்பவிக்குமா? என்று கேட்டால், "இல்லை! அவன் பரம பவித்ரமாக இருக்கிறான்'' என்கிறார்கள் எல்லோருமே.

உபநிஷத்தில் அழகாக ஒரு சுலோகம் படிக்கப்படுகிறது. இது பகவானுடைய பெருமையையும், சக்கரத்தாழ்வார் பெருமையையும் எடுத்துச் சொல்கிறது. அவனை அடையக்கூடியவர்களையெல்லாம் பாவனமாக்குகிறது, அவன் அண்மை என்று சொல்கிறது இந்த சுலோகம்.

எம்பெருமானுடைய திவ்ய ரூபமானது, அவனுடைய ஸ்மரணமானது ஸ்மரிக்கக் கூடியவர்களையும் பாவன மாக்குகிறது.

சபரி ராமனைப் பார்த்துச் சொல்கிறாள் : "ஹே ராமா! உன்னுடைய திவ்யமான, ஸௌம்யமான பார்வையினால் அடியாள் பார்க்கப்பட்டேன்... இப்போது பாவனமாகிவிட்டேன். பவித்ரமாக இருக்கிறேன். உத்தமமான லோகத்துக்குப் போய்க் கொண்டேயிருக்கிறேன்'' என்கிறாள்.

பகவானுடைய பார்வை பட்டவுடனேயே பாவனத் தன்மை அடைந்து விட்டாள் அவள். அவன் எவ்வளவு பவித்ர மூர்த்தியாக, பூதாத்மாவாக இருந்தால், மற்றவர்களைப் பாவனமாக்க முடியும்.

பகவான் மாறி மாறி பல அவதாரங்கள் அடைந்து பூமியில் தோன்றுகிறானே, அவன் அவதாரங்களுக்குக் கணக்கே கிடையாது. அப்படிப்பட்ட அவதார காலத்திலே அவனுக்கு தோஷங்கள் சம்பவிக்காதா...?

கர்ப்ப வாஸம் பண்ணுகிறான் பகவான். தேவகியின் கர்ப்பத்திலே இருக்கிறான். கர்ப்பத்தில் இருக்கிற கஷ்டங்கள், கிலேசங்கள் அவனிடம் இருக்கிறதா என்பது கேள்வி. அதைத்தான் விஷ்ணுபுராணத்திலே பராசர மஹரிஷி, கிருஷ்ணாவதாரத்தைக் குறிக்கும்படியான சுலோகத்திலே சொல்கிறார்.

ஆதி சங்கர பகவத் பாதாள், விஷ்ணு புராண மகிமையை எடுத்துச் சொல்கிற போது, 'ஒருத்தருக்கு தத்துவ விசாரத்திலே ஞானம் ஏற்பட வேண்டும் என்றால், விஷ்ணு புராணத்தைப் பார்க்க வேண்டும் என்கிறார். நிறைய விஷ்ணு புராண சுலோகங்களை மேற்கோள் காட்டி, அதன் மூலம் சஹஸ்ரநாம அர்த்தம் புரியும்படி பண்ணுகிறார்.

''விஷ்ணுபுராணத்தில் தத்துவமானது நமக்குத் தெரிகிறது. பாகவதத்தைப் பார்த்தோமானால் பக்தி விஞ்சி நிற்கிறது. பாகவதத்தில் கிருஷ்ணாவதாரத்தைக் குறிக்கிற போது :

"வஸு"தேவர் பார்த்தார். சங்க சக்ராதிகளுடன் கூட, கௌஸ்துப மணியோடு, ஆச்சர்யமான திவ்ய ரூபத்தோடு பகவான் வைகுண்டத்திலே எப்படி இருக்கிறானோ, அப்படி வந்து பிறந்தான். திவ்யமங்கள விக்ரஹம்'' என்று பகவானுடைய வடிவழகு பேசப்படுகிறது ஸ்ரீமத் பாகவதத்திலே.

இது கிருஷ்ணாவதார சுலோகம்.



இதையே விஷ்ணு புராணம் தத்துவமாக நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

தேவகி என்கிற கிழக்கு திக்கிலிருந்து அச்சுதனாகிற - கிருஷ்ணனாகிற - சூரியன் உதயமானான். எதற்காக? இந்த உலகத் தாமரையை மலரச் செய்வதற்காக - உலகமாகிற தாமரைப் புஷ்பத்தை மலரச் செய்வதற்காக.

இந்த உபமானத்தில் நாம் தெரிந்துகொள்ளக் கூடிய உயர்ந்த விஷயம் ஒன்று அடங்கியிருக்கிறது.

(வளரும்)

# பேரு ரொம்ப ஜோரு!

'You cheat' என்ற தெலுங்குப் படத்தை கன்னட ஹீரோ நடிக்க, முன்னணி இயக்குநரை வைத்து, மும்பை பட தயாரிப்பாளர் தமிழில் ரீமேக் செய்தபோது, ஒரு பெரிய ஸ்டார் ஹோட்டலில் கிட்டத்தட்ட ஒரு மாதமாக டைட்டில் டிஸ்கஷன் செய்து 'Pay Money' என்ற பெயர் தேர்வு செய்யப்பட்டிருந்தது.

பிரபல நியூமராலஜி மற்றும் நேமாலஜி நிபுணர்கள் இந்த டிஸ்கஷனில் கலந்து கொண்டதில் இந்த லட்சுமி கடாக்ஷ பெயரால் படம் ஓஹோவென்று ஓடி, கொட்டோ கொட்டென்று கொட்டப் போகிறதென்று நம்பி, மேற்கொண்டு தயாரிப்பை ஆரம்பித்தார் மும்பைக்காரர். "யூ ச்சீட்!" ஒரு இசகு பிசகான கதை. தெலுங்கு, கன்னட, மலையாள என்ற எந்த பண்பாட்டுக்கும் ஒவ்வாத அந்தக் கதையை தமிழில் எடுத்தாலும், அதே கதைதான். யாரும் இப்படி ஒரு பாழாய்ப் போன கதை, சமுதாயத்தைப் பாழாக்க வகை செய்யுமே என்று யோசிக்கப் போவதில்லைதான். மாறாக இப்படிப்பட்ட படங்களுக்கு பேராதரவு தமிழ்ப்பட ரசிகர்களிடம் மும்பைக்காரர் எதிர்பார்த்ததின் விளைவுதான் 'யூ ச்சீட்' ரீமேக் ஆவது. கல்லூரியையும் காதலையும் எத்தனை கொச்சைப் படுத்த முடியுமோ, அத்தனை உச்சத்தில் அசிங்கப்படுத்தி திரைக்கதையை அமைத்து, அந்த மலையாள இயக்குநர்



## அகிலா கார்த்திகேயன்

தமிழ் ரசிகர்களுக்காக மேலும் பல பிரத்யேக காட்சிகளையும் எடுத்துக் கொண்டிருந்ததில் தயாரிப்பாளருக்கு பரம திருப்தி! படம் பிய்த்துக் கொண்டு ஓடப் போகிறதென்பதென்பதை நினைக்கையில் அவருக்கு ஏக சந்தோஷம். இந்த சந்தோஷத்தில் கிராமியச் சூழல் கதைக்காக தமிழக கிராமங்களையெல்லாம் விட்டுவிட்டு இந்தோனேஷியா, அயர்லாண்ட் இத்யாதி நாடுகளுக்கு பட்டாளத்தோடு சென்று, அங்குள்ள கிராமங்களில் படமெடுக்கும் தெனாவெட்டில் தயாரிப்பாளர் திளைத்துக் கொண்டிருந்தார்.

அவருடைய சந்தோஷம் நிலைக்கவில்லை. படம் பாதிக்கு மேல் வளர்ந்துவிட்ட நிலையில் 'படத்தைத் தடை செய்' என்று 'தமிழ்த் திரை முன்னேற்ற முன்னணி' முழக்கமிட்டது. இதென்னடா வம்பு என்று தயாரிப்பாளர் ஆடிப்போய் "ஓவர் செக்ஸ் வைச்சு எடுக்காதேன்னு சொன்னேன் கேட்டாயா?" என்று டைரக்டரை கடிந்து கொண்டார். ஓவர் கவர்ச்சியாக போஸ் கொடுத்ததற்காக கொல்கத்தா கவர்ச்சி கதாநாயகியை நொந்து கொண்டார். ஆபாசமான பாடல் வரிகளுக்காக பாடலாசிரியரைச் சாடினார். எல்லோரையும் கலந்தாலோசித்தார்.

"என்னய்யா, உனக்கு தமிழ்ப் பெயரே கிடைக்கலை யாக்கும்?"

நல்ல தீர்மானத்தோடு முன்னணித் தலைவரை பார்க்கச் சென்றார்.



அவர் சென்றபோது தலைவர் வீட்டில் ஒரு பெரிய க்யூ நின்றது. அட! எல்லோருமே சக தயாரிப்பாளர்கள் தான்! ஒன்றும் விளங்காமல் இவரும் வரிசையில் நின்று பேச்சுக் கொடுத்தார். அப்போதுதான் அவருக்கு ஓர் உண்மை புரிந்தது. எல்லாத் தயாரிப்பாளர்களும் தங்கள் படத்தின் பெயருக்காகத்தான் கியூவில் நிற்கிறார்களென்றும், தலைவர்தான் ஒவ்வொரு படத்துக்கும் நல்ல தமிழ்ப் பெயரை சூட்டும் 'ரைட்ஸ்' வாங்கியிருக்கிறாரென்பதும் இவருக்குத் தெரிய வந்தது. தனக்கு ஏன் தயாரிப்பாளர் சங்கம் இதை தெரிவிக்கவில்லை என்று நொந்து கொண்டிருந்தபோது, கியூவில் பின்னால் வந்து நின்ற இன்னொரு தயாரிப்பாளர் சொன்ன சேதி இவருடைய பீதியைக் குறைத்தது.

''தலைவருக்குப் படம் எப்படியிருந்



''ஃபிலிம் ஃபெஸ்டிவல் அட் வான்ஸ்லெல்லாம் தர்றதுக்கு ரூல்ஸ்ல இடம் இல்லைய்யா!''

தாலும் கவலையில்லே. ஆனா தமிழ்லே பேர் வைக்கலேன்னா படத்தைத் தடை செய்யப் போராடுவாரு'' என்று அந்த தயாரிப்பாளர் சொல்ல, மும்பைக் காரருக்கு அப்பாடா என்றிருந்தது. இனி எடுத்ததைத் திருத்தவோ, எடுக்கப் போவதை சீர்திருத்தவோ தேவையில்லை யென்ற நினைப்பே குஷியைத் தந்தது.

இருந்தாலும், இப்பேற்பட்ட அதிர்ஷ் டப் பெயரான 'Pay Money' என்பதற்கு தலைவர் என்ன பெயர் மாற்றம் செய்து வைக்கப் போகிறாரோ, அதன் விளைவு என்னாகுமோ, என்ற பயத்தோடு கியூவில் தலைவரை நெருங்கினார்.

''என்னய்யா உனக்கு தமிழ்ப் பெயரே கிடைக்கலையாக்கும்'' தலைவர் இவரைச் சற்றுக் கடுமையாகக் கேட்டார்.

டைரக்டர், நடிகர், நடிகைகளிடம் இளிப்பது போக, இப்படிப் பட்ட தலைவர்களிடமும் தயாரிப்பாளர்கள் இளிக்கும்படி ஆகிவிட்டதே என்று நொந்தவாறு, மும்பைக்காரர் "ஹி! ஹி! தலைவரே ஒரு பேரை சொல்லிடுங் களேன்" என்றார்.

அப்போது தலைவரின் 'செல்' சிணுங் கியது. எதிர்முனையில் தலைவரின் கூட்டணியிலிருக்கும் இன்னொரு கட்சித் தலைவர் பேசினார் போலும்! பேசப் பேச தலைவரின் கரிய முகம் சிவந்தது. கோபம் உச்சத்தை அடைந்தது. தன்னிலை மறந்த வராக "பேமானி" என்று கத்திவிட்டார். உடனே தன் நிலையை உணர்ந்தவராய் செல்லை அழுத்திவிட்டு ஆயாசப்படுத் திக் கொண்டார்.

எதிரே நின்ற மும்பைக்காரர் "ஆஹா! ஜோரான பேர்! பேமானி!'' என்று புளகாங்கிதமடைந்து குதித்தபோதுதான் தலைவருக்கு சுருக்கென்றது. வரப்போகும் தேர்தலில் தன் கட்சிக்குச் சொற்ப இடம் தான் கொடுக்கப்படும் என்று செல்லில் பேசிய கூட்டணி கட்சித் தலைவரைக் கோபித்துக் கொண்டு, எக்குத்தப்பாக யோசிக்காமல் 'பேமானி' என்று எடுத் தெறிந்து பேசிய தன் மடமையை நொந்து கொண்டார். ஆனாலும் உடனே சுதாரித்தவராய்த் திரும்பவும் அந்த கூட்டணித் தலைவரை செல்லில் பிடித்து, தான் பேமானி என்று கத்தியது அவரை யல்ல, அது படத்தின் பெயரைக் கேட்ட படி எதிரில் நின்ற ஒரு தயாரிப்பாள ருக்குச் சொன்ன பதில்தான் என சாமர்த்தியமாகச் சமாளித்துவிட்டார்.

எது எப்படியோ 'Pay Money' என்ற நியூமிராலஜி தலைப்பை 'Pay Money' என்ற ஒரு 'U' போட்டு தமிழில் பேமானி என்று மாற்றியதில், மும்பைக்காரருக்கும் குஷிதான். இதனால் பெயரில் இன்னும் வீரியம் ஏறியிருப்பதாக எண் கணிதம் சொன்னது. தமிழும் வாழ்ந்தது! தலைவரும் தப்பித்தார்! தயாரிப்பாளரும் பிழைத்தார்! தமிழ் ரசிகன்? அட! அவன் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? ○



''உங்க படத்துக்கு ஏன் 'கர்புஸ்தக்பிகி'ன்னு பேர் வெச்சுருக்கீங்க?''

''என்ன மொழின்னு தெரியாம அரசியல் வாதிங்க முழி பிதுங்கட்டும்னுதான்!''

- வசந்தி வள்ளுவன்




**எனது கனவில் இந்தியா - அ. முகமது இஸ்மாயில்**

**பொ**றுப்புணர்வு அரசியல்வாதிகளிடமும், விழிப்புணர்வு மக்களிடமும் இல்லாமற் போனதால், எத்தனையோ வளமிருந்தும் ஏழ்மை தீரவில்லை, வாட்டம் தீரவில்லை, வாழ்க்கை உயரவில்லை இந்தியனுக்கு. விழிப்புணர்வு ஊட்டும் பொறுப்பு பத்திரிகையாளனுக்கும் இருப்பதால் இன்றைய நடைமுறைகளையும், அரசியலையும், சட்டங்களையும், தேர்தல்களையும் பற்றி வரைந்த ஆதங்கக் கட்டுரைகள். அச்சும், பதிப்பும், தொகுப்பின் நேர்த்தியுடன் போட்டியிடும் படைப்பு.

**யூனிக் பப்ளிகேஷன்ஸ், 40, வடக்குவெளி வீதி, மதுரை - *625 001* விலை ரூ.*100*/-**

**கருக்கடை பொ. அழகு கிருஷ்ணன்**

**வா**னம் பார்த்த பூமி. வறண்டுபோன வாழ்க்கை. கரிசல் காட்டு கிராமத்து வெள்ளந்தியான மக்களின் வாழ்க்கைச் சித்திரங்களை, மண்மணம் வீசும் வார்த்தைகளில் வடித்த சிறுகதைகளின் தொகுப்பு. கிராமத்து வாழ்க்கைச் சிக்கல்களைச் சொல்லும் வார்த்தைச் சிக்கல்கள் புரிபடத் தொடங்கும்போது, நாமும் அங்கே வாழ்வது போன்ற பிரமையை ஏற்படுத்தும் நடை. பதிப்பின் குறையை ஈடு செய்யும் படைப்பு.

**குரு பதிப்பகம், 137, முதல் குறுக்குத் தெரு, அன்புநகர் விரிவு, கிராப்பட்டி, திருச்சி *620 012* விலை ரூ. *35*/-**

**இரண்டாவது சந்திப்பு - மு. மாறன்**

பத்திரப் படுத்தும் கைக்குட்டை, அடகுக்கடை ரசீதுகள், தலை குனிய வைக்கிற இரவல் நகைகள் என்று வாழ்க்கையின் சராசரிச் சாலையில் நடை போடுகிற படிவங்கள். பூடகமான பொருளேதுமின்றி, சர்வ சாதாரண வாசகனுக்கும் புரிகிற உரைக் கவிதைகளின் தொகுப்பு. மேகம், வானம், மழை, மலை என்று கவிதை படைக்க கற்பனைகள் உயரேதான் பறந்து தீர வேண்டுமென்ற கட்டாயமில்லைதான். இருந்தாலும் வார்த்தைச் சரங்களின் வனப்பு, மறுவாசிப்புக்குள்ளாகிறபோது, தரையை விட்டு கொஞ்சம் உயர்ந்தால் இன்னும் வண்ணம் கூடுமோ என்ற எதிர்பார்ப்பு கூடுகிறது. அடுத்த 'சந்திப்பு' அதை நிஜமாக்கலாம் என்ற நம்பிக்கை பிறக்கிறது.

**குமரன் பதிப்பகம், 3. முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை - *17*, விலை ரூ.*60*/-**

**- விஷ்வக்**

# பாலி க்ளினிக்!



● குழந்தைக்குக் காய்ச்சல் ஏற்பட்டால் என்ன செய்வது? உடனடியாக டாக்டரிடம் அழைத்துச் செல்ல வேண்டுமா?

- சுமதி ராம், சென்னை

**டாக்டர் ஜெயந்தி விஸ்வநாதன், குழந்தைநல மருத்துவர்.**

குழந்தைக்குக் காய்ச்சல் என்றால் (குரோசின், கால்பால், ஃபெபனில் போன்ற) பாரசிடமால் மருந்தை உரிய அளவில் கொடுக்க வேண்டும். மூன்று மாதங்களுக்கு உட்பட்ட குழந்தை என்றால், காய்ச்சல் ஏற்பட்டதும் மருத்துவரிடம் காட்டுவது நல்லது. மூன்று மாதங்களிலிருந்து ஒரு வயதுவரை என்றால், அரை டீஸ்பூன் மருந்து கொடுக்கலாம். ஒன்றிலிருந்து மூன்று வயதுவரை என்றால், ஒரு டீஸ்பூன் (மாத்திரையாக இருந்தால் கால்பாகம்).

குழந்தைக்கு எப்போதும் இலேசான துணிகளையே அணிவிக்கவும். சிலர் குழந்தைக்குக் காய்ச்சல் என்றவுடன் ஸ்வெட்டர் அணிவித்து ஷால் போர்த்துகிறார்கள். இது தவறு. வெதுவெதுப்பான நீரில் துவாலையை நனைத்து குழந்தையின் உடல் முழுவதும் தடவுங்கள். வெறும் நெற்றியில் மட்டும் தடவிப் பயனில்லை. அக்குள், மார்பு, முதுகு போன்ற உடலின் எல்லா பாகங்களிலும் தடவ வேண்டும். இப்படி ஐந்து நிமிடங்களுக்குச் செய்தால் காய்ச்சல் குறைந்து விடும்.

ஒரு விஷயத்தை நினைவில் கொள்ள வேண்டும். ஆறு அல்லது ஏழு வயதுக்குள் குழந்தைக்கு தோன்றும் தொடர்ந்த காய்ச்சல், வலிப்பு நோயில் கொண்டு விடலாம். இதைத் தவிர்க்க மேலே குறிப்பிட்டபடி குழந்தையின் உடலை குளிரச் செய்வது மிகவும் முக்கியம்.



• அழகுக்கலை நிபுணர் எம். ஹசீனா

● ஒவ்வொரு முறை தலைவாரிக் கொள்ளும்போதும் தலைமுடி நிறைய கொட்டுகிறது. என்ன செய்வது?

வி. கல்பனா, புதுக்கோட்டை - 2

**எம். ஹசீனா சையத், ஆயுர்வேத அழகுக் கலை நிபுணர்.**

தலைமுடி கொட்டுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. மலச்சிக்கல் ஒரு காரணம். பொடுகு இன்னொரு காரணம். உங்கள் பகுதியில் உள்ள தண்ணீரில் உப்பு அதிகம் இருந்தாலும் தலைமுடி கொட்டலாம். நீங்கள் குடிக்கும் நீரில் குளோரின் அதிகமாகக் கலந்திருந்தாலும் தலைமுடி உதிரும்.

உங்கள் பகுதியில் உள்ள தண்ணீரில் உப்போ அல்லது குளோரினோ அதிகமாக இருந்தால், முன்னாளே பிடித்து வைத்திருக்கும் தண்ணீரில் தலைக்குக் குளியுங்கள். அப்போது தண்ணீரில் உள்ள ரசாயனப்பொருள்கள் கீழே தங்கிவிடும் அல்லது ஆவியாகிவிட்டிருக்கும் (குளிக்கும் போது மிகவும் கீழே இருக்கும் தண்ணீரை பயன்படுத்த வேண்டாம்).

உணவில் கீரை அதிகம் சேர்த்துக் கொள்ளுங்கள். கோடைக் காலம் துவங்கி விட்டது. எனவே பழச்சாறுகளை அதிகம் குடியுங்கள். பேரீச்சம் பழம் சாப்பிடுங்



• டாக்டர் **ஜெயந்தி**



• டாக்டர் **அனிதா**



• டாக்டர் **ஜெயந்தினி**

கள். வீட்டில் தயார் செய்யப்பட்ட தரமான சீயக்காயைப் பயன்படுத்துங்கள்.

தேங்காய் எண்ணெய், விளக்கெண் ணெய் ஆகிய இரண்டையும் சமமாகக் கலந்து சூடு செய்து தலைக்குத் தேய்த்துக் குளியுங்கள். இதனால் தலைமுடி கொட்டு வது நின்றுவிடும்.

**● என் மகள் பன்னிரண்டு வயதில் பூப்படைந்தாள். அவளுக்கு இப்போது பதினைந்து வயதாகிறது. மாத விலக்கு ஒழுங்காக வருவதில்லை. இரண்டு அல்லது மூன்று மாதங் களுக்கு ஒருமுறைதான் விலக் காகிறாள். அப்போதும் வெளி யேற்றம் பத்துப் பதினைந்து நாட்கள் தொடர்கிறது. தவிர அவள் உடலில் எடை அதிக மாகிக் கொண்டே போகிறது. நான் என்ன செய்வது?**

**- சங்கரி சுந்தர், கோவை - 1**

**டாக்டர் அனிதா பார்த்தசாரதி, மகப்பேறு மருத்துவர்**

அதிக வெளியேற்றத்தை Puberty Menorrhagia என்போம். உங்கள் மகளைப் பொறுத்தவரை இது எந்த வித சிகிச்சையும் செய்யாமலேயே தானாகச் சரியாகிவிடும் என்று தோன்றுகிறது. பதினெட்டு வயதாகும் போது பெரும்பாலானவர்களுக்கு மாதவிலக்கு கட்டுக்குள் வந்துவிடு

பூப்படைந்தபிறகு புதிய தகவல்களை மூளை ஏற்றுக் கொண்டு செயல்பட சிலருக்கு சில வருடங்கள் தேவைப்பட லாம்.

பதினெட்டு வயதாகியும் இதே நிலை இருந்தால் அப் போது உங்கள் மகளை டாக் டரிடம் அழைத்துச் சென்று காண்பியுங்கள்.

**● தொலைக்காட்சித் தொடர்களைப் பார்க்கும் போது உணர்ச்சிவசப்பட்டு விடுகிறேன். இது என் உடல்நலத்தை பாதிக்குமா?**

**- எம். விசாலி பாபு, பழனி - 3**

**டாக்டர் ஜெயந்தினி, மனநல மருத்துவர்**

எந்த அளவு என் பதைப் பொறுத்து உடல்நலம், மன நலம் இரண் டுமே பாதிக்



## - பெண்களுக்கான மருத்துவப் பகுதி ஆரம்பம்!

கிறது.

"கொஞ்சம் பொறுமையாக இரு. இதெல்லாம் ஹார்மோன்களின் தடு மாற்றத்தால் ஏற்படுகிறது. தானாகச் சீராகிவிடும்" என்று அவளை அமைதிப் படுத்துங்கள்.

கப்பட வாய்ப்பு உண்டு.

சிலர் ஏதோ கொஞ்ச நேரத்திற்கு ஒரு நிகழ்ச்சியைப் பார்த்தோம் என்கிற மட்டில் நிறுத்திக் கொள்வார்கள். இது தான் ஆரோக்கியமான போக்கு. ஆனால் வேறு சில பெண்கள் தொடரில் வரும்

# கேளுங்கள் பெண்களே!

**ம**ருத்துவம், மனநலம், அழகு, சமூகம், அந்தரங்கம் சம்பந்தப்பட்ட உங்கள் சந்தேகங்களை 'பாலி க்ளினிக்' என்று குறிப்பிட்டு அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்க. நிபுணர்கள் பதில் அளிக்கிறார்கள்...

ஒரு குறிப்பிட்ட பாத்திரத்தோடு தன்னை அடையாளப்படுத்திக் கொள்வார்கள். சிலருக்கு அந்த பாதிப்பு தொடர் ஒளிபரப்பு முடிந்து அரைமணிநேரம் அல்லது ஒரு மணி நேரத்துக்கு இருக்கும். இன்னும் சிலருக்கோ அந்த பாதிப்பு மனதின் அடி ஆழத்தில் பதிந்துவிடுகிறது.

தொடரில் இடம்பெறும் கொடுமைக்கார கணவன் அல்லது மாமியாரைப் பார்த்து "நல்லவேளை நமக்கு இப்படிப் பட்ட ஒரு கணவரோ மாமியாரோ அமையவில்லை. அந்த மட்டில் சந்தோஷம்" என்றும் எண்ணுவது ஒருவகை. தொலைக்காட்சித் தொடரைப் பார்த்த பிறகு சந்தேகத்தோடு அணுகுவது இன்னொரு வகை. பெரும்பாலானவர்கள் இரண்டாவது வகையினர்தான். காரணம் மனித மனம் பெரும்பாலும் எதிர்மறையான எண்ணங்களிடம்தான் முதலில் ஈர்க்கப்படுகிறது. அதுவும் ஏற்கெனவே பாதிக்கப்பட்டிருக்கும் பெண் என்றால், தொலைக்காட்சித் தொடரைப் பார்த்து விட்டு தன் எதிர்கால வாழ்க்கையைக் குறித்து எதையெதையோ கற்பனை செய்து கொண்டு அச்சப்பட வாய்ப்பு அதிகம்.

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்**



# சின்னான் செய்திகள்



"இந்தப் படத்துல அவங்களைத் தவிர வேற யாராவது எனக்கு 'ஜோ'டியா நடிச்சிருந்தா, சரிப்பட்டு வந்திருக்காது. நான்கூட இரண்டு, மூணு டேக் வாங்கினேன். ஆனா அவங்க 'ஜோ'ரா ஒரே டேக்ல அசத்துனாங்க" - சமீபத்தில ஒரு டீவி பேட்டியில் ஒவரா 'ஜோ'ன்னுனாரு நம்ம மாயாவி...! ஜோ...ஜோ... ஜோதிகா... இப்ப கல்யாணத்துக்கு ஒத்துக்கிட்டாங்க! அவசரப்படாதீங்க! நான் என்ன சொல்ல வரேன்னா... என்ன, எப்ப கல்யாணமா? ஹலோ நான் சொல்றதைக் கேளுங்க! என்ன... கல்யாணம் எங்க .வைச்சா?...ஹலோ பொறுமையா நான் சொல்றதைக் கேளுங்க. சீதா கல்யாணத்துக்கு ஒத்துக்கிட்டாங்க. ஆமா, சீதா எதுக்கு கல்யாணத்துக்கு ஒத்துக்கணும்னு குழம்பாதீங்க! நான் சொல்ல வர்றதை தெளிவா முதல்லயிருந்து சொல்லட்டா... இல்ல எனக்கே குழப்பமாயிருக்கு... கடைசியில சொல்றேன்.



"இளைஞர்களை வைச்சிருக்கேன் குறி! அதை நம்பித்தான் ஓட்டுறேன் கோலிவுட்ல தறி! ஜூனியரான சிம்பு காலத்திலேயும் இருப்பான் டி.ஆரு. 'ஜூனியர் சிம்பு' காலத்திலும் நடிப்பான் நீ பாரு!"

- அப்படியெல்லாம் 'ரசிகர்களை பீதியாக்கிருக்காரு வீராச்சாமி! இதுக்கு நான் என்ன சொல்ல! அவரோட 'மன தைரியத்தை' மனசாரப் பாராட்டிட்டு, ரசிகர்களை எதுக்கும் தயாரா இருங்கன்னு மனசார வாழ்த்தறேன்!

முடிச்சூர் சீனிக்கும்,' மகாவுக்கும் 'காதல் கரண்ட்' கன்னா பின்னான்னு தாக்கி, கொஞ்ச நாள் 'மீட்டர் ரீடிங்' ஓடியிருக்கு. நம்ம சீனிக்கு, ஈ.பி.ல ரீடிங் எடுக்கற வேலை கிடைச்சதும், மகாவோட 'காதல் கனெக்‌ஷனை' கட் பண்ணிட்டாராம். 'ஷாக்'கான மகா, தாம்பரம் மகளிர் காவல் நிலையத்துல 'புகார்' கொடுக்க, சீனி இப்போ ஃபியூஸ் போன பல்பா, எரிந்து போன வயரா, ஜெயில்ல கெடக்காரு. காதல் ஒரு கரண்டு... தொட்டுட்டு நிக்காத மிரண்டு... எப்படி நம்ம வரிகள் 'இரண்டு'!

சரி... சரி... சின்னான் கையில மாம்பழம் இருக்கிறதைப் பாத்திட்டு, நான் பா.ம.கவுல சேர்த்திட்டேன்னு குழம்பாதீங்க... 'ஜோ' நியூசைச் சொல்லிடுறேன். 'சீதா கல்யாணம்'- ஜோ மலையாளத்துல நடிச்சிருக்கிற படம். ஜோடி ஜெயராம். படம் இன்னும் வரல... ஓ.கே.வா! ○

# தமிழில் ஓர் ஆங்கிலப் படம்!



டாம் ஹேங்க்ஸ் நடித்து சில ஆண்டுகளுக்கு முன்பு வெளியான ஓர் ஆங்கிலத் திரைப்படத்தின் பெயர் காஸ்ட் அவே (Cast Away). ரேவதி இயக்கி பிரஸ் கிளப்பில் சமீபத்தில் வெளியிட்ட குறும்படத்தின் பெயரும் காஸ்ட் அவே தான். ஒரே வித்தியாசம் ஆங்கில எழுத்தான 'e' இதில் கூட்டப்பட்டிருக்கிறது (Cast'e' Away). எதிர்பாராமல் நேர்ந்த ஒரு விபத்தினால் டாம் ஹேங்க்ஸ் கடற்கரையில் தன்னந் தனியே துணையின்றி அவதிப்படுவது முதல் படத்தின் கதை. இரண்டாவது கதை சுனாமி வந்து அழித்துவிட்டுப் போன நாகப்பட்டினத்தில் ஆட்கள் இருந்தும், அரசாங்கம் இருந்தும், தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள் இருந்தும் தொடர்ந்து புறக்கணிக்கப்படும், அல்லல்படும் தலித் மக்களின் துயரத்தைப் பற்றியது. முதல் படம் கற்பனை. இரண்டாவது நிஜம்.



ஒரு காட்சி. சுனாமி அழிவுக்கு ஈடுசெய்யும் வகையில் அரசாங்கம் ஏதோ நிவாரணம் தருகிறது என்று கேள்விப்பட்ட ஒரு தலித் பெண், ஓர் அதிகாரியைச் சந்தித்து உதவி கேட்கிறார். அதற்கு அவளுக்குக் கிடைத்த பதில் இதுதான்.

''யாராவது செத்தாதான் பணம் கிடைக்கும்.''

''அதுக்காக நாங்க சாக முடியுமா?''

மற்றொரு காட்சி. மற்றொரு பெண். மற்றொரு அதிகாரி. பதில்தான் வேறு.

''அடுத்த சுனாமி வராமலா போய்டும். கட்டாயம் தரோம்.''

இந்த திரைப்படம் முன் வைக்கும் கேள்வி இதுதான். சுனாமியால் அதிகம் பாதிப்புக்குள்ளானவர்கள் மீனவர்கள்தான் என்பதில் ஐயமில்லை. அதற்காக அதே கடற்கரையின் ஓரங்களில் தங்களது வாழ்வாதாரத்தை இழந்து நிற்கும் தலித்துகள் மீனவர்கள் அல்ல என்பதற்காக நிவாரணம் மறுக்கப்படுவது எந்தவிதத்தில் நியாயம்? பாதிக்கப்பட்டவர்கள் என்ற வரையறைக்குள்கூட இவர்கள் இன்னமும் கொண்டு வரப்படவில்லை.



ஆங்கில காஸ்ட் அவேயில் இறுதியில் டாம் ஹேங்க்ஸ் கடற்கரையிலிருந்து மீட்கப்பட்டு விடுகிறான். சில பல இழப்புகளுக்குப் பிறகு, சோகங்களுக்குப் பிறகு மறுபடியும் தனது வாழ்க்கையை புதிதாகத் துவங்குகிறான். படம் முடிவடைந்து வெளியே வரும் பொழுது சோகத்தின் சாயல்கள் மறைந்து போய், ரசிகர்களால் நிம்மதிப் பெருமூச்சு விட முடிகிறது. ஆனால் இந்தக் குறும்படம் முடிவடையவில்லை. முடித்து வைக்க யாருமில்லை.

**- மருது**




கோவில்பட்டி எஸ்.தங்கராஜ்

ராத்திரி எட்டு மணி. அப்பா சுந்தரேசன் வீட்டுக்குள் நுழையும் போதே "கண்ணா" என்றுதான் நுழைந்தார். நடுங்கியபடி வந்த மனைவி,

"அவன் ஃப்ரெண்டு வீடு வரைக்கும் போயிருக்காங்க" என்றாள்.

"பரீட்சையைப் பக்கத்துல வச்சுக்கிட்டு ஊர் சுத்துறானா ராஸ்கல்" - உறுமிய சுந்தரேசன் "வரட்டும் அவன்" என்றார்.

அடுத்த அரைமணியில் பயந்து பயந்து வீட்டுக்குள் நுழைந்த கண்ணனை வரவேற்றது சுந்தரேசனின் பெல்ட்.

பின்னியெடுத்து விட்டார். "அம்மா...அம்மா..." என்று கண்ணன் கதறக் கதற, அடி. தடுத்த மனைவிக்கும் உதை.

ஓய்ந்து போய் வெளியே போனவர், சற்றைக்கெல்லாம் மனம் நொந்து போனார். அழுது கொண்டிருந்த மகனை நெருங்க, பதறியடித்து எழுந்த கண்ணன், "ப்ளீஸ், போங்கப்பா" என்று அழுதான்.

அதுதான்... அதுதான் அவரிடம் கண்ணன் பேசிய கடைசி வார்த்தை! அதன் பிறகு அவன் படித்து, வெளிநாட்டில் வேலைக்குச் சென்று, அங்கேயே ஒருத்தியைக் காதலித்து திருமணம் செய்து செட்டிலான பிறகும்கூட, மௌனம் தொடர்ந்து கொண்டுதான் இருந்தது.

நாளை அமெரிக்காவிலிருந்து சென்னைக்கு வருகிறான் கண்ணன். தன் அம்மா, அப்பாவைப் பார்த்து தன் மகனை ஒப்படைப்பதற்காக. அமெரிக்கக் கலாசாரம் அவனுக்குப் பிடிக்கவில்லை. இந்திய மரபில் தன் மகன் வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டான். இந்த முறையாவது மகனிடம் பேச வேண்டுமென்று நினைத்தார் சுந்தரேசன்.

ஏர்போர்ட்டிலிருந்து வீட்டுக்கு வந்ததும், கண்ணனும் அவன் மனைவியும் தாங்கள் கொண்டு வந்த பரிசுப் பொருள்களை எடுத்துக் கொடுத்தனர். பேரனைத் தூக்கிக் கொஞ்சிய சுந்தரேசன், கண்ணனிடம் பேச நினைத்து ஆசையாக அருகில் சென்றார். கண்ணன் தன் சூட்கேஸிலிருந்து ஒரு பொருளை எடுத்து, அப்பாவிடம் நீட்டிச் சொன்னான்.

"அப்பா... என்னோட வளர்ச்சிக்கு இது ரொம்ப உதவுச்சு! என் மகனோட எதிர்காலத்தைக் கருதி, இதை நீங்க உபயோகிச்சாலும் நான் வருத்தப்பட மாட்டேன்."

சந்தோஷமாய் வாங்கிப் பிரித்த சுந்தரேசனின் முகம் வாடிப் போனது.

அது ஒரு பெல்ட்!

**வே**லைக்காக வரும் விண்ணப்பதாரர்களின் சில உதார்கள் - நேர்முகத் தேர்வில் பயங்கர பீலா பார்ட்டிகள். ஆனால் உள்ளளவில் வேறு விதமாக ப்ளான் போடும் ஜில் பட்டாசுகள்! பாருங்களேன்...

**சார்... இறுக்கமான சூழ்நிலையில்கூட சமாளித்துத் தீர்வு காண்பேன்.**

இறுக்கமான சூழ்நிலைன்னா, சிகரெட் கொளுத்தினாத்தான் மனசு கேட்கும். ஒரு கையில காப்பி, இன்னொண்ணுல சிகரெட். அது எங்கே இந்த தீவட்டி தடியனுக்கு புரியப் போகிறது?

**சார்... எனக்கு பயங்கர கம்யூனிகேஷன் ஸ்கில். பேசிப் பேசியே காரியத்தை சாதிச்சுடுவேன்.**

பார்க்கப் போனா எஃப்.எம்., டயல் ப்ளீஸ் இதில வேலை கிடைக்க வேண்டியது. ம்ம்... ஏதோ ராகு-கேதுவும் ஜாயிண்டா ஓவர்டைம் பண்றதால வந்த வினை.. நான் இங்கே!

**எனக்கு பயங்கர ஹ்யூமர் சென்ஸ், சிரிச்சுக்கிட்டேதானிப்பேன்.**

போன தடவை வேலை பார்த்த ஆபீசில் ரோஸி, வனஜா, கமலாய தாட்சியிடம் நான் ஏ ஜோக்குகளாக சொன்னதால் தானே வேலையே போச்சு! அதுகளும் முதல்ல நல்லா சிரிச்சுட்டு, போட்டுக் கொடுத் துடுச்சுங்க.

**எப்பவும் துறுதுறுன்னு இருப்பேன்.**

டெஸ்கில் பார்க்க முடியாதுடா... ஜடம்!

**எனக்கு நல்ல டிரெயினிங் இருக்கு ஸார்.**

காலேஜ் ட்ராப் அவுட்டுடா.. கண்டு பிடிச்சுடுவியா நீ?

**புதுசு புதுசா சிந்திச்சிக்கிட்டேயிருப்பேன்**

இதைவிட நல்ல வேலை கெடச்சா, சிட்டா பறந்திடுவேன்னு அர்த்தம்... புரியுதா வழுக்கைத் தலையா?

**நி**ர்வாகிகளும் செம கில்லாடிகள்தான். எத்தனை அடாவடி ஆட்களை தினமும் பார்க்கிறார்கள். யாரை வேலைக்கு எடுக்கணும், யாரை வேலையிலிருந்து எடுக்கணும் என்று கண்ணால் ஒரு நோட்டம் விட்டே தீர்மானம் எடுக்கும் மன்னர்கள். நேர்முகத் தேர்வில் அவர்கள் சொல்வதைப் பாருங்கள். ஆனால் அதற்கு உள்ளர்த்தம் இன்னொன்று உண்டு -

# உள்ளே உஷார்! வெளியே உதார்!



**இது என்ட்ரீ லெவல் உத்யோகம்.**

சம்பளம் அதிகம் தர முடியாது. சில மாதம் தராமலே கூட இருப்போம்.

**இந்தக் கம்பெனி இப்பத்தான் கொஞ்சம் கொஞ்சமா வளர்ந்து வருகிறது.**

எப்ப வேணா இழுத்து மூடிடுவோம்.

**நல்ல சம்பளம். காம்பபடிடிவ் சாலரி.**

அதாவது எங்க போட்டியாளருங்களைவிட கம்மியா சம்பளம் கொடுப்போம். அதுல தாண்டா போட்டியே!

**ஃபிளெக்ஸிபிள் அவர்ஸ்... புரியறதா?**

40 மணி நேர வேலை. ஆனா 25க்குத் தான் சம்பளம். வேலைக்கு வருவது உன் கையில். ஆனால் வீடு திரும்புவது எங்கள் கையில்!

**வாக் இன் இன்டர்வ்யூ தான் விரும்பறோம்.**

நீ சோம்பலா, கன்றாவியா, வயசானவனா இருந்தா, அப்படியே ரிஜக்ட் பண்ணத்தான்!

**அட்டெண்டன்ஸ் போனஸ் உண்டு.**

பெண்களுக்கு, குறிப்பாக... திருமணமாகி இருந்தாலும் குழந்தையில்லாமல் இருந்தால் நலம். சீமந்த லீவு, புண்யாவசன லீவுன்னு கேட்டா வேலை காலி!

**ஒரு லீடர்ஷிப் க்வாலிட்டி எதிர்பார்க்கிறோம்.**

மானேஜரோட பொறுப்பெல்லாம் உண்டு. ஆனா அதே சம்பளம், மதிப்பு எதையும் எதிர்பார்க்கவே கூடாது.

**டெட் லைன் ப்ரஷர் இருக்கும்.**

முத நாளே நீ ஷெட்யூலிலிருந்து ஆறு மாசம் பின்னாடி இருக்கே, ஓடு... வேலையை கவனி.

**- எல்.எஸ்.**

**அறிமுகப் படமே வெற்றி! அடுத்தடுத்த படங்களில் கவனமாக கதைத் தேர்வு! தோற்றத்தில் புதுமை என்று சுறுசுறுப்பாக இருக்கிறார், இளம் ஹீரோ ரவி கிருஷ்ணா. 'பொன்னியின் செல்வன்' படத்துக்காக வலதுபுற கன்னத்தில் மட்டும் தாடி வளர்த்துக் கொண்டிருக்கும் அவர், அலைபாயும் தலை முடியை அடிக்கடி கோதியபடி தெளிவாகப் பேசுகிறார்.**

**அப்பா படத்தைத் தயாரிக்க, அண்ணன் இயக்கத்தில் நடிப்பது தானே இப்போது ஃபேஷன்! மாறாக வெளி இயக்குனரின் படத்தில் அறிமுகமானது ஏன்?**

"கடவுள் சத்தியமாக நான் ஹீரோவானது ஒரு ப்யூர் ஆக்ஸிடெண்ட். லண்டன் சௌத்வேல்ஸ் பல்கலைக் கழகத்தில் பி.ஏ. மல்டி மீடியா படித்துக் கொண்டிருந்தேன். விடுமுறைக்கு சென்னைக்கு வந்தபோது 7/ஜி படத்தின் வேலைகள் சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருந்தன. சூர்யா அல்லது மாதவன் நடிக்கப் போகிறார்கள் என்று முடிவானது. என்ன நடந்ததோ, 'எனக்குப் புது முகம்தான் தேவை' என்று இயக்குனர் சொல்லிவிட்டார். அலுவலகத்தில் குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருந்த என்னைப் பிடித்து மேக் அப் டெஸ்ட் எடுத்தார் செல்வராகவன். "நீதான் ஹீரோ" என்றதும் எனக்கு பக்கென்று பயம். "இவனுக்கு நடிக்கத் தெரியாதே" என்று அப்பா சொன்னார்! "அதை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று இயக்குனர் சொல்லிவிட்டார். ஆனால் அந்த பயம் படம் முடிகிற வரை இருந்தது. இப்போது கூட நிறைய பயப்படுகிறேன்... அந்தப் பயம்தான் என்னை நடிக்க



# "அப்பா, நான்









# பாஸாயிட்டேன்!”

வைக்கிறது. அண்ணன் இயக்கத்தில் அடுத்து நடிக்கிறேன்.”

**படத்தைப் பார்த்துவிட்டு நண்பர்கள் என்ன சொன்னார்கள்?**

“படம் முடிந்து ரிலீஸுக்கு முன்பு அலுவலகத்தில் பிரிண்ட் இருந்தது. அப்பாவுக்குத் தெரியாமல் எடுத்துப் போய் ப்ரிவியூ தியேட்டரில் ஐந்து நெருங்கிய நண்பர்களுக்குப் போட்டுக் காட்டினேன். அமைதியாகப் படம் பார்த்து முடித்தார்கள். தியேட்டரை விட்டு வெளியே வந்ததும்... ஒருவன் கட்டிப் பிடித்து அழுதுவிட்டான். “எல்லோரும் நடிக்க வர்றாங்கன்னு நீயும் நடிக்க வந்துட்டியேன்னு நினைச்சேன். உண்மையிலேயே நல்லாப் பண்ணியிருக்கடா! உன்னை நண்பன்னு தைரியாம வெளியே சொல்லிக்கலாம்''னு சொன்னாங்க. அதைக் கேட்டதும் ''அப்பா, நான் பாஸாயிட்டேன்''னு அங்கேயே கத்தினேன்.”

**7/ஜி படத்தின் ஹீரோ எந்தக் குறிக்கோளும் இல்லாத இளைஞன்! நீங்கள் எப்படி?**

“நான் மட்டுமல்ல! இந்த வயதுப் பசங்க எல்லோருமே, குறிக்கோள் இல்லாமல், அப்பா, அம்மா படிக்கச் சொல்கிற கோர்ஸுகளில் கடனே என்று படித்துக்கொண்டு, அனிதா மாதிரி கேர்ள் ஃப்பிரெண்ட் கிடைத்தால் கடலை போடுகிறவர்கள் தான். ஆனால் எனக்கு இப்போது பொறுப்பு வந்துவிட்டது. கிடைத்த புகழையும், அப்பா பெயரையும் காப்பாற்ற வேண்டுமே!”

**7/ஜி கதையில் வரும் அப்பா கேரக்டருக்கும், உங்கள் நிஜ அப்பாவுக்கும் வித்தியாசம் என்ன?**

“நூறு பர்செண்ட் வித்தியாசம். 7/ஜி அப்பா சதா என்னை அடித்து, திட்டிக் கொண்டே இருக்கிற மிடில் கிளாஸ் அப்பா. நிஜத்தில் மிடில் கிளாஸ் லைப் ஸ்டைலில் வாழ்ந்து கொண்டு, எங்களை அப்பர்கிளாஸ் குழந்தைகளாக வளர்த்திருக்கிறார். அப்பா ஒரு குளோஸ் ஃப்பிரெண்ட்.”

**அப்பா ஒரு தயாரிப்பாளராக இல்லை என்றால் நீங்கள் ஹீரோவாக ஆகியிருக்க முடியுமா?**

''நிச்சயம் ஆகியிருப்பேன். ஆனால் தாமதமாகியிருக்கும். சினிமா பேக்ரவுண்ட் இருப்பது ஒரு வகையில் அதிர்ஷ்டம் என்றால், இன்னொரு வகையில்

கஷ்டம். எந்த சினிமா பின்புலமும் இல்லாமல் நடிக்க வருகிறவர்கள், மினிமம் பாஸ் வாங்கினாலே ரசிகர்கள் ஏற்றுக் கொள்வார்கள். அதுவே என்னைப் போல் என்றால், குறைந்தது எழுபது மார்க் வாங்கினால்தான் மினிமம் பாஸ். பாட்டு, ஃபைட், ஆக்டிங் எல்லாவற்றிலும் அதிகம் எதிர்பார்க்கிறார்கள்."

ஒரு 'ஸ்மார்ட் பாய்' தோற்றத்தை வைத்துக்கொண்டு எது மாதிரி ஹீரோவாக வர விரும்புகிறீர்கள்?

"எனது பாதை எது என்பதை நான் இப்போது நடித்துக் கொண்டிருக்கும் 'பொன்னியின் செல்வன்' வந்தால் தெரிந்துவிடும். அதில் வேணு என்ற மிடில் கிளாஸ் பையனாக நடிக்கிறேன். கோபிகா பக்கத்து வீட்டுப் பெண். ரேவதி எனது அம்மா. பிரகாஷ் ராஜுடன் வயதுக்கு மீறிய நட்பு என்று போகிறது. எனக்கான இடத்தை இந்தப் படம் உறுதி செய்துவிடும்."

நமது கலாசாரத்தில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா?

"நிறைய"

அப்படியானால் 7/ஜி படத்தின் கதையில் நாயகி அனிதா, வேறொரு இளைஞனை திருமணம் செய்து கொள்ளும் முன்பு, காதலனிடம் தன்னை இழப்பது நமது கலாசாரமா?

"நான் கதிராக நடித்தவன். இந்தக் கேள்வியை இயக்குனரிடம் கேட்டால் சரியான பதில் கிடைக்கலாம். இருந்தாலும் நிஜத்தில் நடப்பதைத் தானே அவர் எடுக்கிறார். சென்னையில்கூட நடக்கிறதே."

எங்கோ நடக்கும் ஒரு சில சம்பவங்களை எடுத்துக் கொண்டால், ஒட்டுமொத்த சமுதாயத்துக்கும் தவறான முன்மாதிரியை சொல்லிக் கொடுத்த மாதிரி ஆகிவிடாதா?

"இந்தக் கேள்விக்கு பதில் சொல்கிற அளவுக்கு நான் பக்குவப் படவில்லை. விட்டுடுங்க."

பேட்டி: **ஜெய்**

வாழ்க்கை எப்போது அர்த்தமுள்ளதாக அமைகிறது? சோறு ஒரு தலைவாழையிலை போடப்பட்டிருக்கிறது. காய்கறி எல்லாம் பரிமாறப்பட்டுள்ளன. இன்னும் ஒன்றே ஒன்றுதான் அதை வைக்க வேண்டும்.

## என்ன வெச்சா சாப்பிடலாம்?



வைத்து விட்டால் சாப்பிடலாம். அது என்ன? மனது வைத்தால் சாப்பிடலாம். வாழ்க்கையின் மீது மனது வையுங்கள். வாழ வேண்டும் என்று ஆசைப்படுங்கள். அதை நேசியுங்கள். அதன் பிறகு அதன் அர்த்தம் உங்களுக்கு விளங்கும்.

சொன்னவர்: தென்கச்சி சுவாமிநாதன்

- பா. அச்சுதன், வயலூர்

கேரளாவில் சுனாமியால் பாதிகப்பட்ட 208 கிராமங்களுக்கும் நிவாரண உதவி கேட்டு, கேரள அரசு மத்திய அரசுக்குக் கடிதம் எழுதி உள்ளது. பிறகுதான் தெரிந்தது, இந்தக் கிராமங்கள் சிலவற்றில் கடற்கரையே கிடையாதாம். வறட்சியால் பாதிக்கப்பட்ட கிராமங்களையும் சேர்த்து சில அதிகாரிகள் சந்தடிசாக்கில் சுனாமி பாதிக்கப்பட்ட கிராமங்களாகக் காட்டி விட்டார்கள். இந்த அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுப்பது பற்றி அரசு ஆலோசித்து வருகிறது!

- எஸ்.எஸ். மணி, திருவனந்தபுரம்.





ஏப்ரல் முதல் நாள் 'தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்' அறந்தாங்கியில் 'கலை இலக்கிய இரவு' நிகழ்ச்சியை நடத்தியது. எழுத்தாளர் மேலாண்மை பொன்னுச்சாமி 'கல்கி' இதழில் தாம் எழுதிய சிறுகதைகளைப் பற்றியெல்லாம் சொல்லி பரவசப்பட்டார். 'கோலங்கள்' சீரியல் இயக்குனர் திருச்செல்வம், "நான் இங்கு வந்து இறங்கியதும் சிறுவர்கள் உள்பட எல்லாரும் என்னிடம் 'ஆட்டோகிராஃப்' கேட்டு வந்து விட்டார்கள். இது தேவையற்ற செயல். என் சீரியல் சமுதாய பிரச்னையைத் தூண்டும் எனச் சொல்ல முடியாது. சினிமா, டி.வி நிகழ்ச்சிகளெல்லாம் வியாபாரத் தன்மை உடையன மட்டுமே. எழுத்தாளர்களிடம்தான் சமூக அக்கறை இருக்கிறது. அவர்களிடம் ஆட்டோகிராஃப் கேளுங்கள்" என்றார் 'நறுக்' என.

சீரியல் பைத்தியங்களே... தெளியுங்கள்.

- ப. ராமகிருஷ்ணன், காயக்காடு

**கலக்கறாங்க வாசகர்கள்!**



# எங்க வீட்டுல மூணுச்சாமி!

**–ஜெனீஃபர்**

**ஜெனீஃபர் - 'கில்லி'யில் விஜயின் தங்கையாக வந்து கொட்டமடித்தவர். படிப்பு, சினிமா, சீரியல் என்று பிஸியாக இருக்கும் அவரிடம் ஒரு 'சினி' பேட்டி.**

**- கலை**

### ஆசை

நல்லா நடிக்கத் தெரிந்த ஹீரோயின்னு பெயர் வாங்க ஆசை. அதுக்காக ஒண்ணு ரெண்டு படத்தோட காணாமப் போகறதுல இஷ்டமில்ல. நல்லாவும் நடிப்பேன். நீடிச்சும் இருப்பேன்.

### பேரழகன்

ஒன் அண்ட் ஒன்லி கமல் சார்தான். அவர் படம் ரிலீஸாயிடிச்சுன்னா எங்கப் பாகிட்ட உடனே கூட்டிட்டுப் போனாதான் ஆச்சுன்னு நச்சரிக்க ஆரம்பிச்சுடுவேன். ஆனா இந்த முறை சந்திரமுகி வேற வர்றதால, மும்பை எக்ஸ்பிரஸா, சந்திரமுகியான்னு குழப்பமா இருக்கு.

### ஜி

என் மனசுக்குப் பிடித்த, மரியாதைக்குரிய நபர்னா, நம்ம கலாம்தான். அவரோட பணிவு, குழந்தைகள்கிட்ட காட்டுற பாசம் எல்லாமே என்னை ஆச்சர்யப்படுத்தும். இன்னொரு நேரு மாமாதான் கலாம்.

### நேருக்கு நேர்

ஜெயலலிதா மேடத்தை நேருக்கு நேர் சந்திக்கணும்னு ரொம்ப நாளா ஆசை. பாலிடிக்ஸுக்கும் எனக்கும் சம்பந்தமில்ல. நான் இருக்குற துறையில இருந்து வந்து இன்னிக்கு இவ்ளோ பெரிய ஆளாக இருக்காங்களேங்கற ஒரு பிரமிப்புதான் காரணம்.

### சாமி

பிள்ளையார்னா ரொம்பப் பிடிக்கும். வீட்ல பிள்ளையார் படம் மட்டுமில்லாம, ஜீஸஸ் படமும் இருக்கும். மெக்கா - மதினா ஃபோட்டோவும் இருக்கும். ஆக ஒண்ணுச்சாமி, ரெண்டுச்சாமி.. மூணுச்சாமி!

### தில்

நான் ரொம்ப தில்லான ஆள். எங்க பேஸ்கட் பால் டீம் தோற்கற நிலைமையில இருந்தாலும், தன்னம்பிக்கையோட போராடி ஜெயிக்கக் கொடுத்துருவேன். இந்த 'தில்'லை, சினி ஃபீல்டுலயும் பயன்படுத்தி ஜெயிக்கணும்.

# பாகிஸ்தானின் நெ. 1 நடிகை!

ஒட்டுமொத்த பாகிஸ்தானும் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடும் இன்றைய டாப் - 1 மாடல் கம் நடிகை இமான் அலி. டி.வியில் மாடலாக வந்து மின்னிய இமான் அலியை, ஏதோ ஒரு புண்ணியவான் அப்படியே அலேக்காக கவர்ந்து வந்து திரைப் படத்திற்குக் கொண்டு வந்திருக்கிறார். அவ்வளவு தான். 'நான் இந்த அளவுக்கு பாப்புலரா வருவேன்னு கனவில்கூட நினைக்கலே' என்று இமான் அலி ரொம்பவும் உச்சுக் கொட்டி வருந்தும் அளவுக்கு, நம்பர் - 1 நடிகையாகிவிட்டார்.

இந்த சமயத்தில் அனார்கலியைப் பற்றி 5 நிமிட படம் ஒன்றை எடுத்தே தீருவேன் என்று அடம் பிடித்த ஒரு டைரக்டர், அனார்கலியாக இமான் அலி தான் நடிக்க வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்று அவரை நடிக்க வைத்தார். லாஹூரில் இந்த படம் எடுக்கப்பட்டது. படத்தின் செலவு 7 மில்லியன் ரூபாய். பிறகென்ன? படம் சூப்பர் டூப்பர் ஹிட். பாகிஸ்தானிய பத்திரிகைகளும், டி.வியும் 'கண்டேன் அனார் கலியை' என்று எகிறிக் குதித்தன.

இந்தப் படத்தை பார்த்ததிலிருந்து பாகிஸ்தான் இளைஞர்கள் அனைவரும், தம்மை மாடர்ன் சலீமாக கற்பனை செய்து கொண்டு எப்பொழுதோ படித்திருக்க வேண்டிய அனார்கலி வரலாற்றை இப்பொழுது விழுந்து விழுந்து படித்து நோட்ஸ் எடுத்து வருகிறார்களாம். கேட்டால், 'நோ, நோ நான் அனார்கலி பத்தி ரிசர்ச் பண்றேன். அப்படின்னா நான் வரலாற்று ஆய்வாளர்தானே?' என்கிறார்கள்.

தற்பொழுது அனார்கலி நடனப் பயிற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார். 'ஒரு நடிகைக்கு நடனம் மிகவும் முக்கியமானது' என்பது அவரது கருத்து. ஆனால் அவருடைய விசிறிகளோ "நீங்க டான்ஸ் எல்லாம் ஆட வேண்டாம். ச்ச்சும்மா ஸ்க்ரீன்ல வந்துட்டுப் போங்க' என்று கொஞ்சுகிறார்கள்.

அது சரி, எதற்கு திடீரென்று இந்த 'எல்லைகடந்த ஜொள்ளுவாதம்' என்று யோசிக்கிறீர்களா? வேறொன்றுமில்லை, இந்தியா - பாகிஸ்தான் இரண்டும் ஷேக்ஹேண்ட்ஸ் கொடுத்து முஸ்தபா முஸ்தபா பாட்டு பாட வேண்டும் என்பதற்காகத் தான் இந்த சிறிய முயற்சி.

- சலீம்



இளமை கல்கி

# பத்திரிகை Vs சினிமா!

எந்தவொரு புதுப்படத்தைத் துவங்கினாலும் அதை பத்திரிகை, டீ.வி.களில் விளம்பரப்படுத்துவதற்காக பி.ஆர்.ஓ. என்று ஒருவரை தனியாக நியமிப்பார்கள். அந்தளவிற்கு மீடியாவின் அத்தியாவசியம் சினிமாவுக்கு (மீடியாவுக்கும் சினிமா அத்தியாவசியம் என்பது வேறு விஷயம்). இருந்தாலும் சில சமயங்களில் மீடியாவுக்கும் சினிமாவுக்கும் இடையே செல்லச் சண்டைகள் நிகழ்ந்து விடும். இது மாதிரியான சமீபத்திய நிகழ்வுகளை இலைமறைவு காயாக பார்த்து விடுவோமா?

குட்டித் தளபதி நடிகரின் முதல் சூப்பர் டூப்பர் ஹிட் படம். ஆனால் அந்தப் பத்திரிகையின் விமர்சனத்தில் மட்டும் ஹீரோவின் பெயரோ புகைப்படமோ இடம் பெறவில்லை. அதற்கு சில வாரங்களுக்கு முன் தளபதியின் முக 'அழகை' சம்பந்தப்பட்ட பத்திரிகை கிண்டல் அடிக்க, வெகுண்டெழுந்த அவரது ரசிகர்கள் அதன் அலுவலகத்தின்மீது கல் எறிய, பதிலுக்கு தன் விமரிசனத்தில் கல் எறிந்தது பத்திரிகை. சில நாட்களில் இருதரப்பும் சமரசமாகி ஒருவருக்கொருவர் ஆறுதலாக இருந்துகொண்டது.

அரசியலுக்கு அச்சாரம் போட்டிருக்கும் நடிகர் தன் செய்திகளை தவறாது வெளியிட்ட அந்த முன்னணி நாளிதழ் நிருபருக்கு, சென்னை புறநகரில் விடு கட்டிக் கொடுத்திருக்கிறார்.

யூ இவ் மீ, ஐ இவ் யூ என்கிற படத்தின் விமரிசனம் நெகடிவ்வாக படம் வந்த அன்றைக்கே வெளிவர, எனது படம் அந்தப் பத்திரிகையின் விமரிசனத்தால் தான் ப்ளாப் ஆனது என்று அதன் இயக்குனர் கார சாரமாக பேட்டியளித்தார்.



ஜோவான நடிகை எந்தப் பத்திரிகைக்கும் கடந்த சில வருடங்களாக பேட்டியே அளிப்பது கிடையாது. "நான் வளர்ந்துவிட்டேன். இனி எதற்கு பேட்டியெல்லாம்?" என்று ஏறி வந்த ஏணியைச் சுலபமாக தட்டிவிட்டார்.

அந்த உச்ச நடிகர் பேட்டி என்று இந்தியாவிலுள்ள சகல பத்திரிகைகளையும் கூப்பிடுவார். அவ்வளவுதான். சகல மீடியாவும் பரபரத்து அவர் கூப்பிட்ட இடத்திற்கு ஓடும். ஆனால் உச்சமோ, எழுதி வைத்திருக்கும் அறிக்கையை தம்மடித்துக் கொண்டே படித்து வெறுப்பேற்றி திருப்பியனுப்புவார். அப்படியே ஃபேக்ஸ் செய்தால் எல்லோருக்கும் நேரம் மிச்சம்தான். ஆனால் நடிகருக்கு பப்ளிசிட்டி கிடைக்காதே. அதுதான் இந்த டெக்னிக்.

உச்சி குளிர்ந்து போகும் அளவுக்கு எந்த நடிகர் நடிகையையும் பற்றி எழுதினாலும் ஒரு காட்சிக்கு 'தேங்க்ஸ்' என்கிற கைம்மாறு கூட சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து கிடைக்காது. ஆனால் இதே தவறாக, அவதூறாக எழுதினாலோ அவ்வளவுதான், உலகத்தின் எந்த மூலையிலிருந்தாலும் சம்பந்தப்பட்ட நிருபரை வளைத்துப் பிடித்து உண்டு இல்லை என்று பண்ணி விடுவார்கள்.

வாரிசுக் குடும்பத்தின் கடைக்குட்டி அவர். காதல் சிறப்பிதழுக்காக ஒரு பத்திரிகையில் பேட்டி அளிக்கப் போனவரை வெறுமனே புகைப்படம் மட்டும் எடுத்து விட்டு திரும்பி அனுப்பிவிட்டார்கள். ஆனால் வெளிவந்த புத்தகத்திலோ, இவர் சொல்லாத சொட்டச் சொட்ட காதல் அனுபவங்கள். வெகுண்டெழுந்த அவரது தந்தை போதும் நீ பத்திரிகைகளுக்கு பேட்டி கொடுத்தது என்று 'தடா' போட்டாலும் சரியாக ஆறாவது மாதத்தில் அதே பத்திரிகையின் அட்டையில் கடைக்குட்டி புன்னகைத்துக் கொண்டிருந்தார்.

- செ

# தோனி...புதிய தேனீ!







"இந்திய கிரிக்கெட் அணிக்கு கிடைத்துள்ள புதிய பவுன்சர், ஆஸ்திரேலியாவுக்கு கில்கிறிஸ்ட் மாதிரி, நமக்கும் கீப்பர் கம் சூப்பர் பேட்ஸ்மேன் கிடைத்துவிட்டார்'' என ரசிகர்களின் மனதில் மகிழ்ச்சி பவுண்ட்ரி லைனைத் தாண்டுகிறது.

**நீங்க கீப்பரா - பேட்ஸ்மேனா?**

இரண்டுமே எனக்குக் கொடுக்கப்பட்ட வேலை. அதை நூறு சதவிகிதம் நிறைவா செய்யணும். அது தான் என்னை செலக்ட் பண்ணியவங்களுக்கு நான் செய்யும் மரியாதை!

**'இந்தியாவின் கில்கிறிஸ்ட்'ன்னு சொல்ல ஆரம்பிச்சிருக்காங்க. ஒத்துக்கிறீங்களா?**

கில்கிறிஸ்ட்தான் என்னோட ரோல் மாடல். ஆனா அவர் பக்கத்துல நான் நிக்கக்கூட முடியாது. அதுக்கு நிறைய தூரம் போகணும்.

**இந்தியாவின் மற்ற கீப்பர்களோடு உங்களை ஒப்பிடுங்க?**

நான் கொஞ்சம் உயரம் ஜாஸ்தி. அவ்வளவுதான்.

- முகில்

# இளமை கல்கி

# தமிழைத் தப்பா பாடினா, கொஞ்சறாங்க!

**தொ**லைக்காட்சியில் நிகழ்ச்சித் தொகுப்பாளராக இருந்து, பின்னர் பாடகராகி, கோலிவுட்டின் எல்லா முக்கிய ஹீரோக்களுக்கும் பாடி, சக்கைப்போடு போட்டுக் கொண்டிருக்கிறார் ஹரீஷ் ராகவேந்திரா...

**நிகழ்ச்சித் தொகுப்பாளர் ஹரீஷ் - பாடகர் ஹரீஷ் என்ன வித்தியாசம்?**

பொதுவா பாடகர்களின் குரலுக்குப் பிறகுதான் முகம் தெரியும். ஆனா என் விஷயத்துல முகம்தான் மக்கள்கிட்ட முதல்ல ரீச் ஆச்சு. அடுத்ததுதான் குரல்.

**'விகடன்' படத்துக்கு பிறகு வேறு படமே வரவில்லையே...?**

நாலு படம் வந்தது. ஆனா நான் புரொஃபஷனல் பாடகன். எங்கே ஷூட்டிங்குக்காக ரெக்கார்டிங்கை ஒத்தி வைக்க வேண்டியிருக்குமோ என்கிற பயத்துல, அந்த சான்ஸையெல்லாம் மறுத்துட்டேன். இப்ப, 'கற்பனை'னு ஒரு படம் செய்றேன்.

**தமிழ்ப் பாடல்களில் ஆபாசம் அதிகமாக இருக்கிறதே...**

பாடல்ங்கறது கவிஞர், இசையமைப்பாளர், இயக்குனர்... சில சமயங்கள்ல ஹீரோன்னு எல்லாரையும் தாண்டி கடைசியாதான் என்கிட்ட வருது. அதாவது பாடகர் கிட்ட வருது. அங்க வந்து வரிகள் ஆபாசமா இருக்குன்னு சொன்னா, உடனே மாத்தறதுக்கு இன்னிக்கு யாருமே தயாரா இல்ல. நான் மறுத்தா இன்னொருத்தர் பாடிட்டுப் போயிடுவாங்க. அதனால இந்த விஷயத்துல நான் அதிக கெடுபிடி பண்றதில்ல.

**தமிழைத் தவிர மற்ற மொழிகளில் வாய்ப்புகள் வருகின்றனவா?**

தெலுங்கு, மலையாளம்ல நிறைய பாடறேன். ஆனா ஹிந்தில மட்டும் வாய்ப்பு வரல. இத்தனைக்கும் எனக்கு ஹிந்தி நல்லா பேச, எழுத வரும். ஆனா தமிழ்நாட்ல தமிழே பேசத் தெரியாத, சரியா உச்சரிக்கக் கூடத் தெரியாத நார்த் சைடு ஆளுங்க தமிழ்ப்பாட்டை தத்துப் பித்துன்னு உளறினாலும், 'ஆஹா.. என்னமா குழந்தை மாதிரி பாடறான்னு' ஊக்கப்படுத்தறாங்க, கொஞ்சறாங்க. இதுக்கெல்லாம் காரணம் நம்ம ஆளுங்களோட தாழ்வு மனப்பான்மையா, இல்ல இக்கரைக்கு அக்கரை பச்சை மனப்பான்மையான்னு தெரியலை. அதுக்காக இந்திக்காரங்களுக்கு வாய்ப்பு தரக்கூடாதுன்னு சொல்லல. நமக்கும் அங்க வாய்ப்பு தரணும். அவ்ளோதான்.



**உங்களுடைய குரல் எந்த ஹீரோவுக்கு பக்காவா பொருந்தும்?**

விக்ரம். ஆனா 'ஹிட்'டுன்னு பார்த்தா விஜய்க்கும், மாதவனுக்கும் நிறைய ஹிட்டாகியிருக்கு.

**மறக்க முடியாத ரெக்கார்டிங் தியேட்டர் அனுபவம்?**

"சார்லி சாப்ளின்"ங்கற படத்துக்காக என் மனசுக்குப் பிடிச்ச எஸ்.பி.பி. சார் கூட ஒண்ணா சேர்ந்து பாடினதுதான். அதை நினைச்சா இன்னிக்கும் பெருமையா இருக்கு.

**- முத்து**



# ஐயோ... கேர்ள்ஸ்!

**மூன்று இளம் நட்சத்திரங்கள். ஆளுக்கொரு 'நச்' கேள்வி!**

**இருக்கும் போட்டியில் உங்களால எப்படி தாக்குப் பிடிக்க முடியும் பரத்?**

ஜாலியா நியூ காலேஜுக்கும் டான்ஸ் க்ளாஸுக்கும் போயிட்டிருந்த இந்த பரத்தால, இன்னைக்கு சுதந்திரமா வெளியில நடமாட முடியலை. 'பாய்ஸ்' வாழ்க்கையை மாத்திடுச்சு. நாலு பேர் நாலு விதமா பேசுவாங்கன்னு எல்லாமே பயந்துட்டு பண்ண வேண்டியிருக்கு. இன்னைக்கு இருக்கிற போட்டியில நல்ல சம்பளத்தைவிட நல்ல படமா பார்த்துதான் பண்ண வேண்டியிருக்கு. ஆக்‌ஷன் படத்துக்குத்தான் அதிகமான வரவேற்பு என்கிறதால, இப்போ இல்லாட்டியும் ரெண்டு வருஷத்துக்குப் பிறகு, நிச்சயமா நானும் அடிதடி படங்கள் பண்ணுவேன். அது வரைக்கும் ஜாலியா லவ் பண்ணப் போறோம். ஹலோ, படத்துல தாங்க.

**ஸ்ரீதேவி, முதல் வெற்றியை எப்பொழுது தொடப் போகிறீர்கள்?**



நான் எந்த மொழிப் படம் பண்ணினாலும் தமிழ் தாய் மொழிங்கிறதால, இங்கே சாதிக்கறதுதான் சேலஞ்சிங்கா இருக்கு. என்னுடைய ஆரம்பப் படங்கள் சோடை போனாலும் 'தேவதையைக் கண்டேன்' எனக்கு நல்ல பெயரை வாங்கித் தந்திருக்கு. இந்த ஒரு நல்ல பெயருக்காகத்தான் கடந்த ஒரு வருஷமா எந்தப் படத்துக்கும் நான் ஒத்துக்கலை. எனக்கும் ஓவர் நைட்ல ஃபேமஸாகணும்ங்கிற நெருக்கடி கிடையாது. வயசு இருக்கு. மெல்ல அடி வைச்சு நடந்தா போதும். இதுவரைக்கும் என்னால என் அப்பா-அம்மாவுக்கு எந்தப் பெருமையும் இல்லாமல் போகலாம். ஆனா நிச்சயம் நெ.1 நடிகைங்கிற கிரீடத்தை நான் பெற்றோர்களுக்கு சமர்ப்பிக்கத்தான் போறேன்.



**என்ன கார்த்திக், நடிகர் ரேஞ்சுக்கு பெண் ரசிகைகள் உண்டாமே?**

ஐயோ... ஆமா சார். என் பாட்டை ரசிச்சா போதும். ஆனா பெண் ரசிகைகள் அடிக்கடி போன் செஞ்சு செல்லத் தொல்லைகள் கொடுக்கறாங்க. இரண்டு வருஷத்துக்கு முன்பு ஒரு சினிமா அட்ரஸ் புக்ல என் நம்பரை கொடுத்திட்டேன். அதுதான் வினையா போச்சு. என் நாயோடும், புக்ஸ் படிக்கிறதிலயும் நேரம் செலவழிப்பேன். என் அதிகபட்ச நேரம் இசைக்காகதான்!

- நீலாவள்ளி

# வெண்புகை எப்போ வெளியில் வரும்?



"போப் ஆண்டவர், உலகம் முழுவதிலும் வாழும் சுமார் நூறு கோடிக்கும் அதிகமான கிறிஸ்தவ மக்களின் பெருமதிப்புக்குரிய தலைவர் மட்டுமில்லை, வாடிகன் என்ற சின்னஞ்சிறு நாட்டின் தலைவர். ரோம் நகர பிஷப்பும் கூட" என்கிறார் ஃபாதர் வின்சென்ட் சின்னதுரை. சென்னை சாந்தோம் தொடர்பு மையத்தின் தலைவரான இவர் பலமுறை வாடிகனுக்குச் சென்று போப் ஆண்டவரைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பைப் பெற்றவர். போப் ஆண்டவரின் இந்தியப் பயணத்தின்போது, சென்னையில் அவரது நிகழ்ச்சிகளுக்கு உடனிருந்து உதவியவர். அவரைச் சந்தித்தபோது சொன்னார்:

"போப் ஆண்டவர்கள் வரலாற்றில், மறைந்த புனித இரண்டாம் ஜான்பால், ஒரு புரட்சிக்காரர். வெளிப்படையானவர். மனிதநேயம் மிக்க எளிமையான மனிதர். இளமையிலேயே, சொல்ல முடியாத கஷ்ட நஷ்டங்களை அனுபவித்தவர் என்பதால், ஏழை, எளிய மக்கள் மீது தனி அக்கறை செலுத்தியவர். அதனால்தான், ஆதரவற்ற மக்களுக்கு சேவை செய்த அன்னை தெரசா மீது அவருக்கு தனி அபிமானம்."

"இப்போது, உலகமெங்கும் கார்டினல்கள் என்கிற பதவி வகிக்கும் 117 குருமார்கள் இருக்கிறார்கள். அவர்கள் அனைவரும், மறைந்த போப் ஆண்டவரது இறுதிச் சடங்கில் கலந்து கொள்வதற்காக வாடிகனில் இருக்கிறார்கள். பொதுவாக எந்த ஒரு சாதாரண ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவரையும் போப் ஆண்டவராக தேர்ந்தெடுக்க விதிகள் அனுமதித்தாலும், பிஷப்களில் ஒருவரை எல்லா பிஷப்களும் ஒன்று கூடித் தேர்ந்தெடுப்பது தான் மரபு. போப் ஆண்டவராக தம்மைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று யாரும் பிரசாரம் செய்து ஆதரவு தேடக்கூடாது என்பது கட்டாயமான விதி.

போப் ஆண்டவர் உயிருடன் இருக்கும்போதே, தமது மரணத்தையடுத்து நடைபெற வேண்டிய சடங்குகளை

நடத்தி முடிக்கும் பொறுப்பை யாரிடம் ஒப்படைப்பது என்று முடிவு செய்து விடுவார். அதன்படி, நியமிக்கப்பட்டவர், மறைந்த போப் ஆண்டவரது இறுதிச் சடங்குகளை முடித்த கையோடு, (பதினைந்தாவது நாள்) புதிய போப் ஆண்டவர் தேர்தலை ஆரம்பித்து வைப்பார்.

தேவாலயத்துக்கு வெளியே ஆர்வமாகக் கூடியிருக்கும் மக்களுக்கு, தேவாலய புகைபோக்கி வழியே தகவல் அனுப்பப்படும். வாக்கெடுப்பில், யாருக்கும் பெரும்பான்மை கிடைக்காது போனால், அந்த வாக்குச் சீட்டுகளை, வைக்கோல் போன்றவற்றுடன் போட்டு, எரித்து, புகை போக்கியில் கரும்புகை வரவழைப்பார்கள். நாளுக்கு ஆறு சுற்று என்று வாக்கெடுப்பு தொடர்ந்து நடைபெறும். யாராவது ஒருவர் பாதிக்கு ஒரு வாக்கு அதிகம் பெற்று விட்டால், வாக்குச் சீட்டுகளுடன், சில ரசாயனப் பொருள்களையும் எரித்து, புகைபோக்கியில் வெண்புகை வரச் செய்வார்கள்.



• போப் ஆண்டவருடன் வின்சென்ட் சின்னதுரை

கடந்தமுறை, வெண்புகை சற்றே பழுப்பு நிறமாக இருந்து, பார்ப்பவர்களுக்கு சற்றே குழப்பத்தை ஏற்படுத்தியதால், இம்முறை, வெண்புகை வெளியேறும்போது, தேவாலய மணியும் ஒலிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. தேர்ந்தெடுக்கப்படும் பிஷப், புதுப் பெயர் சூட்டிக் கொண்டு, போப் ஆண்டவர் பதவியை ஏற்பார்.

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

**த**மிழ் பழைமைக்கும் பழைமை. புதுமைக்கும் புதுமை. கல்கியின் தமிழ், பழைமையும் புதுமையும் கலந்த இனிமை! நவீனம், தொழில்நுட்பம், நாகரிகம் என பல்வேறு அம்சங்களுடன், தரமும் குறையாத ஒரே இதழ் - நம் கல்கி.

- கணினி எழுத்தாளர் மா. ஆண்டோ பீட்டர்




படம் : ராஜன்



இனிய தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்
திருச்சி என்றாலே தெரியும்
மலைக்கோட்டை
சாரதாஸ் என்றாலே
அழகு துணிக் கோட்டை
சாரதா'ஸ்
சுபமுகூர்த்த பட்டுப்புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்
தன்பில்டிங்,
827, மவுண்ட் ரோடு,
சென்னை - 2.
போன் - 28521177
45, என்.எஸ்.பி. ரோடு,
திருச்சி - 2.
போன் - 2702077

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered
No. TN / PMG (CCR) 572 / 03 - 05* Licensed to post without prepayment under PMG's
Licence No. WPP 358 / 03 - 05* Registered as a Newspaper in Srilanka

